# மின்தமிழ் மேடை




## "இலங்கையில் தமிழ் மரபு அறக்கட்டளை"

தமிழ் மரபு அறக்கட்டளை (www.tamilheritage.org)
வெளியிடும் காலாண்டு மின்னிதழ்
**மின்தமிழ்மேடை - காட்சி: 16**
**ஜனவரி — 2019**




# 16

# மின்தமிழ் மேடை

காட்சி: 16

---

ஜனவரி - 2019

## *“இலங்கையில் தமிழ் மரபு அறக்கட்டளை”*




முன்னட்டைப் படம்: இவ்வாண்டு தமிழ் மரபு அறக்கட்டளை மேலும் விரிவாக்கம் கண்டது. இலங்கையின் யாழ்ப்பாணம், கொழும்பு, மலையகம் ஆகிய பகுதிகளுக்கு களப்பணி மேற்கொண்டு ஆய்வு நிகழ்த்தப்பட்டது. அதன் தொடர்ச்சியாக யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தில் தமிழ மரபு அறக்கட்டளையின் இலங்கை கிளை தொடக்கப்பட்டது.




தமிழ் மரபு அறக்கட்டளை வெளியீடு

http://www.tamilheritage.org/

இதழ் தொகுப்பு: தேமொழி

# தலையங்கம்: இலங்கையில் தமிழ் மரபு அறக்கட்டளை



வணக்கம்.

2018ம் ஆண்டு தமிழ் மரபு அறக்கட்டளையின் பயணத்தில் மேலும் ஒரு மைல்கல்லாக அமைந்தது இலங்கைக்கான நமது பயணம். நீண்ட நாள் திட்டமாக இருந்த இலங்கைக்கான பயணமும், களப்பணிகளும் தமிழ் மரபு அறக்கட்டளையின் கிளை இலங்கையில் உருவாக்கம் பெற தொடக்கப்புள்ளியாக அமைந்திருக்கின்றது.

இலங்கையில் யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தின் வரலாற்றுத் துறையும் தமிழ் மரபு அறக்கட்டளையும் இணைந்து நடத்திய செயலமர்வு யாழ் பல்கலைக்கழக விரிவுரைமண்டபத்தில் 29.10.2018 அன்று நிகழ்ந்தது. இந்த நிகழ்வில் தமிழ் மரபு அறக்கட்டளையின் கிளையை வரலாற்றுச் சிறப்புமிக்க யாழ் பல்கலைக்கழகத்தில் தொடக்கினோம். இந்த நிகழ்வில் துணைவேந்தரின் பிரதிநிதியாக வந்து வாழ்த்துரை வழங்கினார் சித்தமருத்துவத்துறையின் தலைவர் பேரா.மிகுந்தன். அவரோடு கலைப்பீடத்தின் பீடாதிபதி கலாநிதி கே.சுந்தர், யாழ் பல்கலைக்கழக வரலாற்றுத்துறைத் தலைவர் பேராசிரியர் புஷ்பரட்ணம், தமிழ் மரபு அறக்கட்டளை இலங்கை பொறுப்பாளர் ஆசிரியர்.வாலண்டீனா இளங்கோவன், முனைவர்.க.சுபாஷிணி, பேராசிரியர்.நா.கண்ணன், எழுத்தாளர் மதுமிதா மற்றும் பல்கலைக்கழக பேராசிரியர்களும் மாணவர்களும் இந்த நிகழ்வில் கலந்து சிறப்பித்தனர். இந்தப் பயணத்தின் போது இலங்கையின் யாழ்ப்பாணத்தின் பல்வேறு வரலாற்றுச் சிறப்புமிக்க பகுதிகளான யாழ் நூலகம், கோப்பாய் ஆசிரியர் பயிற்சி கல்லூரி, டச்சுக் கோட்டை, கந்தரோடை, நல்லூர் கந்தசுவாமி கோயில், கீரிமலை, சங்கமித்திரை முதன் முதலாக வந்திறங்கிய பகுதி என அறியப்படும் மாதகல், குறும்பசிட்டி, யாழ் நூலகம், சர்.பொன்.இராமநாதன் பெண்கள் கல்லூரி போன்ற பல பகுதிகளில் களப்பணியாற்றிப் பதிவுகள் சேகரிக்கப்பட்டுள்ளன. இவை அனைத்துமே தொடர்ச்சியாகத் தமிழ் மரபு அறக்கட்டளையின் இலங்கை மரபுரிமை சிறப்புப் பக்கத்தில் வெளியிடப்பட்டு வருகின்றன. அப்பதிவுகளை http://www.srilanka.tamilheritage.org/ எனும் பக்கத்தில் காணலாம்.

கி.பி 19ம் நூற்றாண்டின் ஆரம்பக் காலத்தில் தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்து இலங்கைக்கு வந்த தமிழ் மக்கள் இராமேஸ்வரம் வழியாக மரக்கலங்களில் பயணித்து பின்னர் மன்னார் வந்தடைந்து அங்கிருந்து கால் நடையாகவே மலையகம் வரை வந்திருக்கின்றனர். இது மிகக்கடினமான ஒரு பாதை. ஆயிரக்கணக்கான உயிரிழப்புக்கள் இதன் போது நிகழ்ந்திருக்கின்றன. அப்படி வந்த தமிழ் மக்கள் வந்து ஒன்று கூடிய முக்கிய இடமாக "மாத்தளை" கருதப்படுகின்றது.




மலையகத்தமிழர்களின் முக்கிய தொழில் தேயிலைத் தோட்டத்தைச் சார்ந்ததாகவே அமைகின்றது. இங்கு ஆண்களும் பெண்களும் சலிக்காது உழைக்கின்றனர். பெரும்பாலான தேயிலைத் தோட்டங்களின் உரிமையாளர்களாக ஆங்கிலேயர்களும், இந்தியர்களும், சிங்களவர்களும் இருக்கின்றனர். மலையகத்தமிழ் மக்களின் பொதுப்பிரச்சனையாக அமைவது அம்மக்களுக்குச் சொந்த வீடு இல்லாமையும், ஓய்வூதியச் சலுகைகள் ஏதும் இல்லாமையும், போதிய மருத்துவ வசதிகள் இல்லாமையும் எனலாம். இங்கு இஸ்லாமியர்கள் தமிழ் மக்களோடு சேர்ந்து வாழ்கின்றனர். சிங்களவர்கள், இஸ்லாமியர்கள், மலையகத் தமிழர்கள் அனைவரிடையே இயல்பான நட்புணர்வு வெளிப்படுகின்றது. தமிழ் பேசும், எழுதும் சிங்களவர்கள் சிலரைத் தோட்டங்களில் நேரடியாகக் கண்டு உரையாட முடிகின்றது. பெரும்பாலான தமிழ் மக்கள் சிங்கள மொழியும் பேசுகின்றனர். தமிழ் மக்கள் வழிபடும் தெய்வங்களாக, பிள்ளையார், மாரியம்மன், முருகன் ஆகிய தெய்வங்களின் கோயில்கள் அதிகமாக உள்ளன. யாழ்ப்பாணத்தில் ஊருக்கு ஊர் நூலகங்களைக் காண்கின்றோம். ஆனால் மலையகப் பகுதியில் நூலகங்களை அதிகம் காண முடியவில்லை. அடிப்படை வாழ்வாதாரப் பிரச்சனைகளே இங்கு அதிகமாக மக்களை வாட்டும் நிலை இருப்பதால் இந்த நிலையோ என எண்ணத் தோன்றுகிறது.



மலையகம் முழுமையுமே தூய்மையாக உள்ளது. தமிழக வகை உணவுகளை இங்கே கடைகளில் காண்கின்றோம். தமிழ்ப்பள்ளிகள் அனைத்துமே "வித்யாலயா" என்ற சமஸ்கிருத பெயருடனேயே வழக்கில் உள்ளன. தமிழகத்தில் 1950களின் காலகட்டத்து மணிப்பிரவாள நடைபோல பல சமஸ்கிருத பயன்பாடு இருப்பதை இலங்கையில் காண்கின்றோம். பேருந்து பயணங்கள் ஒரு கிராமத்திலிருந்து மற்றொரு கிராமத்திற்குச் செல்லும் முக்கிய

போக்கு வரத்துச் சாதனமாக உள்ளது. தோட்டத்தில் தேயிலைப் பறிக்கும் தொழிலில் தமிழ்ப்பெண்களே அதிகம் ஈடுபடுகின்றனர். கால்களில் அட்டை கடித்து துன்பப்படுவது என்பது அவர்களது வாழ்க்கையின் இயல்பான ஒன்றாகவே ஆகிவிட்டதால் இவ்வூழியர்கள் பலரது கால்விரல்கள் மிக மோசமான நிலையில் இருப்பதைக் காணலாம். தோட்டத்தொழிலாளர்களின் வாழ்க்கை மேம்பாடு அவர்களது கல்வி மேம்பாட்டினால் மட்டுமே சாத்தியப்படும்.

நீண்ட கால போரினால் இலங்கையில் தமிழர் மரபுரிமைச் சின்னங்கள் பல சேதப்படுத்தப்பட்ட சூழலைக் காண்கின்றோம். போருக்குப் பின்னரான மக்கள் சமூக நலன் மீட்டெடுப்பு என்பது நிகழ்கின்ற இதே வேளையில் தமிழர் மரபுரிமை பாதுகாப்பு என்ற கருத்தியலைப் புறந்தள்ளிவிடாது, அதற்குத் தகுந்த முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டியதும் அவசியமாகின்றது.

இலங்கையில் பௌத்தம் தமிழர்களுக்கு அந்நியப்பட்ட ஒரு சமயமல்ல. சிங்கள மொழி இலங்கையில் உருபெறுவதற்கு முன்னரே தமிழ் மக்கள் வழக்கில் இருந்த பண்பாட்டு அம்சங்களுள் பௌத்தத்திற்கு முக்கிய இடம் இருக்கின்றது என்பதை நினைவு கூற வேண்டியுள்ளது. இன்றைய சூழலில், மத ரீதியான பார்வை, சாதி ரீதியான பார்வை என்ற குறுகிய வட்டங்களை ஒதுக்கி விட்டு, பண்டைய இலங்கைத் தமிழர் வரலாற்றுப் பின்புலத்தை ஆராய வேண்டியதும், தெளிவுடன் பண்பாட்டுக் கூறுகளை அணுக வேண்டியதுமான அவசியம் உள்ளது.

இலங்கைத் தமிழர்கள் உலகம் முழுதும் வாழும் நூற்றாண்டு இது. உலகத் தமிழர்களாக அனைவரும் இணைந்து இலங்கைத் தமிழர் மரபுரிமை பாதுகாப்பிற்கும் ஆவணப்படுத்தல் தொடர்பான முயற்சிக்கும் இணைந்து செயல்படுவோம்.

உலக மக்கள் அனைவருக்கும் தைத்திருநாள் நல்வாழ்த்துகள்!

அன்புடன்
***முனைவர். க. சுபாஷிணி***
தலைவர், தமிழ் மரபு அறக்கட்டளை

இந்த இதழில் ...

## *மின்தமிழ்மேடை - காட்சி: 16; ஜனவரி - 2019*

# *“இலங்கையில் தமிழ் மரபு அறக்கட்டளை”*

*(மின்தமிழில் அக்டோபர் 16, 2018 – ஜனவரி 15 வரை பதிவான படைப்புகளின் தொகுப்பு)*

**உள்ளடக்கம்** **பக்கம்**

**உள்ளடக்கம்** **பக்கம்**

## 1. “ஐ” எழுத்தை முதன் முதலாகக் கொண்ட திருநாதர் குன்று வட்டெழுத்துக் கல்வெட்டு

***— துரை. சுந்தரம்***

விழுப்புரம் மாவட்டம் செஞ்சி அருகிலுள்ள திருநாதர் குன்றில் பாறைக் கல்வெட்டு வட்டெழுத்தால் எழுதப்பட்ட கல்வெட்டு. கல்வெட்டு அறிஞர்கள் பலரும் சிறப்பாகக் குறிப்பிடுகின்ற ஒரு கல்வெட்டு. தமிழ்த் தொல்லெழுத்தான ‘தமிழி’’ எழுத்தின் வடிவத்திலிருந்து வளர்ந்த வட்டெழுத்தின் முதல் கட்ட எழுத்து. ’’தமிழி’’ எழுத்து முறையில் காணப்படாத ’’ஐ’’ எழுத்தை முதன் முதலாகக் கொண்ட ஒரு கல்வெட்டு. திருச்சி பார்த்தி என்பவர் முகநூலில் இக்கல்வெட்டுப்படத்தைப் பதிவு செய்திருந்தார். இக்கல்வெட்டின் படம் இதற்கு முன்னர் சில நூல்களில் பார்த்திருக்கிறேன். ஆனால், நேரடியாகக் கல்வெட்டு அமைந்திருக்கும் இடத்தில் எழுத்துகளின் மீது வெள்ளைப்பொடி பூசித் தெளிவாக எழுத்துகள் தெரியும் நிலையில் இந்தப் படம் மிக அருமையாக இருந்தது. கல்வெட்டின் காலம் கி.பி. 5-6 -ஆம் நூற்றாண்டு.

மேலே குறித்தவாறு, முதன் முதலில் ‘‘ஐ’’ எழுத்தின் வடிவத்தை இக்கல்வெட்டில் காணலாம். ஒரு சூலம் போன்ற வடிவில் அமைந்துள்ள எழுத்து. திருச்சி பார்த்தியின் கல்வெட்டுப்படம் கீழே:



திருநாதர் குன்று-வட்டெழுத்துக் கல்வெட்டு - முதல் எழுத்து “ஐ”

**கல்வெட்டின் பாடம் :**

1 ஐம்பத்தேழன
2 சனந்நோற்ற
3 சந்திர நந்தி ஆ
4 சிரிகரு நிசீதிகை

விளக்கம் :
கல்வெட்டுப் பாடத்தைக் கீழ் வருமாறு பிரித்துப் பொருள் கொள்ளவேண்டும்.

1 ஐம்பத்து ஏழு அனசனம் நோற்ற
2 சந்திர நந்தி ஆசிரிகரு
3 நிசீதிகை

திருநாதர் குன்றில் இயங்கிவந்த சமணப்பள்ளியின் ஆசிரியருள் ஒருவரான சந்திர நந்தி என்னும் துறவியார் ஐம்பத்தேழு நாள்கள் உண்ணா நோன்பிருந்து உயிர் நீத்த இடம் என்னும் செய்தியை இக்கல்வெட்டு

*கூறுகிறது. அனசனம் என்னும் சொல் உண்ணாதிருத்தலைக் குறித்தது. அசனம் என்னும் சமற்கிருதச் சொல் உண்ணுதலைக்குறிக்கும். அதன் எதிர்ப்பொருளைக் குறிக்க "அன்" என்னும் முன்னொட்டு சேர்க்கப்படல் சமற்கிருத மொழி இலக்கண மரபு. எனவே, 'அன்"+'அசனம்" என்பது "அனசனம்" என்றாயிற்று.*

*வட்டெழுத்து வளர்ச்சியுற்று இரண்டாம் கட்டத்தை அடையும்போது, 'ஐ" எழுத்தின் வடிவம் மாறவில்லை. மற்ற எழுத்துகள் பெரும் மாற்றத்தைக் கொண்டுள்ளன. மேற்படிக் கல்வெட்டு இரண்டாம் கட்ட எழுத்து வடிவத்தில் எழுதப்பட்டால் எவ்வாறிருக்கும் என்பதைக் கீழுள்ள கல்வெட்டுப் படம் காட்டும்.*



கி.பி. 8-9 -ஆம் நூற்றாண்டு வட்டெழுத்து வடிவம்

*பின் குறிப்பு :*

*வட்டெழுத்தில் அமைந்துள்ள இக்கல்வெட்டைத் தமிழ்நாடு சுற்றுலாத்துறை இணையத்தில் வெளியிட்டுள்ள ஒரு பதிவில், தமிழ் பிராமி எழுத்தில் எழுதியுள்ளதாகப் பிழையாகக் குறித்துள்ளது. துறையினர் தகுந்த திருத்தத்தைச் செய்யவேண்டும். தமிழ்நாடு சுற்றுலாத்துறையின் பதிவைக் கீழ்க்கண்ட சுட்டி வழி பார்க்கலாம்.*
*https://tamilnadu-favtourism.blogspot.com/2015/12/theerthangarargul-thirunathar-kundru.html*

*இப்பதிவைப் பார்த்துத்தானோ என்னவோ, வேலுதரன் அவர்களும் தம் இணைய வலைப்பூவில் மேற்படிக் கல்வெட்டு பிராமியில் எழுதப்பட்டுள்ளது எனப் பிழையாகக் குறிப்பிடுகிறார். அவரது பதிவைக் கீழ்க்கண்ட சுட்டி வழி பார்க்கலாம்.*
*https://veludharan.blogspot.com/2015/02/reach-heritage-tour-to-thirunathar.html*

*தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.*
*doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.*

## 2. சங்கரன்கோயில் இலந்தைக்குளம் – மடைக்கல்வெட்டு

***— துரை.சுந்தரம்***

***முன்னுரை:***

*அண்மையில், இணைய அன்பர் சேஷாத்திரி அவர்கள் வட்டெழுத்தில் அமைந்த கல்வெட்டு ஒன்றின் ஒளிப்படத்தை அனுப்பி கல்வெட்டு என்ன கூறுகிறது எனக்கேட்டிருந்தார். அந்தப்படத்தில், பின்னணியாக ஏரி அல்லது குளம் ஒன்று காட்சியளித்தது. முன்னணியில், கல்லால் கட்டுவிக்கப்பட்ட ஒரு தூம்பு அல்லது மடையின் தோற்றம். இரு கல் தூண்களும் அவற்றின் இடையே கிடந்த நிலையில் ஒரு கல்லும் கொண்ட அமைப்பு. மூன்று கற்களிலும் எழுத்துகள். வட்டெழுத்து வகை எழுத்து. பார்வைக்கு அழகு. கி.பி. 8-9 –ஆம் நூற்றாண்டுக் காலத்தை ஒட்டிய எழுத்து வடிவமாகத் தோன்றியது.*

*படிக்கும் ஆர்வம் எழுந்தாலும், அக்கல்வெட்டுக் கிடைத்த பகுதியைத் தெரிந்துகொண்டால், கல்வெட்டைப் படிக்கும்போது பாடத்தின் சூழலைக்கொண்டு (CONTEXT) கல்வெட்டுச் செய்தியை எளிதில் அறியமுடியும் என்னும் எண்ணத்தில் மேற்கொண்டு கல்வெட்டைப் பற்றிய பின்னணியை அறிந்து தெரிவிக்குமாறு கேட்டிருந்தேன், நண்பரும், தேடுதலில் இறங்கிக் கல்வெட்டு எங்குக் கிடைத்தது, அதில் கூறப்பட்ட செய்தி என்ன என்று சுட்டுகின்ற நாளிதழ்ச் செய்தியை அனுப்பிவைத்தார்.*

சங்கரன்கோவில் அருகே

**ஜமீன் இலந்தைகுளம் மடை தூணை தொல்லியல் துறையினர் ஆய்வு**

சங்கரன்கோவில், செப். 26: சங்கரன்கோவில் அருகே ஜமீன் இலந்தைகுளத்தில் பழமையான கல்வெட்டை தொல்லியல் துறையினர் ஆய்வு மேற்கொண்டனர்.

இந்தியாவின் தொல்பொருள் ஆய்வுத்துறையானது நாட்டில் அமைந்துள்ள தொல்லியல் சின்னங்களை ஆவணப்படுத்தும் பணியை மேற்கொண்டு வருகிறது. இதன் ஒரு பகுதியாக நெல்லை மாவட்டம், சங்கரன்கோவில் தாலுகா, ஜமீன் இலந்தைகுளத்தில் உள்ள குளத்து கல்மடைத்தூணில் ஆயிரம் ஆண்டுகள் பழமையான தமிழ் வட்டெழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளதை தொல்லியல் குழுவினர் ஆய்வு செய்தனர்.

தொல்லியல் ஆய்வாளர் பிரசன்னா, ஆராய்ச்சி மாணவர் அறிவுசெல்வன் ஆகியோர் குளத்து கல்மடைத்தூணில் பொறிக்கப்பட்டுள்ள தமிழ் வட்டெழுத்துக்களை ஆய்வு செய்தனர். ஆய்வில் இந்த கல்மடைதூண் பாண்டிய மன்னர்களின் ஒருவரான சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் என்ற மன்னனால் கி.பி 963ல் எழுப்பப்பட்டது தெரிய வந்தது.

இக்கல்வெட்டில் உள்ள செய்தியானது 'ஆலவாய் சீலம்' என்பவன் பெயரால் ஆன்மா நாட்டு பிரம்மதேயம், தேவியம் சதுர்வேதி மங்கலத்து பிராமணன் மாதேவன் சோலை அம்பலவாணால் மடைத்தூண் செய்யப்பட்டதாக அதில் உள்ளது.

இக்கல்வெட்டில் செய்தியானது முதலில் உரைநடையில் கூறப்பட்டு பின் செய்யுள் வடிவிலும் உள்ளதாக தொல்லியல் ஆய்வாளர் பிரசன்னா தெரிவித்தார்.

*கல்வெட்டு எழுத்துகள், மடைத்தூணின் கிடைமட்டக் கல் ஒன்று, நிலைக்கற்கள் இரண்டு என மூன்று பகுதிகளில் எழுதப்பட்டுள்ளன. கல்வெட்டின் பாடம் – நான் படித்த அளவில் – கீழ்வருமாறு:*

**கல்வெட்டின் பாடம்: கிடைமட்டக்கல்:**

*1 சோழன்றலைகொண்ட கோவீரபாண்டியற்கு யாண்டு பதினஞ்சு*

*2 இதனெதிர் இரண்டு இவ்வாண்டு நெச்சுற நாட்டு பிரமதேயம்*

*3 நீலி நல்லூர் நம்பிராட்டியார் செம்பியன் கிழாலடிகள் தி*

*4 (ரு)வடிக்கா(*) ( ஊர்)(**)ச்செல்கின்ற அள்ளூர்க் குளக்கீழ்க் க(லா)*

*5 வகப்பாடி ஆலவாசீலத்துக்காய் இவ்வூர் தலைச்செல்கின்[ற]*

**கல்வெட்டின் பாடம்: இடப்புற நிலைக்கல்:**

*ஸ்வஸ்திஸ்ரீ*

*1 சோலை திருப்*

*2 பாச்(சே)ற்றி*

*3 ( ன்) பொன்மறை*

*4 யோன் (தெ)ன் (க)*

*5 லவை ஆலவா*

*6 ய் சிலம்ப*

*7 ன் பியரால்*

*8 நீலிந[ல்]லூ*

*9 ர் ஏரிப்பெ*

*10 ருமடையைக்*

*11 கல்லால் நி*

*12 லை அமைத்தா*

*13 ன் சிரி றங்*

*14 க (முவளா)ச்*

*15 செய்து*

**வலப்புற நிலைக்கல்: கல்வெட்டின் பாடம்:**

*1 ஆண்மர் நா*

*2 ட்டு தேவதா*

*3 னப்பிர*

*4 மதேயம்*

*5 தேவியம்ம*

*6 ச்சருப்பே*

*7 தி மங்கல*

*8 த்து சிவ*

*9 ப்ராஹ்மண*

*10 ன் மாதேவ*

*11 ஞ்சோலை அ*

*12 ம்பலவ*

*13 னில் நிலை*

*14 கால் ஆல*

*15 வாய் சீல*

*16 த்தின் பேரா*

*17 ல் நிறுத்து*

*18 விச்ச நிலை*

***கல்வெட்டுச் செய்திகள்:***
***மங்கலத்தொடக்கம்:***
*கல்வெட்டின் மங்கலத் தொடக்கச் சொல்லான ''ஸ்வஸ்திஸ்ரீ'' தனித்துப் பொறிக்கப்பட்டுள்ளது. இந்த அமைப்பு ஓலைச் சுவடிகளில் எழுதும் முறையை நினைவூட்டுகிறது. முதல் மூன்று வரிகளில், கல்வெட்டு எழுதப்பெற்ற அரசன் பெயர், அவனது ஆட்சியாண்டு, கல்வெட்டுத் தொடர்பான அமைவிடம் (நாட்டுப் பிரிவு, ஊர்ப்பெயர்) குறிக்கப்பெறுகிறது.*

***அரசன் பெயர்:***
*அரசன் பெயர் "சோழன்றலைகொண்ட கோவீரபாண்டியன்" என உள்ளது. இவன் சடையவர்மன் பராந்தக வீரநாராயணனின் பேரனும், இராசசிம்மனின் மகனுமான வீரபாண்டியன். இவனது ஆட்சிக்காலம் கி.பி. 946-966. இவன் பாண்டி நாட்டுக்கு ஏற்றம் புரிந்தவர்களுள் ஒருவன்; பராந்தக சோழனின் ஆட்சியில் சோழப்பேரரசின் ஆட்சிக்குட்பட்டிருந்த பாண்டி நாட்டுப்பகுதிகளை மீட்டுக்கொண்டவன் என்றும், இவன் கொண்டது சோழ இளவரசருள் ஒருவனது தலையே போலும் என்றும் கே.கே. பிள்ளை குறிப்பிடுகிறார். முதலாம் இராசராசனின் தமையனாகிய ஆதித்த கரிகாலன் வீரபாண்டியனை வென்று அவன் முடியைக்கொண்டிருக்கவேண்டும் என்று சோழர் கல்வெட்டுகளிலிருந்து விளங்குகிறது. தென்னிந்தியக் கல்வெட்டுகள் ஐந்தாம் தொகுதியில், நெல்லை, நெல்லையப்பர் கோயிலில் வீரபாண்டியனின் ஐந்து கல்வெட்டுகள் (க.வெ.எண்: 451-455) காணப்படுகின்றன. இவை அனைத்திலும் ''சோழன்றலை கொண்ட வீரபாண்டியன்'' என்னும் சிறப்புப் பெயர் உள்ளது.*

***அரசனின் ஆட்சியாண்டு:***
*அரசனின் ஆட்சியாண்டு, யாண்டு பதினஞ்சு இதனெதிர் இரண்டு என்று குறிப்பிடப்படுகிறது. அதாவது 15+2 ; 17-ஆம் ஆண்டு. கி.பி. 963.*

***நாட்டுப்பிரிவு:***
*கல்வெட்டில் நெச்சுற நாடு, ஆண்மர் நாடு ஆகிய இரண்டு நாட்டுப்பெயர்கள் குறிக்கப்பெறுகின்றன. "இடைக்காலத் தமிழ்நாட்டில் நாடுகளும் ஊர்களும்" என்னும் தலைப்பில் தொல்லியல் பேராசிரியர் எ.சுப்பராயலு அவர்கள் தொகுத்த நூலில் நெச்சுற நாடும், ஆண்மர் நாடும் குறிக்கப்பட்டுள்ளன. நெச்சுற நாடு தற்போதைய சங்கரன்கோயில் பகுதியாகும். ஆண்மர் நாடு, தற்போதைய இராஜபாளையம் பகுதியாகலாம். மேற்படி நூலில், நெச்சுற நாட்டுப்பிரிவில் நெச்சுறம், ஊற்றத்தூர், நீலிநல்லூர் ஆகிய ஊர்கள் காட்டப்பெற்றுள்ளன. நமது கல்வெட்டிலும், நீலிநல்லூர் சுட்டப்பெறுகிறது. இவ்வூர் ஒரு பிரமதேயமாக - பிராமண ஊராக – இருந்துள்ளது. கல்வெட்டில் நீலிநல்லூர் என்னும் ஊர்ப்பெயரை அடுத்து அரசியின் பெயர் சுட்டுகின்ற "நம்பிராட்டியார் செம்பியன் கிழானடிகள் திருவடிக்கா" என்னும் தொடர் அமைகின்றதால் அரசியின் பெயரால் ஒரு வாய்க்கால் நீலிநல்லூர் ஊர்வழி சென்றிருக்கக் கூடும் என்று கருத வாய்ப்புண்டு. இக்கருத்துக்கேற்ப, கல்வெட்டிலும் ''செல்கின்ற'' என்னும் தொடர் உள்ளது. அரசன், அரசி ஆகியோர் பெயரில் வதி, வாய்க்கால், ஆறு ஆகிய பெயர்கள் கல்வெட்டுகளில் மிகுதியாகக் காணக்கிடைக்கின்றன. ''கிழானடிகள்'' என்னும் சொல் பிழையாகக் கல்வெட்டில் "கிழாலடிகள்" என உள்ளது. கல்வெட்டில் அள்ளூர்க்குளம் பற்றிய குறிப்புள்ளது. கிடைமட்டக்கல்லின் ஐந்தாம் வரியில் ''ஆலவாசீலத்துக்காய் இவ்வூர்*

*தலைச்செல்கின்[ற"   என்றிருப்பதால், நீலிநல்லூர் வழியே ஒரு வாய்க்கால் சென்றதாகவும்,  அது ஆலவா(ய்)சீலம் என்னும் ஊரில் முடிவதாகவும் கருத இடமளிக்கிறது.*

*அடுத்து, ஆண்மர் நாட்டுப்பிரிவில் சேற்றூர், தேவியம்மச் சதுர்வேதி மங்கலம், கொல்லம் கொண்டான், சோழகுலாந்தகபுரம், புனல் வேலி ஆகிய ஊர்கள் இருந்தன என மேற்படி நூல் குறிக்கிறது. நமது கல்வெட்டிலும் தேவியம்மச் சதுர்வேதி மங்கலம் குறிப்பிடப்படுகிறது. கல்வெட்டில் "சருப்பேதி மங்கலம்" என்றுள்ளது. சதுர்வேதி, சருப்பேதி ஆகிய இருவகையான வழக்கும் கல்வெட்டுகளில் பயில்கிறது. இந்தத் தேவியம்மச் சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்த பிராமணன் மாதேவன் சோலை அம்பலவன் என்பவன் மடையின் நிலையைச் செய்தளித்தான் என்று கல்வெட்டு கூறுகிறது. ஆலவாய்சீலத்தின் பேரால் இந்தக் கொடை அளிக்கப்பட்டது என்னும் குறிப்பு, ஆலவாய் சீலம் என்பது ஊர்ப்பெயராகவும், ஆள் பெயராகவும் வந்துள்ளதை உணர்த்துகிறது.*

*கல்வெட்டின் இன்னொரு பகுதி, சோலை திருப்பாச்சேறு என்னும் ஊரைச் சேர்ந்த பொன்மறையோன் என்பவன், தென்கலவையைச் சேர்ந்த ஆலவாய் சிலம்பன் பெயரால் நீலிநல்லூர் ஏரிக்குப் பெரு மடையை அமைத்தான் என்று கூறுவதாகவும்,  மாறாகத் திருப்பாச்சேற்றுப் பொன்மறையோனான ஆலவாய் சிலம்பன் பெயரால் ஸ்ரீரங்க மூவேளான் என்பவன் பெருமடையை அமைத்தான் என்று கூறுவதாகவும் இரு வகையாகப் பொருள் கொள்ளுமாறு உள்ளது. வட்டெழுத்துக் கல்வெட்டுகளைப் படிக்கையில் எழுத்துகள் ஏற்படுத்தும் மயக்கம் பல்வேறு பாடபேதங்களைத் தருவது வழக்கம். "ஸ்ரீரங்க(ம்)" என்பது "சிரி றங்க(ம்)"  எனக் கல்வெட்டில் உள்ளது.*

***முடிவுரை:***

*தொல்லியல் துறையினரால் படிக்கப்பட்ட  கல்வெட்டின் மிகச் சரியான பாடமும், துறையினர் கொண்டுள்ள சரியான கல்வெட்டுச் செய்தியும் தெரியவந்தால்தான் நமது யூகங்கள்  தெளிவாகும். நாளிதழ்ச் செய்தியில் காணப்படும் "ஆன்மா நாட்டு",  "தேவியம் சதுர்வேதி மங்கலம்" ,  "அம்பலவாணால்"  ஆகிய சொற்றொடர்கள் பிழையானவை.*

*தொடர்பு:  துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.*
*doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.*

# 3. கோகர்ணம் கோயில் கல்வெட்டு

## — துரை.சுந்தரம்

**கோகர்ணம் சிவன் கோயில் கல்வெட்டு, புதுக்கோட்டை**



திருக்கோகர்ணம் கோயில் இறைவனின் திரு முன்பு அதாவது கருவறையிலேயே நந்தா விளக்கு எரிக்க நிலம் கொடையாகக் கொடுக்கப்பட்ட செய்தியைக் கல்வெட்டு தெரிவிக்கிறது. இக்கொடைத் தன்மம் ஹொய்சள அரசன் சோமேசுவரனின் நன்மைக்காகவும், அவனுடைய அன்னை சேர மஹா தேவியின் நன்மைக்காகவும் நிறைவேற்றப்பட்டது எனலாம். ஹ<->ப மாற்றம் தமிழ், கன்னட மொழிகளில் இயல்பு என்பது இக்கல்வெட்டில் "போசள" என்னும் சொல் வழி அறிகிறோம்.

**கல்வெட்டின் பாடம்:**

*1 (ஸ்வஸ்தி) ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ (இரா)...*
*2 தேவற்கு யாண்டு ... தோரை சமுத்தி(ர)...*
*3 போசள வீர சீ நாரசிங்க தேவர் மகன் ..*
*4 (ச்வர) தேவர் மாதா சேர மஹா தேவி ...*
*5 ள்ளைகளில் (வீர)ச் சயனமாதா .... யிக்கு..*
*6 ....இதேவற்கும் நன்றாகத் ....*
*7 டையார் திருக்கோகர்ணம் உடைய ..*
*8 (தே)வர்க்கு முன்பு நித்தற்... (வருகிற)..*
*9 தா விளக்குச் செல்லவும் உத்தர...*
*10 (த்து முதற்தியதி) முதல் ....*
*11 நாள் ஒன்றுக்கு இரு நாழி ...*
*12 மஞ்செல்லக்கடவதாக இவ்வூர்ச்*
*13 கொண்டு விட்ட நிலம் ஆக ..*
*14 (நா)ன்கெல்லை உள்பட்ட நிலத்தில்..*
*15 ....ச் செம்பாதியும் புன்செய் ...*
*16 ....செம்பாதிக்கும் வி(லை)...*
*17 ...இக்கோயிற் சபையார் ...*
*18 ..ண்டுச் சந்திராதித்தவற் செல்ல...*
*19 (இ)த்தன்மம் .......*
*20 (ற)லை மேலன.*

*போசளரின் தலை நகர் துவார சமுத்திரம் இக்கல்வெட்டில் தோரை சமுத்திரம் எனக்குறிப்பிடப்படுகிறது. இறைவன் பெயர் திருக்கோகர்ணமுடைய (நாயனார்) என்றழைக்கப்படுகிறார். கொடை நிலம் நன்செய், புன்செய் இரண்டும் சேர்ந்த நிலம் ஆகலாம். இந்த தன்மத்தைக் காக்கின்றவர் பாதம் என் தலை மேலன என்று கொடையாளி சொல்லும் குறிப்பும் கல்வெட்டில் உள்ளது. கல்வெட்டின் காலம் கி.பி. 13-ஆம் நூற்றாண்டு.*

*நன்றி- படம் உதவி: மயிலை நூ.தா.லோ.சு.*

*தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.*
*doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.*

# 4. உத்தம சோழன் செப்பேடு

**— துரை.சுந்தரம்**

***முன்னுரை:***

*தொல்லியல் அறிஞர் ச.கிருஷ்ணமூர்த்தி அவர்கள், தமிழ், வரலாறு ஆகிய இரு துறைகளிலும் புலமையுடையவர். தொல்லியல் துறையில் அலுவலராகப் பணி நிறைவு செய்தவர். செப்பேடுகளை விரிவாக ஆய்ந்து எழுதுவதில் வல்லவர். அவருடைய சில நூல்கள் என்னிடம் உண்டு. அண்மையில், அவருடைய நூலொன்றினைப் படித்துக்கொண்டிருந்தேன். உத்தம சோழனின் செப்பேடுகள் பற்றிய நூல். "காஞ்சிபுரம் உலகளந்த பெருமாள் கோயில் செப்பேடுகளும் கல்வெட்டுகளும்" என்னும் தலைப்பிட்டது. மதுராந்தகன் என்னும் பெயர்கொண்ட உத்தம சோழன், காஞ்சி உலகளந்த பெருமாள் கோயில் வழிபாட்டுக்கு வழங்கிய நிவந்தமே இச்செப்பேடு. இச்செப்பேட்டினையும், இச்செப்பேடு வாயிலாக அறியவரும் வரலாற்றுச் செய்திகளையும் விரிவாக எடுத்துரைக்கின்றார் ஆசிரியர். தமிழகத்தின் கோயில்கள்தாம் எத்துணை வரலாற்றுப் பெட்டகங்களைத் தம்முள் பொதித்து வைத்துள்ளன என்பதை நினைக்கையில் பெரும் வியப்பு எழுகிறது. எத்தனை கோயில்கள்! எத்தனை கல்வெட்டுகள்! அனைத்தையும் அறிந்துகொள்ள எவ்வளவு காலம் நமக்குத் தேவைப்படும்? இந்த இடத்தில், தொல்லியல் அறிஞர் ஹுல்ட்ஸ் அவர்கள் (Dr. E. HULTZSCH) கூறியது நினைவுக்கு வருகிறது. இந்தியத் தொல்லியல் ஆய்வுத் துறையின் 1891-ஆம் ஆண்டுக்குரிய ஆண்டறிக்கையில்,*

> *"மதராஸ் பிரசிடென்சியின்கீழ் எண்ணற்ற பெருங்கோயில்கள் - இந்தியாவின் பிற பகுதிகளில் காணவியலாதன - உள்ளன; அவற்றின் கலை வடிவங்கள் பெருஞ்செல்வங்கள். டாக்டர் ஃபெர்குசன் (Dr. FERGUSSON) சிறப்பாகக் குறிப்பிடுகின்ற சீரங்கம், சிதம்பரம், நெல்லை, காஞ்சி, தஞ்சை, மதுரை போன்ற பல கோயில்கள் இன்னும் ஆய்வு செய்யப்படாமல் உள்ளவை. இப்பிரசிடென்சியின் விரிந்த நிலப்பரப்பில் பரவிக்கிடக்கும் கோயில்களைத் தற்போதுள்ள பணியாளர்களைக் கொண்டு ஆய்வு செய்ய எவ்வளவு காலம் தேவைப்படும் எனக் கூறவியலாது. ஒரு பத்தாண்டுக்காலம் ஆகலாம். மிகப்பெருங் கோயில்களில் ஒன்றான இராமேசுவரத்தை மட்டும் முற்றாக ஆய்வு செய்ய இரண்டு மாதங்களுக்கு மேல் ஆகும். கிருஷ்ணா மாவட்டத்தில், காலத்தால் முற்பட்ட பௌத்தச் சிற்பங்களையும், கல்வெட்டுகளையும் கொண்டுள்ள மேடுகளை ஆய்வு செய்ய மட்டுமே பல்லாண்டுகள் ஆகக்கூடும்."*

என்று குறிப்பிடுவது கருதத்தக்கது. அவர் இக்கருத்தைச் சொல்லுகையில், தஞ்சை, மதுரை, வேலூர், இராமேசுவரம் ஆகிய கோயில்கள் ஆய்வு செய்யப்பட்டுவிட்டன என்பதையும் குறிப்பிடுகிறார். செப்பேடுகள், கல்வெட்டுகள் வாயிலாகத் தெரிந்துகொள்ள, பல்வேறு அறிஞர்களின் பல்வேறு நூல்கள் துணை செய்கின்றன. இவற்றால்தாம், வரலாற்றுச் செய்திகள், வரலாற்றில் ஆர்வமுடையவர்க்குப் பரவலாகச் சென்றடைகின்றன. இவ்வாறு

*தெரிந்துகொண்டவற்றை இன்னும் பலருக்கு எட்டவைக்கும் முயற்சியாகவே என் கட்டுரைப் பணியைக் கருதுகிறேன். ச.கிருஷ்ணமூர்த்தி அவர்களின் நூலின் அட்டைப் பகுதியில் இரண்டு ஒளிப்படங்கள் தெளிவாக இருந்தன. இவை செப்பேட்டின் இரு பக்கங்களின் படங்கள். அவற்றில் உள்ள எழுத்துப் பொறிப்புகள், இராசராசனின் தஞ்சைக்கோயில் கல்வெட்டு எழுத்துகளின் வடிவ அழகுக்கும் நேர்த்திக்கும் முன்னோடியாக அமைந்துள்ளதைப் பார்க்கையில், அவற்றின் பாடத்தோடு நூலாசிரியரின் ஆய்வுக் கருத்துகளையும் பகிர்ந்து கொள்ள எழுந்த ஆவலைத் தடுக்க இயலவில்லை. அதன் பகிர்வு இங்கே.*

***செப்பேட்டின் அமைப்பு:***

*தற்போது, சென்னை எழுமூர் அருங்காட்சியகத்தில் உள்ள இச்செப்பேட்டுத் தொகுதியில் ஐந்து ஏடுகளே உள்ளன. ஏடுகளின் இடப்பக்க மையத்தில் உள்ள துளைகள் வழியே ஒரு வளையத்தால் பிணைக்கப்பட்டுள்ளன. வளையத்தில் சோழர் இலச்சினை உள்ளது. மொத்தம் நூற்று இருபத்தொரு வரிகள்; முதல் பன்னிரண்டு வரிகள் கிரந்த எழுத்துகள்; வடமொழி. மற்றவை தமிழ் எழுத்து; தமிழ் மொழி. தொடக்கத்தில் கிரந்தப்பகுதியில் சில ஏடுகளும், இறுதியில் ஒரு தமிழ் ஏடும் இல்லாததால் உத்தம சோழனின் மெய்க்கீர்த்தியை அறிய இயலவில்லை.*

***செப்பேட்டின் காலம்:***

*உத்தம சோழனுடைய பதினாறாம் ஆட்சியாண்டில், கி.பி. 985-86 –ஆம் ஆண்டில் செப்பேடு வெளியிடப்பட்டது.*

***செப்பேடு வெளியிட்ட இடம்:***

*காஞ்சியில் இராசராசனின் தமையன் கரிகாலன் ஓர் அரண்மனை கட்டுவித்ததும், அந்த அரண்மனையில் சுந்தர சோழன் இறந்துபோனதும் அறியப்பட்ட செய்திகள். அந்த அரண்மனையில், சித்திர மண்டபம் என்னும் ஒரு மண்டபத்தில் அரசன் அமர்ந்திருந்தபோது செப்பேட்டுக்கான நிவந்த ஆணை வெளியிடப்படுகிறது. இதே சித்திர மண்டபத்தில், முதலாம் இராசேந்திரன் எசாலம் செப்பேட்டினை வெளியிட்டான் என்பது குறிப்பிடத்தக்கது. காஞ்சி அரண்மனை, செப்பேட்டில், "கச்சிப்பேட்டுக் கோயில்" எனக் குறிப்பிடப்படுகிறது. கோயில் என்பது அரச அரண்மனையைக் குறிக்கும். (இறைவனின் கோயில் ஸ்ரீகோயில் என வழங்கும்). காஞ்சி என்பது பண்டு "கச்சிப்பேடு" என்றே வழங்கியதை நோக்குக. அப்பெயரையும் சுருக்கி "கச்சி" என்றழைப்பதும் வழக்கமாயுள்ளது. கச்சி என்னும் பெயர், காலப்போக்கில் கஞ்சி எனவும், பின்னர் காஞ்சி எனவும் மருவியிருக்கக் கூடும். கோட்டையோடு கூடிய நகரமாதலால், பல்லவர் காலத்தில் காஞ்சிபுரம் என வழங்கியிருக்கலாம். "கச்சிப்பேடு" என்னும் ஊர்ப்பெயரில் பின்னொட்டாக வருகின்ற "பேடு" என்னும் சொல் கருதத்தக்கது. பேடு என்னும் இச்சொல், பல ஊர்களின் பெயர்களில் உள்ளதைக் காணலாம். கோயம்பேடு, மப்பேடு, தொழுப்பேடு என்று சில ஊர்ப்பெயர்களை எடுத்துக்காட்டலாம். எழுத்துப்பொறிப்புடன் கூடிய சங்க காலத்து நடுகல்லான புலிமான் கோம்பைக் கல்லில் "கல்பேடு" என்னும் ஊர் குறிப்பிடப்படுவதாகக் கருதப்படுகிறது.*

*செப்பேட்டுத் தொகுதியில் இரண்டு ஏடுகளின் ஒளிப்படங்கள் முன்னரே குறிப்பிட்டவாறு நூலில் வெளியிடப்பட்டுள்ளன. படங்கள் தெளிவாகப் பதிவாகியுள்ளன. அவற்றின் படங்களும், பாடங்களும் கீழே தரப்பட்டுள்ளன.*



*முதல் படம் – ஏடு-2 ; பக்கம் – 2 ; வரிகள் : 37-48.*

***முதல் படம் – ஏடு-2 ; பக்கம் – 2 ; வரிகள் : 37-48.***

***பாடம்:***

*37 ட்டை நாளைக்கிடக்கடவ பொலிசைப்பொன் கழஞ்சே நாலு மஞ்சாடியும் நி*
*38 வந்தஞ்செய்(த)படி திருவமிர்து மூன்று ஸந்திக்கு நெல் முக்குறுணி அறுநாழியு*
*39 ம் கறியமுது இரண்டுக்கு மூன்று ஸந்திக்கு நெய் நானாழியும் நெய்யமுது நிசதம்*
*40 உழக்கினுக்கு நெல் ஐஞ்ஞாழியும் தயிரமுது போது உரியாக மூன்று ஸந்திக்கும் (த)*
*41 யிரமுது நாழி உரிக்கு நெல் முன்னாழியும் அடைக்காயமுது மூன்று ஸந்திக்கு*
*42 நெல் முன்னாழியும் விறகினுக்கு நெல் இரு நாழியும் ஆராதிக்கும்*
*43 வேதப்ராஹ்மணன் ஒருவனுக்கு நெல் பதக்கும் இவனுக்கு புடவை முதல்*
*44 ஓராட்டை நாளைக்கு பொன் ஐ(ஞ்)கழஞ்சும் பரிசாரகஞ் செய்யு மாணி ஒருவனுக்கு*
*45 நெல் அறுநாழியும் இவனுக்கு புடவை முதல் ஓராட்டை நாளைக்கு பொன்*
*46 கழஞ்சும் திருமெய்காப்பாளன் ஒருவனுக்கு நிசத நெல் குறுணியும் இவனு*
*47 க்கு புடவை முதல் ஓராட்டை நாளைக்கு பொனிருகழஜ்சும் நந்தனவனம் உ(ழு)ப்*
*48 பார் இருவர்க்கு நிசத நெல் குறுணி நானாழியும் இவர்களுக்கு புடவைக்கு பொன்*



*இரண்டாவது படம் – ஏடு-3 ; பக்கம் – 1 ; வரிகள் : 49-60.*

***இரண்டாவது படம் – ஏடு-3 ; பக்கம் – 1 ; வரிகள் : 49-60.***

***பாடம்:***

*49 கழஞ்சும் சங்கிராந்தி ஒன்றினுக்கு ஆசார்ய பூசனை உட்பட பொன் கழஞ்சேய் காலா*
*50 க சங்கிராந்தி பன்னிரண்டினுக்கு பொன் பதினைங்கழஞ்சும் திருமெய்ப்பூச்சு*
*51 க்கும் திருபுகைக்கும் திங்கள் அரைக்கால் பொன்னாக ஓராட்டை நாளைக்கு*
*52 பொன் கழஞ்சரையும் திருநமனிகை மூன்றுக்கு ஓராட்டை நாளைக்கு பொ*
*53 ன் முக்காலும் திருபரிசட்டம் மூன்றுக்கு ஓராட்டை நாளைக்கு பொன் கழஞ்*
*54 சும் உகச்சகள் தலைப்பறை ஒன்றும் மத்தளி இரண்டும் கறடிகை ஒன்*
*55 றும் தாளம் ஒன்றும் சேகண்டிகை ஒன்றும் காளம் இரண்டும் கை*
*56 மணி ஒன்றுமாக ஆள் ஒன்பதினுக்கு புடவை முதலுட்பட உழை ஊர் பொலி*
*57 ஊட்டு நெல் னூற்றைம்பதின் காடியும் கச்சிப்பேட்டு நகரத்தார் பக்கல் விலை கொ*
*58 ண்டுடைய நிலத்தில் சித்திரவல்லிப் பெருஞ்செறுவான பட்டியும் துண்டு*
*59 ணுக்கச் சேரியில் விலை கொண்டுடைய நிலத்தில் மேட்டு மதகாறு பாஞ்ச*
*60 சேந்தறைப்போத்தன் நிலத்துக்கு வடக்கில் தடி மூன்றும் காடாடி குண்*

**செப்பேடு கூறும் செய்திகள்:**

***உயர் அதிகாரியின் விண்ணப்பம்:***

*முன்னரே குறிப்பிட்டவாறு, உத்தம சோழன் காஞ்சி அரண்மனையில் வீற்றிருந்தபோது, மூவேந்தவேளான் என்னும் ஒரு பதவி நிலையில் உள்ள பெரிய அதிகாரியான நக்கன் கணிச்சன் என்பான் அரசனிடம் ஒரு வேண்டுகோள் வைப்பதாகச் செப்பேடு தொடங்குகிறது. உலகளந்தான் கோயிலுக்கு, கச்சிப்பேட்டிலும், துண்டுணக்கச்சேரி என்னும் ஊரிலும் நிலங்கள் இருந்துள்ளன. இந்நிலங்கள் கோயிலுக்குரிய முதலீடாக இருந்தன. விளைச்சலின் மூலம் வட்டியாக வரும் நெல் வருவாய் (பொலிசை, பொலியூட்டு) கோயிலின் செலவினங்களுக்குப் பயன்படுத்தப்பட்டது. விளைச்சல், பூ என்றும் போகம் என்றும் வழங்கப்பட்டது. இந்த நிலங்களைக் கண்காணிக்க,*

*கருவுளான்பாடி, அதிமானப்பாடி ஆகிய ஊர்களைச் சேர்ந்தோரை நியமிக்க வேண்டியே மேற்குறித்த மூவேந்தவேளான் அரசனிடம் விண்ணப்பம் செய்கிறான்.*

***கோயிலின் வருவாய்:***

*கோயிலுக்கு வேறு வரவினங்களும் இருந்துள்ளன. முகந்து விற்கும் தானியம் முதலான பொருள்களின் மீது விதிக்கப்படும் வரி வருமானம் கோயிலைச் சாரும். இது (செப்பேட்டில்) "கால் அளவு கூலி" என்னும் பெயரால் குறிக்கப்பெற்றது. முகத்தல் அளவைக்கு 'கால்' என்னும் கருவி பயன்பட்டது. ஊருக்குப் பொதுவாக இருக்கும் கால் ஊர்க்கால்; கோயிலுக்குத் தனியே கால் இருக்கும். அரசனின் பெயர் கொண்ட காலும் தனியே உண்டு. எடுத்துக்காட்டாக இராசகேசரிக் கால். இறைவனின் பெயர் கொண்ட காலுக்கு எடுத்துக்காட்டு ஆடவல்லான் கால். அதுபோலவே, நிறுத்து விற்கும் பொருள்கள் மீதான வரி வருமானமும் இக்கோயிலுக்கு இருந்தது. நிறுத்தலுக்குக் கோல் (துலாக்கோல்) பயன்பட்டது. இவ்வகை வருவாய் (செப்பேட்டில்) "கோல் நிறை கூலி" என்னும் பெயரால் குறிக்கப்பெற்றது. கோயிலுக்கு அளிக்கப்பட்ட பொன், காசு, பணம் ஆகிய வைப்புத்தொகைகள் முதலீடுகளாகவும், அவற்றால் கிடைக்கப்பெறும் பொலிசை (வட்டி) வருவாயாகவும் கோயிலுக்குப் பயன்பட்டன. கோயிலின் வரவினங்கள் தொடர்பான செயல்பாடுகள் அனைத்தையும் கண்காணித்துக் கணக்கில் வைக்க கணக்கர்களையும் நியமிக்க அரசனிடம் வேண்டுகிறான் மேற்குறித்த மூவேந்தவேளான். "நீயேய் நிவந்தம் செய்வீய்" என்று மன்னன், நிவந்தப்பொறுப்புகளை இந்த அதிகாரியிடமே ஒப்படைக்கிறான். இந்தச் செய்திகள் எல்லாம் செப்பேடு குறிப்பிடும் பொது அல்லது முதன்மைச் செய்திகள். கோயிலில் நடைபெறும் வழிபாடு, (பூசனை, படையல் ஆகியன), நிர்வாகம், கோயிலின் பணியாளர்கள் ஆகியன பற்றியவை சிறப்புச்செய்திகள்.*

***செப்பேடு கூறும் சிறப்புச் செய்திகள்:***

***இறைவனின் பெயர்:***

*கோயிலின் இறைவன் உலகளந்த பெருமாள், செப்பேட்டில் "ஊரகப் பெருமான்" என்று குறிப்பிடப்படுகிறார்.*

***வழிபாடு (பூசனை, படையல்):***

*கோயிலில் மூன்று சந்தி வழிபாடு நடை பெற்றது. மூன்று சந்திக்கும் திருவமுது படைக்கப்பெற்றது. திருவமுதோடு சேர்ந்த பிற அமுதுகளாவன:*

*கறியமுது – காய்கறிகளைக்கொண்ட உணவினைக் குறிக்கும். அதாவது பொறிக்கறி.*

*தயிரமுது.*

*அடைக்காயமுது – பாக்கினைக் குறிக்கும். இச்செப்பேட்டில் வெற்றிலை தனியே குறிக்கப்படவில்லையெனினும் வெற்றிலையையும் சேர்த்தே அடைக்காய் அமுது என்னும் சொல் நின்றது. (சில கல்வெட்டுகளில் இலை அமுது தனியே குறிக்கப்பெறும். அடைக்காய் என்னும் பழந்தமிழ்ச் சொல், தற்போது தமிழில் வழங்குவதில்லை என்றாலும், கன்னடத்தில் இந்த வழக்கு இன்றும் தொடர்வதைக் காண்கிறோம். கன்னடத்தில் இலை, எலெ என்றும் அடைக்காய், அடிக்கெ என்றும் திரிந்து வழங்குகின்றன. வெற்றிலை பாக்கு என நாம் குறிப்பதைக் கன்னடர்கள் எலெ-அடிக்கெ என்பார்கள். அடைக்காய் என்னும் தமிழ்ச் சொல் ஆங்கிலத்தில் "ARECA" என்று வழக்கும். "ட" தமிழ் ஒலிப்பு ஆங்கிலத்தில் "ர/ற" ஒலிப்பாக மாறியுள்ளது. ஒரு ஆங்கில அகராதி,*

*“ARECA” –வின் மூலத்தை, மலையாளம் எனவும், மலையாளத்திலிருந்து போர்த்துகீசிய மொழிக்குச் சென்றது எனவும் குறித்திருப்பது ஏற்றுக்கொள்ளும்படியாயில்லை.)*
*நெய் அமுது.*
*சங்கிராந்தி – கோயில் வழிபாடுகளில் சங்கிராந்தி வழிபாடும் இருந்தது. ஞாயிறு(கதிரவன்) ஓர் இராசியில் புகும் காலம் சங்கிராந்தியாகும். அதுவே, புதிய மாதப்பிறப்பாகும். கல்வெட்டுகளில் மாதங்களின் பெயர்கள் சித்திரை, வைகாசி, ஆனி என்னும் பெயர்களில் குறிப்பிடப்படுவதில்லை. ஞாயிறு புகும் இராசியின் பெயராலேயே குறிக்கப்படும். சித்திரை மாதத்தில், ஞாயிறு, மேழ(மேஷ) ராசியில் புகுவதால் மேழ(மேஷ) ஞாயிறு என்றும், இதே போன்று, வைகாசி, இடப(ரிஷப) ஞாயிறு என்றும், ஆனி, மிதுன ஞாயிறு என்றும் வரிசைப்படுத்திப் பன்னிரண்டு இராசிகளின் பெயரால் மாதங்கள் குறிக்கப்பட்டன. எனவே, ஆண்டின் இறுதி மாதமாகிய பங்குனி, மீன ஞாயிறு என அமையும். இவ்வாறு, பன்னிரண்டு சங்கிராந்திகள். பன்னிரண்டு சங்கிராந்தி பூசனைகள்.*
*ஆச்சாரிய பூசனை – சங்கிராந்தி தோறும், ஆச்சாரிய பூசனை என்னும் ஒரு வழிபாடும் உடன் நடந்ததாகச் செப்பேட்டின் வாயிலாக அறிகிறோம். இது குருவை வணங்குதல் என்னும் நிகழ்ச்சியாகும். செப்பேட்டின்படி, இந்த ஆச்சாரிய பூசனை பன்னிரண்டு சங்கிராந்தியின்போதும் நடந்துள்ளது.*

*இறைவனை வழிபடும்போது, ‘சோடச உபசாரம்’ என்னும் பதினாறு வகையான வழிபடுதல் முறைகள் உண்டு. அவற்றில் பலவற்றை இச்செப்பேட்டில் காண்கிறோம்.*
*திருமெய்ப்பூச்சு – இறைவனின் உலோகத்திருமேனிகளுக்குப் பூசும் சந்தனம் முதலான நறுமணப்பூச்சு.*
*திருப்புகை – நறுமணப்புகை.*
*திருநமனிகை – இறைவனின் உலோகத்திருமேனிகளுக்குச் செய்யும் நீராட்டு.*
*திருப்பரிசட்டம் – இறைவனின் உலோகத்திருமேனிகளுக்குச் சார்த்தும் உடை.*

***கோயிலில் பல்வேறு பொறுப்புகளில் ஈடுபட்டவர்கள்:***
*ஆராதிக்கும் வேத பிராமணன் – பூசைசெய்யும் வேதம் வல்ல பிராமணன்.*
*ஆச்சாரியர் – குரு*
*பரிசாரகம் செய்யும் மாணி – கோயிலில் ஏவல் தொழில் செய்யும் பிரம்மச்சாரி.*
*திருமெய்காப்பான் – திருமெய்காப்பு என்பது கோயில் காவலைக் குறிக்கும். எனவே, திருமெய்காப்பான் என்பவன் கோயில் காவல் பணி செய்பவன்.*
*திருமெழுக்கிடுவார் – கோயிலைப் பெருக்கி மெழுகித் தூய்மை செய்து வைப்பவர்.*
*நந்தவனம் உழப்பார் – நந்தவனத்தில் பணியிலிருக்கும் உழவன். (இக்கோயிலில் உழப்பார் இருவர் இருந்துள்ளனர்)*
*உவச்சர்கள் – செப்பேடு, ஓரிடத்தில், உகச்சகள் என்றும், மற்றோரிடத்தில் உவச்சர்கள் என்றும் குறிப்பிடுகிறது. இவர்கள், இசைக்கருவிகளை இசைக்கும் இசைக்கலைஞர்கள் ஆவர்.*

*கல்வெட்டுகளில், இசைத்தல் என்னும் சொல்லுக்குத் தலைமாற்றாகக் (பதிலாக) கொட்டுதல் என்னும் சொல்லே பயிலுவதைக் காண்கிறோம். ‘பறை முதலியன கொட்டுவித்து’, ‘மத்தளம் கொட்டுகிற’, ‘உவைச்சன் கொட்டுவிதாக’, ‘பஞ்சமா ஸப்தம் கொட்டுகின்ற’ போன்றவை சில சான்றுகள். காளத்தைக் குறிக்கையில் மட்டும் ’ஊதுதல்’ என்னும் குறிப்பைக் காண்கிறோம். புழக்கத்திலிருந்த சில இசைக்கருவிகள் ஆவன:*

*பறை*
*தலைப்பறை*
*மத்தளம் அல்லது மத்தளி*
*கறடிகை*
*கைமணி*
*சேகண்டிகை*
*தாளம்*
*காளம் அல்லது எக்காளம்*
*திமிலை*
*பஞ்சமா சப்தம்*
*உடுக்கை*
*வீணை*
*சகடை (முரசு)*

***நிவந்தத்தின் விளக்கம்:***
*கோயிலின் வருமானங்களாகிய நெல்லும், பொன்னும்(கழஞ்சும்) கீழ்க்கண்டவாறு நிவந்தங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்பட்டன.*
*திருவமுது, கறியமுது, நெய்யமுது, தயிரமுது, அடைக்காய் அமுது ஆகியவற்றுக்கு நெல் வழங்கப்பட்டது. திருநொந்தாவிளக்கெரிக்கத் தேவையான நெய்க்காகவும் நெல் கொடுக்கப்பட்டது.*
*வேத பிராமணன், பரிசாரக மாணி, திருமெய்காப்பான், நந்தவனம் உழப்பார் ஆகியோர்க்கு நெல்லும், இவர்களுக்கான ஆடைகளுக்காகப் பொன்னும்(கழஞ்சும்) வழங்கப்பட்டன. ஆடை என்பதற்குச் செப்பேட்டில் 'புடவை' என்னும் சொல் பயன்படுத்தப்பெறுகிறது.*
*திருமெழுக்கிடுவார்க்கு நெல் மட்டுமே அளிக்கப்பட்டது.*
*சங்கிராந்தி, ஆச்சாரிய பூசனை, திருமெய்ப்பூச்சு, திருபுகை, திருநமனிகை, திருபரிசட்டம் ஆகியவற்றுக்குப் பொன்(கழஞ்சு) வழங்கப்பட்டது.*

***திருவிழாக்கள்:***
*மகர சங்கராந்தி (செப்பேடு இதை உத்தரமயன சங்கராந்தி என்று குறிக்கிறது), சித்திரை விஷு ஆகிய இரு திருவிழாக்களுக்குச் சிறப்பு ஒதுக்கீடுகள் ஏற்படுத்தப்பட்டன. சித்திரைத் திருநாள் ஏழு நாள் விழவாக நடைபெற்றது. திருவிழாவுக்கான செலவினங்களுக்குக் கழஞ்சு வழங்கப்பட்டது. திருவிழாக்களின்போது, எண்ணெய், பூ, சந்தனம் போன்றவற்றிற்குச் சிறப்பு ஒதுக்கீடுகள் இருந்தன. தேவரடியார், இறைவனுக்குப் பள்ளிச் சிவிகை சுமப்பார், இசைக்கலைஞர்கள் ஆகியோருக்கும் சிறப்பு ஒதுக்கீடுகள் செய்யப்பட்டன. செப்பேட்டில், சிவிகை சுமப்போரைக் குறிப்பிடுகையில்,*

*வரி 85 . . . . . . . . . . . . . . . . . தேவர் பள்ளிச் சிவிகை காவும் சிவி*
*வரி 86 கையார்க்கும் . . . . . . . . . . . . . . . . .*

*என்று எழுதப்பட்டுள்ளது. இதில் ''காவும்'' என்னும் சொல் ஆளப்பட்டுளது கருதத்தக்கது. சுமக்கும் என்பதற்கான நல்ல தமிழ்ச் சொல் இங்கு பயின்றுவந்துள்ளது. பரிமேலழகர் இச்சொல்லைக் கையாண்டிருப்பதாக நூலாசிரியர் குறிப்பிடுகிறார். சிவிகையைத் (பல்லக்கு) தோளில் சுமப்பதுபோலவே, முருகக் கடவுளுக்கு எடுக்கும் காவடியும்*

*தோளில் சுமக்கப்படுவதாலேயே, அதற்குக் காவடி என்னும் சொல்லால் பெயரிட்டிருப்பர் எனலாம். காவுதல் என்னும் சொல்லின் அடிப்படையில் ‘காவடி’ உருவாகியிருக்கலாம்.*

***செப்பேடு குறிக்கும் சில மக்கள்:***

***பட்டசாலிகள்:***

*செப்பேட்டில், அதிமானப்பாடி, கருவுளான்பாடி ஆகிய இரு ஊர்களைச் சேர்ந்த நெசவாளர்களே வரவு செலவுகளைக் கண்காணிக்கும் ஸ்ரீகாரியம் செய்பவர்களாகக் குறிக்கப்படுகிறார்கள். செப்பேட்டின் வடமொழிப்பகுதி, இவர்களைப் பட்டசாலி என்று கூறுகிறது. வடமொழித் தொடரான ”ராஜ-வஸ்த்ர க்ருதாமேஷா(ம்)”  என்ற தொடரும் இவர்களையே சுட்டும் எனலாம். அவ்வாறெனின், பட்டசாலிகள் என்னும் நெசவுக்குடிகள், அரசனுக்குரிய துணிகளை நெய்கின்றவர் எனப் பொருள் அமைகிறது.*

***சோழாநியமத்தார்:***

*கச்சிப்பேட்டில் இருந்த வணிகர் குழுவினராக இவர்கள் குறிக்கப்பெறுகிறார்கள். இவர்களில் சிலரைச் செப்பேடு “தோளாச் செவியர்” என்று கூறுகிறது. இத்தொடர், பொருள் பொதிந்த கவின் தொடர் என்று நூலாசிரியர் குறிப்பிடுகிறார். தோளாச் செவியர் என்னும் தொடர், தோட்கப்படாத செவி என்று பொருள் தரும். அதாவது துளைக்கப்படாத செவி; ”தொள்”  என்பதே வேர்ச்சொல்லாக இருக்கவேண்டும். அவ்வாறெனில், தொளைத்தல், தொளை என்பதே சரியான வடிவங்களாயிருக்கவேண்டும்; ஆனால், நாம், ‘துளைத்தல்’, துளை என்று மருவிய வடிவத்தைப் பயன்படுத்துகிறோம் என்றாகிறது.*

*தொடர்பு:  துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.*
*doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.*

## 5. ஐவர் மலை - ஒரு கள ஆய்வு

— துரை.சுந்தரம்

***முன்னுரை:***

*ஐவர் மலை, திண்டுக்கல் மாவட்டம் பழனி வட்டத்தில் பழனியிலிருந்து பதினைந்து கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ள மலை. இருப்பினும், கோவைப்பகுதியிலிருந்து செல்கின்றவர் திருப்பூர் மாவட்டம் உடுமலை -கொழுமம் வழியாகவே செல்லவேண்டும். பழங்காலத்தில் இது ஒரு ஜைனக் குடியிருப்பாக இருந்துள்ளது எனத் தொல்லியல் துறையினரின் தென்னிந்தியக் கல்வெட்டுகள் நூலின் பதிநான்காம் தொகுதி குறிப்பிடுகிறது. கி.பி. 8-10 நூற்றாண்டுகளில் அயிரை மலை சமண முனிவர்களும் அவர்களது மாணவர்களும் நிறைந்த சமணப்பள்ளியாக இருந்துள்ளது என்றும், இச்சமணப்பள்ளியோடு பாண்டிய நாட்டின் பிற சமணப்பள்ளிகளுக்கும் தொடர்பு இருந்துள்ளது என்றும் இங்கு வைக்கப்பட்ட தொல்லியல் துறையினரின் அறிவிப்புப் பலகை கூறுகிறது. இங்கு, திரௌபதியம்மன் கோயில், உச்சிப்பிள்ளையார் கோயில், முருகன் கோயில் ஆகிய கோயில்களும் இருக்கின்றன. இணையத்தில் இம்மலையைப் பற்றி நிறையச் செய்திகள் காணப்படுகின்றன. நமது கட்டுரை, கல்வெட்டுகளைக் கண்டு அவை கூறும் செய்திகளை அறிய உதவும் களப்பணி பற்றியது.*

***2009-ஆம் ஆண்டு- களப்பணி:***



*சரியான பாடம்:*

*1 ஸ்ரீ வடபள்ளி ஆ*

*2 ரம் விச்சி வர*

*3 தபாணி செயல்*

தொல்லியல் சார்ந்த நூல்கள் வாயிலாகக் கல்வெட்டுகளை அவை இருக்கும் இடங்களுக்குச் சென்று பார்த்துப் படிக்கும் ஆர்வலராக 2009-ஆம் ஆண்டு ஐவர் மலைக்குச் சென்று ஜைனத் தடயங்களைக் கண்டு மகிழ்ந்தது ஐவர் மலை தொடர்பான தொடக்கம். அப்போது கையில் ஒளிப்படக்கருவி இல்லை. இயற்கையாக அமைந்த குகைத்தளத்தில், ஒரு பகுதியில் படுக்கைகள் இருந்த இடமும், இன்னொரு பகுதியில் பதினாறு ஜைனத் தீர்த்தங்கரர்களின் புடைப்புருவச் சிற்பங்களும் இருந்தன. சிற்பங்களின் கீழ் வட்டெழுத்துக் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டிருந்தன. கல்வெட்டுகள் தெளிவாகத் தெரியாவண்ணம் சுவர் எழுப்பப்பட்டுச் சுண்ணம் பூசப்பட்டிருந்தது. இந்தத் தடைகளைத் தாண்டிச் சில எழுத்துகள் படிக்கும் தோற்றம் பெற்றிருந்தன. அரைகுறையாகப் புலப்பட்ட எழுத்துகளைக் கையோடு எடுத்துச் சென்ற நோட்டுப் புத்தகத்தில் எழுதிப்பார்த்துப் பிழையான பாடத்தோடு படித்தது இங்கே நினைவுகூரப்படுகிறது. தீர்த்தங்கரர் ஒருவருடைய சிற்பத்தின் கீழ் சரியான பாடமாகக் கீழுள்ளவாறு வட்டெழுத்து அமைந்துள்ளது:

சரியான பாடம்:

1 ஸ்ரீ வடபள்ளி ஆ
2 ரம் விச்சி வர
3 தபாணி செயல்

ஆனால், பிழையாகப் படித்த முயற்சியைக் கீழுள்ள ஒளிப்படத்தில் (1) என்று அடையாளமிட்ட கல்வெட்டு வரியில் காணலாம்.





*பிழையாகப் படித்த பாடம்:*
*1 ஸ்ரீ வ(ப)ய பள்ளி ப*
*2 ரம வி(பி)ச்சி பர*
*3 தமாதி செயல்*

*மற்றொரு கல்வெட்டு சரியாகப் பிழையின்றி படிக்கப்பட்டது. மேலே, ஒளிப்படத்தில் (2) என்று அடையாளமிட்ட கல்வெட்டு வரியில் காணலாம்.*



*வரி 1 - ஸ்ரீ அச்சணந்*
*வரி 2 - திசெயல் (ஸ்ரீ அச்சணந்தி செயல்)*

***2013-ஆம் ஆண்டு- களப்பணி:***
*தஞ்சையைத் தலைமையிடமாகக் கொண்டு இயங்கும் தமிழகத் தொல்லியல் கழகம் வழி நண்பரானவர் திரு. வீரராகவன். விழுப்புரத்தில் பள்ளியாசிரியராய்ப் பணி நிறைவு செய்தவர். மேற்படிக் கழகத்தின் தோற்றக்காலத்திலிருந்து அக்கழகத்தோடு இணைந்துள்ளவர். இருபத்தைந்து ஆண்டுகளுக்கும் மேலாகத் தொல்லியல் தடயங்களை வெளிப்படுத்தித் தொல்பொருள்களைப் பல்லாண்டு சேர்த்துச் சொந்தமாக ஒரு அருங்காட்சியகத்தையே வைத்திருப்பவர். 2013-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் அவர் கோவை வந்திருந்தபோது, கோவைப்பகுதியில் தொல்லியல் சார்ந்த இடங்கள் ஒன்றிரண்டைப் பார்வையிட விருப்பம் தெரிவித்தபோது உடுமலை ஐவர் மலைக்கு அழைத்துச் சென்றேன். வழியிலேயே பல்லடம்-உடுமலைப் பாதையில் கோட்டமங்கலம் என்னும் ஊரில் கி.பி. 1693-ஆம் ஆண்டைச் சேர்ந்த வீரக்கம்பம் என்னும் தூண் நடுகல்லைக் கண்டறிந்தோம். அது பற்றிய பதிவு வலைப்பூ தளத்தில் 2014, ஜனவரியில் வெளியாயிற்று. தினமணி நாளிதழிலும் வெளியாயிற்று. (மின் தமிழில் இன்னும் வெளியாகவில்லை)*

*ஐவர் மலைச் சமணத்தீர்த்தங்கரர் சிற்பங்களைப் பார்வையிட்டதோடு மட்டுமல்லாமல் நண்பர் தாம் கொண்டுவந்திருந்த கரிய நிற மை தடவிச் சிற்பங்களின் கீழே உள்ள பல வட்டெழுத்துக் கல்வெட்டுகளையும், ஓரிரண்டு தமிழ் எழுத்துக் கல்வெட்டுகளையும் தெளிவாகப் புலப்படும் வண்ணம் ஆக்கினார். கல்வெட்டுகளைப் படித்தோம். கல்வெட்டுகளைப் படியெடுக்கும் பணியைப் பார்த்துக்கொண்டிருந்த இளைஞர் ஒருவர் தம்மை அறிமுகப்படுத்திக்கொண்டார். அவர் பெயர் சேக்கிழார் என்பது. அரிதாகக் கேள்வியுறும் பெயராக இருக்கவே, பெயர்க்காரணம் கேட்டதற்கு அவ்விளைஞர், தாம்*

சேக்கிழார் மரபினர் என்றும், பற்றின் காரணமாகத் தம் இயற்பெயரை விடுத்துச் சேக்கிழார் என்னும் பெயரையே வைத்துக்கொண்டதாகச் சொன்னார். அவர், தீர்த்தங்கரர் சிற்பங்கள் இருக்கும் இடத்தைத் தவிர இங்குள்ள சுனைக்குளத்தின் அருகில் பாறைப்பரப்பில் கல்வெட்டு ஒன்றைக் கண்டதாகக் கூறி அங்கு அழைத்துச் சென்றார். பாறைத்தரையில் ஒரு சிறிய, ஐந்து வரிகளைக்கொண்ட கல்வெட்டு. வட்டெழுத்தினால் பொறிக்கப்பட்டிருந்தது. தொல்லியல் சார்ந்த இடங்களைக் கண்டு மகிழ வந்த நண்பருக்கும் எனக்கும் புதிய கண்டுபிடிப்புகளாக இரண்டு கல்வெட்டுகள் கிடைத்தமை பெரு மகிழ்ச்சியை அளித்தது. எதிர்பாரா நிகழ்ச்சி. இந்தக் கல்வெட்டின் மீதும் கரிய மை பூசிப் படிக்க முயன்றோம். திறந்த வெளியில் தரையில், வெயிலும், மழையும், காற்றும் பட்டுப்பட்டுக் கால மாற்றத்தால் எழுத்துகளின் தெளிவின்மை காரணமாகச் சரியான பாடத்தைப் படிக்கக் கூடவில்லை. கி.பி. 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு வட்டெழுத்துக் கல்வெட்டு கிடைத்த மகிழ்ச்சியில் திரும்பினோம்.



கண்டறிந்த புதிய வட்டெழுத்துக் கல்வெட்டு



சேக்கிழாருடன் ஆய்வாளர்கள்

***2014-ஆம் ஆண்டு- களப்பணி:***

*2014-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் மீண்டும் ஐவர் மலை செல்லும் ஒரு வாய்ப்பு ஏற்பட்டது. நாளிதழ் நண்பர் மீனாட்சிசுந்தரம், நண்பர் பாஸ்கரன் ஆகிய இருவருடன் ஐவர் மலை சென்றேன். கோவை-பல்லடம்-குடிமங்கலம்-கோட்டமங்கலம்-துங்காவி-வயலூர் வழியாக ஐவர் மலைக்குப் பயணம். துங்காவியில் அமராவதி ஆற்றின் வாய்க்காலின் அருகிலேயே ஒரு சிறிய செங்கல் கட்டுமானக் கோயில் (கருவறை மட்டுமே) இருந்தது. அதன் வளாகத்தைச் சுற்றிலும் பெரிய கற்களைக் கொண்டு சுற்றுச் சுவர் வேலி அமைத்திருந்தனர். வளாகத்தில் ஒரு சிறிய மாடம் போன்ற அமைப்பு இருந்தது. அதில் புடைப்புச் சிற்பமாக அழகானதொரு நடுகல் சிற்பம் காணப்பட்டது.*



துங்காவி-வாய்க்கால் அருகில் கோயில்



நடுகல் சிற்பம்

*ஐவர் மலையில் சமணச் சிற்பங்களையும் கல்வெட்டுகளையும் கண்டு களித்தோம். முன்னர் 2013-இல் கண்டறிந்த வட்டெழுத்துக் கல்வெட்டைக் கண்டுபிடித்து மீண்டும் படித்தறியும் முயற்சியில் கல்வெட்டைப் பாறைப்பரப்பில் தேடினோம். சுனைக்குளத்தின் அருகில் இருந்ததான நினைவில் அதன் அருகில் தேடிப்பார்த்துப் பயனில்லாமல் போயிற்று.*

***2018-ஆம் ஆண்டு- களப்பணி:***

*11-11-2018 அன்று கோவை வருவதாகக் கல்வெட்டு ஆராய்ச்சியாளர் நண்பர் வீரராகவன் அவர்கள் கூறவே, 2013-ஆம் ஆண்டு- களப்பணியின்போது கண்டறிந்த வட்டெழுத்துக் கல்வெட்டினை முதன்முதலாகப் படிக்கும் முயற்சியைத் தொடங்கிய நாங்களிருவருமே மீண்டும் படித்து முடிக்கவேண்டும் எனத் திட்டமிட்டு, 12-11-2018 அன்று ஐவர் மலை நோக்கிப் பயணப்பட்டோம். உடுமலையில் நண்பர் தென்கொங்கு சதாசிவம் எங்களுடன் இணைந்துகொண்டார். அவரும் ஐவர் மலைப்பகுதியில் ஒரு பாறைக்கல்வெட்டைப் பார்த்துவைத்திருப்பதாகக் கூறவே அக்கல்வெட்டையும் நேரில் சென்று பார்த்துப் படிக்கவேண்டும் என்னும் திட்டத்தையும் சேர்த்துக்கொண்டோம். உடுமலையிலிருந்து கொழுமம் வழியாக ஐவர் மலை சென்றடைந்தோம். வெயில் மிகுதியாக ஏறும் முன்னரே காலை பதினொரு மணியளவில் மலை ஏறிவிட்டோம். முதற்பணியாக வட்டெழுத்துக் கல்வெட்டைத் தேடும் முயற்சி தொடங்கியது. சுனைக்குளத்தின் முன்புறம் பாறைப்பகுதியில் தேடியதில் கல்வெட்டு புலப்படவில்லை. கல்வெட்டு அமைந்திருந்த இடம் மிகச் சரியாக நினைவில் இல்லை. சுனைக்குளத்தைச் சுற்றிலும் பாறைத்தரை சமப்பரப்பாக ஓரிடத்திலும் இல்லை. ஆனால் சுனைக்குளம் அமைந்திருந்த பகுதியின் மட்டத்திலிருந்து கீழே இருந்த இன்னொரு பள்ளமான பகுதியில் சமதளப்பரப்பு காணப்பட்டது. அங்கு சென்று தேடியதில் சிறிது நேரத்தில் கண்டுபிடித்துவிட்டோம். அளவற்ற மகிழ்ச்சி. ஐந்து ஆண்டுகளுக்குப் பின்னர் கிட்டிய கல்வெட்டாயிற்றே.*

***கண்டுபிடிக்கப்பட்ட புதிய வட்டெழுத்துக் கல்வெட்டு:***

*சமப்பரப்பாயிருந்த ஓரிடத்தில், ஒன்றரை அடி நீளம், முக்காலடி அகலம் கொண்ட சிறிய பரப்பில் எழுத்துகள் பொறிக்கப்பட்டிருந்தன. எழுத்து, வட்டெழுத்து வகையினது. பாண்டியர்களின் கல்வெட்டுகள் மட்டுமே கொடுக்கப்பட்டுள்ள தென்னிந்தியக் கல்வெட்டுகளின் பதிநான்காம் தொகுதி நூலில் ஐவர் மலைக் கல்வெட்டுகள் பதிவாயுள்ளன. அந்நூலின் குறிப்புப்படி, இங்குள்ள வட்டெழுத்துக் கல்வெட்டுகள் கி.பி. 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தன. அவ்வகையில், இக்கல்வெட்டும் கி.பி. 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகவே இருக்கவேண்டும். கல்வெட்டின் எழுத்தமைதியும் அவ்வாறே உள்ளது. முன்னரே குறிப்பிட்டவாறு ஐந்து வரிளைக்கொண்ட கல்வெட்டு. இறுதி வரியில் இரண்டு எழுத்துகளே புலப்படுகின்றன. கல்வெட்டின்மீது மாவு பூசியதில் எழுத்துகள் ஓரளவு புலப்பட்டன. இருப்பினும் கல்வெட்டினை முழுதாகப் படித்து முழுச்செய்தியையும் அறியமுடியவில்லை. கல்வெட்டில், வடபள்ளி என்னும் ஊரின் பெயர் காணப்படுகிறது. ''மாணாக்கர்'' என்று படிக்கும்படியாக ஒரு சொல் காணப்படுகிறது. சமணப் பெண் துறவியார் ஒருவர் செய்த பணியைக் கல்வெட்டு குறிப்பதாகக் கருதுகிறோம். அந்தத் துறவியின் பெயர் ''ஆவேரி அடிகள்'' என்பதாக இருக்கக்கூடும் என்றும் கருதுகிறோம். கல்வெட்டில் ''வடபள்ளி'', ''அடிகள்'' ஆகிய சொற்கள் மிகத் தெளிவாக உள்ளன. பெண் துறவியார் செய்த செயல் என்ன என்பதை அறிய இயலவில்லை. கல்வெட்டு ஒரு தரைப்பரப்பில் உள்ளதால், சற்றுத் தொலைவில்*

அமைந்திருக்கும் சிறு சிறு குகைத் தளங்களுடன் இக்கல்வெட்டைத் தொடர்பு படுத்தவும் இயலவில்லை. கல்வெட்டு அறிஞர்களின் துணையோடு இக்கல்வெட்டு மீளாய்வு செய்யப்பட்ட பின்னர் கல்வெட்டுச் செய்தி என்ன என்பது அறியவரலாம்.

***ஐவர் மலையின் பிற கல்வெட்டுகள்:***

*ஐவர் மலைக் குகைப் பாறையில் மொத்தம் பதிநான்கு கல்வெட்டுகள் தொல்லியல் துறையினரால் படிக்கப்பட்டுப் பதிவு செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்பது கல்வெட்டுகள் தீர்த்தங்கரர்களின் சிறபத்திருமேனிகளின் அடிப்புறத்தில் பொறிக்கப்பட்டுள்ளன. திருமேனிகளைச் செய்வித்தவர் யார் என்பதை இக்கல்வெட்டுகள் கூறுகின்றன. செய்வித்தவர் என்பதைக்குறிக்க அவர் பெயருடன், "செயல்" என்னும் சொல் எழுதப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக,*

*"ஆரம் விச்சி வரதபாணி செயல்"*
*"ஸ்ரீ அச்சணந்தி செயல்"*
*"ஸ்ரீ இந்திர சேனன் செயல்"*
*"குடியன் மூவேந்தன் செயல்"*
*"(பாத)மூலத்தான் ஆரி செய்த செயல்"*
*"மல்லிசேனப் பெரியான் செயல்"*
*"விரிச்சி நாகன் செயல்"*

*என்பனவற்றைக் குறிப்பிடலாம். எடுத்துக்காட்டுக்கு இரு படங்கள்*



ஸ்ரீ இந்திர சேனன் செயல்



மூவேந்தன் செயல்

*மீதி ஐந்து கல்வெட்டுகள் வேறு சில செய்திகளைக் கூறுவனவாய் அமைந்துள்ளன. அவற்றின் கல்வெட்டுப் பாடங்களும் விளக்கங்களும் கீழ்வருமாறு:*

*க.வெ. எண்-700  தொல்லியல் ஆய்வுத்துறை 1905-ஆம் ஆண்டறிக்கை .*

***பாடம்:***

*1 . . . . .  எழுநூற்றுத் . . . .*
*2 . . . . .  ற்கு யாண்டெ . . .*
*3 . . . . .  கொழுமத்து சா . . .*
*4 . . . . .  ர்ச்0வ படாரற் . . .*
*5 . . . . .  த்திரண்டா . . .*
*6 . . . . .  வைத்த பொ . . .*

*குறிப்பு :  சிவப்பு எழுத்துகள் கிரந்த எழுத்துகள்.*



வட்டெழுத்துக் கல்வெட்டு

*விளக்கம்:  கல்வெட்டு முழுமையாக இல்லை. ஐவர் மலையில் முதல் சிற்பம் பார்சுவ நாதருடையது. பார்சுவ நாதரின் வழிபாட்டுக்காகச் சிலர் கொடைப்பொருளாகப் பொன் அளித்துள்ளனர். இக்கல்வெட்டு, கொழுமததைச் சேர்ந்த ஒருவர் பொன் கொடையளித்துள்ளதைக் குறிப்பிடுகிறது. படாரர் என்னும் சொல் பட்டாரக(ர்)  என்னும் சொல்லின் திரிபு எனலாம். பட்டாரகர் என்பது சமண மதத்தில் தலைவரைக் குறிப்பதாகும். ஐவர் மலைச் சமணச் சிற்பங்களில் முதற்சிற்பமாகக் காணப்படுவது*

*(பா)ர்ச்0வ படாரர் சிற்பமே. சமணத்துறவிகளைக் குறிக்கவும், இறைவனைக்குறிக்கவும் ''படாரர்'' என்னும் சொல்லே வழக்கில் இருந்தது.*

*க.வெ. எண்-701 தொல்லியல் ஆய்வுத்துறை 1905-ஆம் ஆண்டறிக்கை .*

***பாடம்:***

*1 ஸ்ரீ பெரும்பத்தி*
*2 ஊர் பட்டிநிக்குர*
*3 த்தியார் மாணாக்கியா*
*4 ர் அவ்வணந்திக்*
*5 குரத்தியார் செய்*
*6 வித்த தேவர்*

*குறிப்பு : சிவப்பு எழுத்து கிரந்த எழுத்து.*



வட்டெழுத்துக் கல்வெட்டு

*விளக்கம்: தீர்த்தங்கரர் ஒருவரின் சிறபத்திருமேனியைச் செய்வித்தவர் பற்றிய - மேலே குறிப்பிட்ட ஒன்பது கல்வெட்டோடு பத்தாவது - கல்வெட்டாக இது இருப்பினும் கூடுதல் செய்திகளை அறியச்செய்யும் கல்வெட்டாகத் திகழ்கிறது. சமணத்தில் பெண் துறவியர் இருந்தமை அறியப்படுகிறது. அவர்கள் குரத்தியர் என்று அழைக்கப்பெற்றனர். ஆண் துறவியர் குரவர் என்னும் சொல்லால் அழைக்கப்பட்டனர். சைவ சமயப் பெரியோரையும் குரவர் என அழைக்கும் மரபு சமணத்திலிருந்து ஏற்பட்டிருக்கக் கூடும். சமணச் சமயத்தின் தானக்கொள்கைகளில் ஒன்றான கல்வியுடன் இணைந்த ஒரு சொல் மாணாக்கர்/மாணாக்கியர் என்னும் சொல். பெரும்பத்தியூரைச் சேர்ந்த பட்டிநிக்குரத்தியாரின் மாணாக்கியரான அவ்வணந்திக் குரத்தியார் செய்வித்த*

*சிற்பத்திருமேனியை இக்கல்வெட்டு குறிக்கிறது. வழிபடும் கடவுளுக்கு நிகரான ஒரு சொல்லாகத் "தேவர்" என்னும் சொல் ஆளப்பட்டு வந்துள்ளது. இதன் காரணமாகவே கோயிலைக் குறிக்கையில் சில கல்வெட்டுகளில் "தேவ குலம்" என்னும் சொல்லும், கடவுளுக்கு ஒப்பாகக் கருதும் நிலையில் அரசனைக் குறிக்கத் "தேவர்" என்னும் சொல்லும் பயின்று வருவதைக் காண்கிறோம். சோழர் கல்வெட்டுகள் அனைத்திலும், அரசனைக் குறிக்கும்போது பெயரோடு சேர்த்து "தேவர்" என்னும் பின்னொட்டுச் சொல் காணப்படுகிறது. சமணத்தில் பெண்களை உயர்வாகக் கருதி அழைக்கையில் அவ்வை என்று குறிப்பிடுவதை இக்கல்வெட்டு மூலம் அறிகிறோம். சங்ககாலப் பெண்பாற் புலவர்களில் பல "அவ்வை"கள் இருப்பது இக்காரணத்தால்தான் எனலாம்.*

*க.வெ. எண்-702 தொல்லியல் ஆய்வுத்துறை 1905-ஆம் ஆண்டறிக்கை .*

***பாடம்:***

*1 குவணச்சேரித் தட்டார்ச் சா*
*2 விகித்தி வட்டம் வடு*
*3 கி ஸ்ரீ அயிரை மலை தேவர்*
*4 க்கவிப்புறமட்டி*
*5 ன பொன்னிரு கழஞ்சு ||-*

*குறிப்பு : சிவப்பு எழுத்துகள் கிரந்த எழுத்துகள்.*


வட்டெழுத்துக் கல்வெட்டு

*விளக்கம்: குவணச்சேரி என்னும் ஊரினைச் சேர்ந்த வட்டம் வடுகி என்பவர் அயிரை மலைக் கடவுளுக்குத் திருவமுது படைப்பதற்காக இரண்டு கழஞ்சு பொன் கொடையளித்தது பற்றி இக்கல்வெட்டு கூறுகிறது. இன்று இம்மலை ஐவர் மலை என்று மருவி அழைக்கப்பட்டாலும், 8-9-ஆம் நூற்றாண்டில் இந்த மலை "அயிரை மலை" என அழைக்கப்பெற்றதை இக்கல்வெட்டு உறுதி செய்கிறது. பதிற்றுப்பத்து இலக்கியத்தில் சுட்டப்பெறும் அயிரை மலை இந்த மலையாகலாம் என்னும் கருத்தும் உண்டு. கல்வெட்டுகளில், "புறம்" என்னும் சொல்லாட்சி உண்டு. இது, கோயில் வழிபாடு மற்றும் பிற அறங்களுக்காகக் கொடையாக அளிக்கப்படும் இறையிலி நிலத்தைக்*

குறிக்கும். (இறையிலி என்பது அரசுக்குச் செலுத்தும் வரியிலிருந்து நீக்கம் பெறுதலைக் குறிக்கும்) விளக்குப் புறம், மடப்புறம் போன்ற பல்வகை இனங்களுக்கு நிலம் அளிக்கப்படுவதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இக்கல்வெட்டில் உள்ள "தேவர்க்கவிப்புறமட்டின பொன்" என்பதை, "தேவர்க்கு-அவிப்புறம்-அட்டின-பொன்" எனப்பிரித்துப் பொருள் கொள்ளல் தெளிவுண்டாக்கும். அவி என்பது கடவுளுக்குப் படைக்கும் உணவு (அமுது). அட்டுதல் என்பது கொடுத்தல், தானம் செய்தல். எனவே, அயிரை மலைத் தேவர்க்கு அமுது படைக்க ஏற்படும் செலவினத்துக்காக நிலம் தானம் செய்யப்படுதலையும் அதற்கு முதலாக இரண்டு கழஞ்சுப்பொன் அளிக்கப்பட்டதையும் கல்வெட்டு தெரிவிக்கிறது. குவணச்சேரி என்னும் ஊர் தற்போது உள்ளதா எனத்தெரியவில்லை.

க.வெ. எண்-703 தொல்லியல் ஆய்வுத்துறை 1905-ஆம் ஆண்டறிக்கை .

***பாடம்:***

1 .... னுக்குச் செல்லாநி .... ருந்
2 .... றலூர் வாழுந்திணை .... சந்திரு ...
3 .... ருவயிரைக்கு இரண்டு கலம் பெய்தா(ன்)
4 .... விக்கும் ஓரடிகளுக்கும் ||-


தமிழ் எழுத்துக் கல்வெட்டு

விளக்கம்: கல்வெட்டு முழுமையாக இல்லை. தென்னிந்தியக் கல்வெட்டுகள் நூலின் பதிநான்காம் தொகுதி குறிப்பிடுவதுபோல் அயிரை மலை, பண்டு பெயர் பெற்ற சமணக்குடியிருப்பாக இருந்ததோடு, பார்சுவ நாதரை முதன்மை இறைவராகக் கொண்ட வழிபாட்டிடமாகவும் இருந்துள்ளது; வழிபாட்டுக்காகப் பலர் கொடையளித்துள்ளனர். அது போன்ற ஒரு கொடையை இக்கல்வெட்டு குறிக்கிறது. கலம் என்னும் சொல்லைக்கொண்டு கொடைப்பொருள் நெல் எனக் கருதலாம். நெல் கொடை, இறைவற்குப் படைக்கும் அவிக்காகவும் (அமுது), சமணத் துறவியார் ஒருவருக்குச் சோறு படைக்கவும் அளிக்கப்பட்டது. 4 .... விக்கும் ஓரடிகளுக்கும் ||- என்னும் தொடர் இக்கருத்தை உறுதியாக்குகிறது.. விக்கும் என்பது "அவிக்கும்" என்னும் சொல்லின் குறை வடிவமே. அடிகள் என்னும் சொல் சமணத் துறவியரைக் குறிக்கும் இன்னொரு சொல்.

*தமிழ் எழுத்துக் கல்வெட்டுகளில் ''ணை'' எழுத்து, தனிவடிவம் பெற்று - அதாவது, மற்ற எழுத்துகளின் ஐகார வடிவத்தில் எழுத்துக்கு முன்புற ஒட்டாக எழுதப்படும் இரட்டைக்கொம்பு போல் எழுதப்படாமல் - எழுதப்படும். ஆனால், மேற்கண்ட கல்வெட்டில் இரண்டு ஒற்றைக்கொம்பு சேர்த்து எழுதப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. (வரி 2)*



"ணை" எழுத்தின் தனி வடிவம்



"ணை" எழுத்து ஐவர் மலைக் கல்வெட்டில் வேறு வடிவம்

*அதேபோல, இக்கல்வெட்டின் மூன்றாம் வரியில் உள்ள ''யி'' எழுத்து வழக்கமாக எழுதப்படும் முறைக்கு மாறுபட்டுள்ளதைக் காணலாம்.*



"யி" வழக்கமான முறையில்



"யி" எழுத்து ஐவர் மலைக் கல்வெட்டில் வேறு வடிவம்

க.வெ. எண்-703  தொல்லியல் ஆய்வுத்துறை 1905-ஆம் ஆண்டறிக்கை .

***பாடம்:***

1  சகரயாண்டு எழுநூற்றுத் தொண்ணூற்றிரண்டு
2  போந்தன வரகுணற்கு யாண்டு எட்டு குணவீரக்கு
3  ரவடிகள் மாணாக்க(ர்) காழத்து சாந்திவீரக்
4  குரவர் திருவயிரை பார்ச்0வ படாரரையு மியக்
5  கி அவ்வைகளையும் புதுக்கி இரண்டுக்கு முட்
6  டாவவியு மோரடிகளுக்கு சோறாக அமைந்தன
7  பொன் ஐந்நூற்றைந்து காணம்



வட்டெழுத்துக் கல்வெட்டு

விளக்கம்:  பார்சுவ படாரரை முதன்மை  தேவராகக் கொண்டு வழிபாடுகள் அயிரை மலையில் நிகழ்ந்துள்ளதை மேலே சுட்டியுள்ளோம். பார்சுவநாதரின் சிற்பத்திருமேனியைச் செய்வித்தவர் பற்றிய குறிப்பு அடங்கிய கல்வெட்டு சிற்பத்தின் கீழ் பொறிக்கப்பட்டுள்ளது. ஆனால், கல்வெட்டு மிகவும் சிதைந்து போனமையால் கல்வெட்டின் பாடத்தைப் படித்துச் செய்தியை அறிய இயலவில்லை.  ஆனால், இக்கல்வெட்டு, பார்சுவ நாதரின் சிற்பத்திருமேனியையும் அவருடன் காணப்பெறும் இயக்கியரின் சிற்பங்களையும் சாந்திவீரக் குரவர்  என்பவர் சீர் செய்துள்ளார் என்றும், பார்சுவ நாதருக்கும் இயக்கியருக்கும் ஆன அமுது படிக்கும், ஒரு துறவியாருக்குச் சோறு படைக்கவும் வேண்டிய செலவினங்களுக்காக ஐந்நூற்றைந்து காணம் பொன் வைத்தார் என்றும் கூறுகிறது. இக்கல்வெட்டு, வரலாற்றுச் சிறப்புப்  பெற்ற  கல்வெட்டாக வரலாற்று ஆசிரியர்களால் பாராட்டப்பெறுகிறது. பாண்டிய மன்னன் இரண்டாம் வரகுணபாண்டியன் ஆட்சி ஏற்ற ஆண்டினைக் கணக்கிட இக்கல்வெட்டு சான்றாய் அமைகிறது.

கல்வெட்டில் குறிப்பிடப்பெறும் சக(ர) ஆண்டு  792 என்பதற்கு ஈடான பொது ஆண்டு கி.பி. 870 ஆகும். கலவெட்டின்  காலமான கி.பி. 870-ஆம் ஆண்டை வரகுணபாண்டியனின் எட்டாம் ஆட்சியாண்டு எனக் கல்வெட்டு குறிப்பதால், வரகுண பாண்டியன் ஆட்சியில் அமர்ந்த ஆண்டு கி.பி. 862 என உறுதி செய்யப்படுகிறது.  சக ஆண்டு 792 கழிந்தது என்னும் நிலையைக் கல்வெட்டில்  வரும் “போந்தன”  என்னும் சொல் குறிப்பிடுவது கருதத்தக்கது. இரண்டுக்கு முட்டாவவியு மோரடிகளுக்கு என்பதை  “இரண்டுக்கும்-முட்டா-அவியும்-ஓர்-அடிகளுக்கு”  எனப் பதம் பிரித்தல் எளிதில் பொருள் உணர்த்தும்.

முட்டா என்பது தடையின்றித் தொடர்தல் என்பதைக்குறிக்கும். அடிகள் என்னும் சொல் சமணத்துறவியைக் குறிக்கும். கொடை நல்கிய சாந்திவீரக் குரவர், குணவீரக் குரவடிகள் என்னும் ஆசிரியரின் மாணாக்கர் ஆவார். தீர்த்தங்கரர்களோடு இணைத்துக் கூறப்படும் இயக்கியரை (யக்ஷி) இயக்கி அவ்வைகள் என்று கல்வெட்டு குறிப்பதைக் காண்க. சமணத்தில் , உயர்ந்த பெண்களை அவ்வை எனக் குறிப்பிடும் வழக்கு இருப்பதை அறிகிறோம். சைவ வைணவப் பெருஞ்சமயங்களில் இவ்வழக்கு சற்றே மாறுபட்டு "அம்மையார்" என்றும், "நாச்சியார்" என்றும் உள்ளதைக் காணலாம். எடுத்துக்காட்டாக, காரைக்கால் அம்மையார், பரவை நாச்சியார் என்பதைக் குறிப்பிடலாம். சங்கப் பெண்பாற் புலவர் அவ்வையார் சமணராய் இருக்கக் கூடும் எனலாம். புதுக்கி என்னும் சொல் சீர் செய்து எனப் பொருள் தரும். புதுப்பித்தல் எனவும் பொருள் தரும். காணம் என்பது நடப்பில் புழங்கிய நாணயத்தைக் குறிக்கும். மக்கள் வழக்காற்றில் உள்ள சோறு என்னும் தூய தமிழ்ச் சொல் கல்வெட்டில் பயின்று வந்துள்ளமை எண்ணி மகிழத்தக்கது.

தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி-14 - இல் காணப்படாத ஒரு கல்வெட்டு நேரில் படிக்கப்பட்டது.
அதன் பாடம்:
1 ஸ்வஸ்திஸ்ரீ அண்ட நாட்டுக் கூ
2 டலூர் சிலைய மாணிக்கன்
3 செய்வித்த தேவர்

குறிப்பு : சிவப்பு எழுத்துகள் கிரந்த எழுத்துகள்.


தமிழ் எழுத்துக் கல்வெட்டு

விளக்கம் : இக்கல்வெட்டும் ஒரு சிற்பத்தின் கீழ் பொறிக்கப்பட்ட ஒன்றே. சிற்பத்தை அண்ட நாட்டுக் கூடலூரைச் செர்ர்ந்த சிலைய மாணிக்கன் என்பவர் செய்வித்ததாகக் கூறுகிறது. அண்ட நாடு என்பது தற்போதுள்ள ஒட்டன்சத்திரம் வட்டம் ஆகலாம். அண்டநாடு, வைகாவி நாட்டை அடுத்துள்ள பகுதி. வைகாவி நாடு, பழநிப்பகுதி. ஐவர் மலை பழனிப்பகுதியில் உள்ளது. சிற்பத்திருமேனியை அண்ட நாட்டுக் கூடலூரைச் சேர்ந்தவர் செய்வித்துள்ளார். கூடலூர் தற்போது எந்த ஊர் எனத் தெரியவில்லை.

ஒரு வட்டெழுத்துக் கல்வெட்டு மீள் படிப்பு:
க.வெ. எண்-691 தொல்லியல் ஆய்வுத்துறை 1905-ஆம் ஆண்டறிக்கை .
தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி-14 - க.வெ. எண் : 107

***பாடம்:***

*1 ஸ்ரீ வடபள்ளி ஆ*
*2 ரம் விச்சி வர*
*3 தபாணி செயல்*

*மேற்படிக் கல்வெட்டை மீள் படிப்புக்குள்ளாக்கியதில், ஒரு பாட பேதம் காண முடிந்தது. "பாணி" என்னும் சொல்லில் "பா" எழுத்து "மா" என்னும் எழுத்தாகப் படிக்கப்பட்டது. "மா" என்னும் எழுத்து தெளிவாக உள்ளது. "பாணி" என்பதைவிட "மாணி" என்பது கூடுதல் பொருத்தம் உடையது. மாணி என்னும் சொல் கல்வெட்டுகளில் மிகுதியும் பயிலும் சொல்லே. ஒரு மாணாக்கரின் நிலையில் ஆசிரியரிடம் பயிற்சி பெறுகின்ற ஒருவரைக் குறிக்கும் சொல்லாகக் கருதலாம். சிவன் கோயில் கல்வெட்டுகளில் மாணி என்னும் சொல் கோயில் பணிகளில் ஈடுபடும் ஒரு பிராமணப் பிரமச்சாரியைக் குறிக்கும். எனவே, திருத்தப்பட்ட பாடம் கீழுள்ளவாறு:*

*1 ஸ்ரீ வடபள்ளி ஆ*
*2 ரம் விச்சி வர*
*3 தமாணி செயல்*



ஆரம் விச்சி வரத மாணி செயல்



ஆரம் விச்சி வரத மாணி செயல்

***பார்சுவ நாதர் சிற்பத்தின் கீழுள்ள கல்வெட்டு:***

*பார்சுவ நாதர் சிற்பத்தின் கீழுள்ள கல்வெட்டு மிகவும் தேய்மானம் கொண்டுள்ளதாலும் சுண்ணாம்புப் பற்று மிகுந்துள்ளதாலும் படிக்க இயலவில்லை. கல்வெட்டுத் தொகுதி நூலிலும் கல்வெட்டின் பாடம் இல்லை. ஆனால், சிற்பத்திருமேனியைச் செய்வித்தவர் ஓர் ''அடிகள்'' என்பது புலப்படுகிறது. ''அடிகள்'' என்னும் சொல் சற்றுத் தெளிவாகக் காணப்படுகிறது.*



பார்சுவ நாதர் சிற்பமும் கல்வெட்டும்

## முடிவுரை:




ஐவர் மலை பற்றிய நாளிதழ்ச் செய்தி

பாண்டிய மன்னரான வரகுண பாண்டியன் கால சமணர் மலை என்பதற்கு சான்றாக இங்கு 13 பிராமி கல்வெட்டுகள் உள்ளன. தவிர, அழகிய 16 தீர்த்தங்கரர் சிற்பங்களும் உள்ளன. அச்சிலைகளுக்கு கீழே சிலையை செய்வித்தோரின் பெயர்கள் கல்வெட்டில் உள்ளன.

சமணர் படுக்கைகள் வரிசைக்கு நான்கு, ஐந்து என்றிருக்கும். அதை வைத்துதான் இங்கு பஞ்சபாண்டவர்கள் ஐவரும் வந்து தங்கினர் என மக்கள் கருதி, ஐவர் மலை என்ற பெயரை உருவாக்கினர்.

ஐவர் மலையில் பிராமிக்கல்வெட்டுகள் - செய்திப்பிழை

*நாளிதழ்களில் வரலாற்றுச் செய்திகளை வெளியிடுகையில் இயன்றவரையிலும் பிழைகள் தவிர்த்தல் நலம் என்பது தற்போது பல செய்திகளைப் பர்ர்க்கையில் தோன்றும் கருத்து. ஐவர் மலைக் கல்வெட்டுகள் அனைத்துமே - ஓரிரு தமிழ் எழுத்துக் கல்வெட்டுகள் தவிர - பாண்டியர் கால வட்டெழுத்துக் கல்வெட்டுகள். ஆனால் இங்கு பதின்மூன்று பிராமிக் கல்வெட்டுகள் உள்ளன என்பதாக வரலாற்று ஆய்வாளர் கே.ராஜா என்பவர் ''தினமலர்'' நாளிதழில் (08-08-2010) எழுதியிருந்தது எனக்கு வியப்பை மட்டுமே அளித்தது. வட்டெழுத்துக் கல்வெட்டுகளைப் பிராமிக் கல்வெட்டுகள் என்று பிழையாகப் புரிந்துகொள்வதே இதற்குக் காரணம்.*

*தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.*
*doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.*

# 6. கோவைப்பகுதியில் ஒரு வரலாற்றுச் சிற்றுலா

**— துரை.சுந்தரம்**

***முன்னுரை:***

*கோவை அரசுக் கலைக் கல்லூரியின் முன்னாள் மாணவன் என்ற முறையில் எனக்கு அக்கல்லூரியுடன் தொடர்பு உண்டு. குறிப்பாக வரலாற்றுத்துறையுடன். முதுகலை வரலாறு படிக்கும் மாணவர்கள், வரலாற்றுத் தொடர்புள்ள இடங்களுக்குச் செல்லுதல் மூலம் அவர்கள் நூற்சூழலோடு களச்சூழல் உணர்வையும் பெறுகின்ற வாய்ப்பு ஏற்படும் என்று பேராசிரியர்களிடம் உரையாடுவது வழக்கம். அவ்வாறான களப்பயணங்கள் ஏனோ பெரும்பாலும் நிகழுவதில்லை. கல்லூரிகளின் நிருவாக முறையில் ஏதேனும் நடைமுறை இடர்ப்பாடுகள் இருக்கக் கூடும். எனவே, அண்மையில், அக்கல்லூரியின் வரலாற்றுத்துறைப் பேராசிரியர் முனைவர் ஜூலியானா அவர்கள் என்னைத் தொடர்பு கொண்டு, கோவையின் சுற்றுப்பகுதியில் வரலாற்றுத் தடயங்கள் உள்ள ஒரு சில இடங்களுக்கு மாணவர்களை அழைத்துச் செல்கிறோம்; நீங்களும் உடன் வாருங்கள் என அழைத்தபோது மகிழ்ச்சியுற்றேன்.*

***தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சங்கம்:***

*மேற்படிப் பயணத்தில் பார்க்கவேண்டிய இடங்களைத் தெரிவு செய்து, வழிகாட்டி அழைத்துப்போனது கோவையில் உள்ள தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சங்கம் என்னும் ஓர் அமைப்பு. இது, தமிழக மரபிலும், கோவை வரலாற்றிலும் ஆர்வமுள்ள ஓர் இளைஞர் அணி. அண்மையில் வரலாற்றுத் தேடல் மூலம் சில தொல்லியல் கண்டுபிடிப்புகளை இவர்கள் இனம் கண்டுள்ளனர். பள்ளி, கல்லூரி மாணவர்களை இது போன்ற பயணங்களில் ஈடுபடுத்தி வரலாறு, தொல்லியல் பற்றிய விழிப்புணர்வையும், அறிமுக அறிவையும் வழங்கி வருகின்றனர்.*

***பயணம் தொடங்கியது:***

*பயண நாளன்று காலை, அரசு கலைக்கல்லூரியிலிருந்து ஒரு சிற்றுந்தில் புறப்பட்டோம். இருபது மாணவர்களுடன் பேராசிரியரும் நானும். பார்வையிடவேண்டிய இடங்களில் முதலாவது உக்கடம் பகுதியில் அமைந்துள்ள புலிகுத்திக்கல். உக்கடம் புறவழிச்சாலையோரத்தில் இந்தப்புலிகுத்திக்கல் அமைந்துள்ளது. சிற்றுந்து அந்த இடத்தை அணுகும் முன்பே அங்கு நமது மரபுசார் சங்கத்து இளைஞர் அணி வந்திருந்தது. நான்கு பேர் கொண்ட அணி. இரு சக்கர வண்டிகள் இரண்டு. அமைப்பின் பொறுப்பில் செயல்படும் விஜயகுமார், ஆனந்தகுமார் ஆகிய இருவர்; மற்றுமிருவர் உறுப்பினர். அனைவரும் தனியார் நிறுவனங்களில் பணியாற்றும் இளையர். விடுமுறை நாள்களில் வரலாற்றைத் தேடும் பயணர்கள்.*

***உக்கடம் புலிகுத்திக்கல்:***

*கொங்குநாட்டின் கோவைப்பகுதி பண்டைய நாள்களில், மலை சார்ந்த குறிஞ்சி நிலத்தை அரணாகக் கொண்ட காடு சூழ்ந்த முல்லை நிலமாக இருந்த காரணத்தால், கால்நடை*

வளர்ப்புச் சமுதாயமே மேலோங்கியிருந்தது. கால்நடைகளே செல்வமாகக் கருதப்பட்ட காலங்களில், கால்நடைகளைக் காத்தல் பெரும்பணியாயிருந்தது. கால்நடைகளைக் கவர்வதிலும், அவற்றைக் காத்தலிலும் வீரர்கள் போரிடுதல் இயல்பான சமூக நிகழ்வாயிருந்தது. அது போலவே, கால்நடைகளைக் காட்டு விலங்குகளினின்றும் காப்பதற்காகக் காவல் வீரர்கள் விலங்குகளோடு சண்டையிட்டு விலங்குளைக் கொல்லுதலும், சண்டையின்போது வீரர்கள் இறந்துபடுதலும் மிகுதியாக நிகழ்ந்தன. இவ்வகை வீரர்களுக்கு நடுகல் எடுப்பித்து வழிபடுதல் நாட்டார் மரபு.



உக்கடம் -புலிகுத்திக்கல் கோயில்

இவ்வகை நடுகற்கள், கோவைப்பகுதியில் புலிகுத்திக்கல் என்னும் பெயரில் வழங்கும். இடைக்காலக் கொங்குச் சோழரின் ஆட்சியின் கீழ் கொங்குப்பகுதி வந்த பின்னர் வேளாண்மை செழிப்புற்றது. கொங்குச் சோழர் ஆட்சிக்கு முன்புவரை கோவைப்பகுதி முன்னிலையில் ஒரு நகரப்பகுதியாக இருந்திருக்கவில்லை. கோவைக்கருகில் அமைந்துள்ள பேரூரே பெரியதொரு நகரமாக இருந்தது. கொங்குநாட்டின் இருபத்து நாலு நாட்டுப்பிரிவுகளில் பேரூர் நாடும் ஒன்றாக இருந்தது. கோவைப்பகுதி, காடுகள் சூழ்ந்த பகுதியாகவும், கால்நடை வளர்ப்புப் பகுதியாகவும் இருந்துள்ளது. பின்னரே, கொங்குச்சோழர்காலக் கல்வெட்டுகளின்படி, கி.பி. 10-ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் கோவன்புத்தூர் என்று புதியதாக ஓர் ஊர் அமைக்கப்பட்டதாகவும், அது பேரூர் நாட்டில் இருந்ததாகவும் செய்தி காணப்படுகிறது. காடழித்து ஊராக்கப்பட்ட கோவன்புத்தூர், நாயக்கர் காலத்திலும், காடுகள், கால்நடை வளர்ப்பு, கால்நடைகளை விலங்குகளிடமிருந்து காத்தல் ஆகிய கூறுகளைக் கொண்டிருந்தது. எனவே, மேற்படி உக்கடம் புலிகுத்திக்கல் நாயக்கர் காலத்தில் எழுப்பப்பட்ட நடுகல்லாகும்.



புலிகுத்திக்கல் சிற்பம்-முழுத்தோற்றம்



அண்மைத் தோற்றம்



ஒத்தக்கால் மண்டபம் - பெருமாள் கோயில்-முன்புறத்தோற்றம்



சாம்பல் மேடும் கோட்டை மண் சுவரும்

உக்கடம் நடுகல் ''மதுரை வீரன் சாமி'' என்னும் பெயரில் வழிபடப்பட்டுவருகிறது. ஒரு வகையில், வழிபாடு காரணமாகவே இந்த நடுகல் இதுவரை அழிவுக்குட்படாமல் ஒரு தொல்லியல் எச்சமாகப் பாதுகாக்கப்பட்டு வந்துள்ளது எனலாம்.

**ஒத்தக்கால் மண்டபம்:**

*அடுத்து நாங்கள் சென்ற இடம். ஒத்தக்கால் மண்டபம். கோவை - பொள்ளாச்சி சாலையில் அமைந்துள்ள ஓர் ஊர். நூறு கால் மண்டபம், ஆயிரங்கால் மண்டபம் எனப் பல மண்டபங்கள் இருக்கையில், இங்கே, ஒற்றைக்கால் கொண்ட மண்டபம் எவ்வாறு இருக்கமுடியும்? ஊர்ப்பெயருக்கு ஏதோ ஒரு காரணம் இருக்கவேண்டும். இங்குள்ள நவகோடி நாராயணப் பெருமாள் கோயில்தான் எங்கள் வரலாற்றிலக்கு. கோயிலைச் சுற்றியுள்ள இடம் பெருங்கற்காலத்தைச் சேர்ந்த (MEGA LITHIC PERIOD) ஓரிடம். இவ்வகை இடங்கள் "சாம்பல் மேடு" என்று மக்கள் வழக்காற்றில் வழங்கும். இங்கு, பழங்கால மக்களின் வாழ்விடமும், ஈமக்காடும் இருந்துள்ளன என்பதற்குச் சான்றாக, முதுமக்கள் தாழிகள், கருப்பு சிவப்புச் சிறு பானைகள் ஆகியவற்றின் துண்டுப்பகுதிகள் எச்சங்களாக மண்மேடுகளில் காணப்படுகின்றன. இங்குள்ள மற்றுமொரு சிறப்பு, இம்மண்மேடுகளில் உள்ள மண்ணைக் கொண்டே கோட்டைச் சுவர் போல எழுப்பப்பட்ட, இடிந்த நிலையில் உள்ள சுவர்ப்பகுதிகள். இச்சுவர், திப்பு சுல்தான் காலத்தில் ஏதோ ஒரு பாதுகாப்புக் கருதி இப்பகுதி மக்கள் எழுப்பியது எனக் கருதப்படுகிறது. சுவர்க் கட்டுமானத்தின் சரியான பின்னணிக்காரணம் தெரியவில்லை.*

*இங்குள்ள பெருமாள் கோயிலில், கல்வெட்டு பொறிக்கப்பட்ட பல பலகைக் கற்கள் முன்பு இருந்துள்ளன. தற்போது இரண்டு கல்வெட்டுப்பலகைகளைக் கோயில் வளாகத்தில் வைத்துள்ளனர். இவை நாயக்கர் காலத்தவையாக இருக்கலாம். தொல்லியல் துறையினர் வெளியிட்ட கோவை மாவட்டக் கல்வெட்டுகள் நூலில் இவை பதிக்கப்படவில்லை. ஆனால், பேராசிரியர் அவிநாசி மா.கணேசன் அவர்கள், முனைவர் சூலூர் இரா.ஜெகதீசன் அவர்களோடு இணைந்து வெளியிட்ட "கொங்குநாட்டுக் கல்வெட்டுகள்-கோயம்புத்தூர் மாவட்டம்" என்னும் நூலில் ஒரே ஒரு கல்வெட்டு பதிவாகியுள்ளது. கல்வெட்டின் பெரும்பகுதி சிதைந்துள்ளது; கல்வெட்டில் அரசர் காலக் குறிப்பு இல்லை; கல்வெட்டில் குறிப்பிடப்பெற்ற சக ஆண்டும், தமிழ் ஆண்டும் பொருந்தி வரவில்லை என்பதாக நூலாசிரியர் குறிப்பிடுகிறார். எங்களது பயணத்தில் பார்த்த முதல் கல்வெட்டு இதுதான் என்பதாலும், இக்கல்வெட்டின் பாடம் தொல்லியல் துறையின் நூலில் இடம்பெறாததாலும் அதன் பாடத்தையும் செய்தியையும் இங்கு தந்துள்ளேன்.*





கல்வெட்டின் தோற்றங்கள்

**ஒத்தக்கால் மண்டபம் பெருமாள் கோயிலின் கல்வெட்டின் பாடம்:**

1 ஸ்வஸ்திஸ்ரீ செகாப்த்தம் 1410
2 1410 இதன்மேல் செ
3 ல்லாய் நின்ற பார்த்திப
4 வருஷம் அற்பசி மாதம்
5 15 நவகோடி நாரா
6 யணப் பெருமாளுக்கு அ
7 ன பத்த வதொ................
8 ருமம் ..........மை மு.........ஆளுக்கட்டி
9 ..................விட்டபடிக்கு வழக்கப்பட்டு
10 தங்காரிக்கன் சந்தனம்
11 12 மா பாக்குமிழகும் அரை மா..........
12 ப்பறுசே வெல்லம் மாகாணி எ
13 பேறப்பட்ட தீர்வையில்
14 ட்டன் அரை மாவரை
15 யால் கூடி வருகையில் விரப
16 .............யக் கரையல்வர்களு
17 ..............ம்மக் கையிலாசப்
18 ..................ல்ல பட
19 நாயகன்...........யந்கட
20 காயிந
21 மாதநட்டார் மாந்தான்
22 மம் பாபால.........நடத்த வரு
23 வதாகளு செல் பாகம்.....முட்
24 டாமல்த் தேவக் காரியத்தை
25 விலக்கினவன் கெங்கை கரையில்

*நவகோடி நாராயணப் பெருமாள் கோயிலுக்கு வழிபாட்டிற்காகக் கொடை கொடுக்கப்பட்டுள்ளது என்பது கல்வெட்டுச் செய்தி. பாக்கு, மிளகு, வெல்லம், சந்தனம் ஆகியவை கொடைப்பொருள்கள். கல்வெட்டில் குறிக்கப்பெறும் காலக் கணக்கு சரியில்லை. சக ஆண்டு 1410-க்கு இணையான ஆங்கில ஆண்டு 1488. பார்த்திப ஆண்டு தொடங்குவது 1405-இல். இரண்டும் பொருந்திவரவில்லை. நேரில் கல்வெட்டைப் பார்க்கும்போது 12-ஆவது வரியில் உள்ள "வெல்லம்" என்னும் சொல் தெளிவாகத் தெரிந்தது. ஒளிப்படத்தைக் கணினியில் பெரிதுபடுத்திப் பார்த்தாலும் கல்வெட்டைப் படிக்க இயலவில்லை. வரி 22-இல் வருகின்ற "பாபால" என்ற சொல் கணினியில் "பரிபால" என்பதாகப் புலப்பட்டது. கோயிலுக்கு அளிக்கப்பட்ட தன்மம் காக்கப்படவேண்டும் என்பதைக் குறிக்கப் "பரிபாலனம்" என்னும் வடசொல் எழுதப்படும். எனவே "பாபால" என்பது "பரிபால(னம்)" என்பதாகவே இருக்கக் கூடும். கல்வெட்டின் இறுதியில் (25-ஆவது வரியில்) உள்ள "கெங்கை" என்னும் சொல், தன்மத்துக்கு அழிவு செய்வோர் கங்கைக் கரையில் காராம்பசுவைக் கொன்ற பாவத்தை அடைவார்கள் என்பதைக் குறித்து வருகின்ற கல்வெட்டுத் தொடரின் ஒரு பகுதியாகும்.*

**குமுட்டிபதிப் பாறை ஓவியம்:**

*அடுத்து நாங்கள் செல்லவேண்டிய இடம் குமுட்டிபதி. தொல்லியல் தடயங்களில் ஒன்றான பாறை ஓவியங்கள் அமைந்த பகுதி. ஒத்தக்கால் மண்டபத்திலிருந்து பிரியும் சாலை ஒன்று அவ்வூருக்குச் செல்கிறது. சிறிது தொலைவு சென்றதுமே, சாலையோரத்தில், மீண்டும் ஒரு புலிகுத்திக்கல் கண்டோம். மேலும் சற்றுத்தொலைவு சென்றதுமே சாலையோரத்தில் கருப்பராயன் கோயில் வீதி முனையில், எழுத்துகள் உள்ள ஒரு கல்லைப் பார்த்தோம். சிற்றுந்திலிருந்து இறங்கி நெருங்கிப் பார்க்கையில், எழுத்துகள் மிகத் தேய்ந்துபோன நிலையில் கல்வெட்டு இருந்ததை அறிந்தோம். மூன்று வரிகள் இருந்தன. "குமரன்" , "முருகன்" போன்ற சொற்கள் காணப்பட்டன. மிகப் பிற்காலத்துக் கல்வெட்டு. அருகில் ஊர் மக்களும் சூழ்ந்துகொண்டு கல்வெட்டுச் செய்தியை அறியும் ஆவலைத்தெரிவித்தார்கள். ஆனால், கல்வெட்டு படிக்கும்படியாயில்லை என்பதில் அனைவர்க்குமே ஏமாற்றம்தான். மேலே பயணம் தொடர்ந்தது. குமுட்டிபதி ஊரை அடைந்து, அங்கிருக்கும் குன்றை நெருங்கினோம். குன்றின் அடிவாரத்திலேயே தரைப்பகுதியிலிருந்து சற்றே பாறையின்மீது ஏறியவுடன், எதிரே பெரும் சுவர் போலச் சரிந்த ஒரு பாறைப்பரப்பு. பாறைப்பரப்பு முடியும் இடத்தில் பாறை கவிந்து இயற்கையாக ஒரு பெரிய குகைத்தளத்தை உருவாக்கியிருந்ததைக் கண்டோம். குகைக்குள் கூரைப்பகுதியில் ஓவியங்கள் வரையப்பட்டிருந்தன. மூவாயிரம் முதல் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரான ஒரு காலகட்டத்தில் இவ்வோவியங்கள் வரையப்பட்டிருக்கலாம் என்பது தொல்லியலாளரின் கணிப்பு. ஓவியங்கள், வெள்ளை நிறக்கோடுகளால் அமைந்தவை. White Ochre என ஆங்கிலத்தில் சொல்வார்கள். செங்காவி வண்ணத்திலும் பாறை ஓவியங்கள் வரையப்படுவது உண்டு. குமுட்டிபதியில் உள்ள ஓவியங்களில் ஒரு யானை உருவமும், தேர் போன்ற ஒரு உருவமும் காணப்படுகின்றன. தேரைப் பலர் கூடி இழுத்துச் செல்வதைப்போல் ஓவியம் காணப்படுகிறது. அருகிலேயே உள்ள மற்றொரு பாறையில் மனித உருவங்கள் வரையப்பட்டுள்ளன. வரலாற்றுக் காலத்துக்கு முந்தைய தொல்லியல் எச்சங்களும் கோவை நகரின் அருகிலேயே இருப்பது சிறப்பு.*

*குமுட்டிபதிப் பாறை ஓவியங்களைப் பார்த்து முடியும்போது பகலுணவு நேரம் நெருங்கியிருந்தது. அன்று முழுதுமே கோடை வெயிலின் தாக்கம் கடுமையாக இருந்தது. களைப்போடு பசியும் சேர்ந்து கொண்டபோது, கல்லூரிப் பேராசிரியரின் ஏற்பாட்டில் சுவையான உணவு உண்டதும் களைப்பு கலைந்து புத்துணர்வோடு தொல்லியல் பயணத்தின் அடுத்த இடம் நோக்கி நகர்ந்தோம். இங்கே ஒன்றைக் குறிப்பிடவேண்டும். மரபு சார் சங்கத்து இளைஞர்கள், கடும் வெயிலிலும் இரு சக்கர வண்டிகளில் தொடர்ந்து சிற்றுந்துக்கு வழிகாட்டியவாறே பயணத்தைத் தொடர்ந்தார்கள் என்பதுதான் அது. வரலாற்றின்மீது உள்ள ஆர்வமும், சேவைப்பண்பும்.*

***சுண்டக்காமுத்தூர்-நாயக்கர்காலக் கிணறு:***

*குமுட்டிபதியை அடுத்து நாங்கள் சென்ற இடம் சுண்டக்காமுத்தூர். குமுட்டிபதியிலிருந்து ஒரு குறுக்குச்சாலை வழியே கோவைப்புதூரைக் கடந்ததும் வருகின்ற ஊர். அங்கே, ''பிளேக்'' மாரியம்மன் கோயிலின் பின்புறம் ஒரு பழங்காலக் கிணறு. இக்கிணறு, நீண்ட காலமாகத் தூர்ந்து போய் மண்ணும், புதர்களும் மூடிய நிலையில் இருந்துள்ளது. நமது மரபுச் சங்கத்து இளைஞர் குழு, நீண்ட உழைப்புக்குப்பின்னர் இக்கிணற்றைத் தூர் நீக்கிப் பலரும் பார்த்து மகிழுமாறு வெளிப்படுத்தியுள்ளார்கள். இது போன்ற தன்னார்வலரின் பணிகளாலேயே தொல்லியல் தடயங்கள் பலவும் வெளிப்படுத்தப்பட்டு வருகின்றன என்பது குறிப்பிடத்தக்கது. ஊத்துக்குளியில், நாயக்கர் காலப் படிக்கிணறு ஒன்று ''இயல் வாகை'' என்னும் இளைஞர் அமைப்பினரால் இவ்வாறு வெளிப்பட்டதும், அதைச் சென்று பார்த்ததும் நினைவுக்கு வந்தது.*

*சுண்டக்காமுத்தூர் கிணறும் நாயக்கர் காலத்தைச் சேர்ந்தது. சதுரமாக வெட்டப்பட்ட ஆழமான கிணற்றுப் பகுதியின் சுற்றுச் சுவரும், கிணற்றுப்பகுதிக்குக் கீழிறங்கிச் செல்லும் படிகளைக்கொண்ட குறுகலான நீள் வழியும் அதன் சுற்றுச் சுவரும் ஆகிய அனைத்தும் கல் கட்டுமானங்கள். கற்கள் செம்மையான நிறத்தில் அமைந்து அழகான தோற்றத்தை அளித்தன. கட்டுமானச் சுவர்ப்பகுதியில், ஆங்காங்கே புடைப்புச் சிற்பங்கள். அவற்றில் பெரும்பாலானவை மீன் உருவங்கள். வளமைச் சின்னங்களைக் குறிப்பதான குறியீடாக மீன் உருவங்களைப் படைப்பது மரபு. சுவர்ப்பகுதியின் மேல் பகுதியில் வரி வரியாகச் செதுக்கல்கள். இந்தச் செதுக்கல்களைப் பல மண்டபங்களில் காணலாம். கிணற்றைச் சுற்றியுள்ள வளாகத்தில் உடைந்த நிலையில் ஒரு சிறிய நந்திசிலையும், கோயில்களில் காணப்படும் கோட்டம் என்னும் பகுதியில் அமைந்த ஒரு தோரணச் சிற்பக்கல்லும் இருந்தன. இத்தோரணச் சிற்பத்தில் பேரூர்க் கோயிலில் உள்ளதுபோல மனித முகம் ஒன்று செதுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. நந்தியும், தோரணமும், வேறெங்கோ இருந்த ஒரு கோயிலின் துண்டுச் சிற்பங்களாக இருக்கக்கூடும்.*

***வேடபட்டிக் குளம்:***

*சுண்டக்காமுத்தூர் நாயக்கர்காலக் கிணற்றைப் பார்த்துவிட்டு அடுத்து நாங்கள் சென்ற இடம் வேடபட்டிக் குளம். இது கோவைக்கருகிலுள்ள பெரிய குளங்களுள் ஒன்று. இதன் ஒரு பகுதி கோளராம்பதிக் குளம் என்னும் பெயரால் அழைக்கப்படுகிறது. குளம் முழுதும் கருவேல மரங்களின் தொகுப்பு. ஒவ்வொரு மரத்தைச் சுற்றிலும் மண்மேடு. மற்ற இடங்கள் யாவும் பள்ளம். கடந்த சில மாதங்களாகக் குளத்தில் தூர் எடுக்கப்பட்டு, அதன் காரணமாகக் குவிந்த மண் முழுதும் குளத்தின் கரையிலேயே கொட்டப்பட்டதன் மூலம் குளத்தின் கரை நன்கு உயர்த்தப்பட்ட நிலையில் உள்ளது.*



நாயக்கர் காலக் கிணறு



மீன் - புடைப்புச் சிற்பமும், வரிச் செதுக்கலும்



தோரணச் சிற்பம்-மனித முகத்துடன்



தலை உடைந்த நந்திச் சிற்பம்

மரங்களின் அண்மையைத் தவிர்த்து மற்ற இடங்களில் மண்ணைத் தோண்டியதாலேயே பள்ளமும் மேடும். குளத்துள் இறங்கிச் சற்று நடந்ததுமே, மரபுச் சங்க இளைஞர்குழு ஓரிடத்தில் எங்களை நிறுத்தி, ஒரு மரத்தடி மண்மேட்டைக் காண்பித்தார்கள். அங்கே, மண் தாழிகளின் சிறு சிறு துண்டு ஓடுகள். அவை தடித்துக் காணப்பட்டன. தொல்லியல் எச்சங்களான முதுமக்கள் தாழிகளின் ஓடுகளே அவை. இந்த இடத்தில்தான், அண்மையில் இந்த மரபு சார் சங்கக் குழுவினர், தொல்லெழுத்தான 'தமிழ் பிராமி'' எழுத்துப்

பொறிப்புக் கொண்ட தாழிப்பகுதியைக் கண்டெடுத்தார்கள். கொங்குப்பகுதியில் கிடைத்த தமிழ் பிராமிப் பொறிப்புகளில் இக்கண்டுபிடிப்பு சிறப்புக்குரியது. இதற்கு முன்னர் கிடைத்த எழுத்துப் பொறிப்புகளில் ஆள் ஒருவரின் பெயர் மட்டுமே காணப்பெறும். ஆனால், இங்கே கிடைத்த தாழித்துண்டில், "ஈமத்தாழி" என்னும் சொல்லே இருந்தமை இதற்கு முன்னர் கண்டிராத புதுமை. இந்தச் சொல்லைத் தொடர்ந்து "ன" என்னும் எழுத்தும் உள்ளது. இப்பகுதியை முறையாகத் தொல்லியல் துறையினர் ஆய்வு செய்யவேண்டும். தொல்லியல் ஆய்வுகளுக்கு ஏனோ அரசு முன்னுரிமை அளிப்பதில்லை.



வேடபட்டிக் குளம்



மண்மேட்டில் தாழி புதைந்திருந்த இடம்



"ஈமத்தாழி" - பொறிப்பு

**வேடபட்டித் தூம்பு (மதகு):**

*வேடபட்டிக் குளத்தின் இன்னொரு பகுதியில், அண்மையில் நமது மரபுசார் சங்கக் குழுவினர் கண்டுபிடித்த ஒரு மதகைப் (தூம்பு) பார்வையிட்டோம். தென் மாவட்டங்களில் மதகு, தூம்பு, கலிங்கு என்னும் பெயர்களில் வழங்கும் நீர்ப்பாசன அமைப்புகளின் எண்ணிக்கை மிகுதி. கோவைப்பகுதியில் மதகுகளின் எண்ணிக்கை குறைவே. எனவே, வேடபட்டிக் குளத்தில் மதகு கண்டுபிடிக்கப்பட்டதும் சிறப்பானதே. இந்த மதகில் சில புடைப்புச் சிற்பங்கள் உள்ளமை, வழக்கமாகக் காணும் மதகுகளினின்றும் இதை வேறுபடுத்துகிறது. ஒட்டகம், பாண்டியரின் இலச்சினை, கத்தி ஆகிய மூன்று சிறு புடைப்புச் சிற்பங்கள் ஒருசேர இதில் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. மூன்று வேறுபட்ட பொருள்கள். ஒட்டகம், ஒரு சில கோயில்களில் காணப்படும் வளமைச் சின்னங்களான மீன், முதலை ஆகியவற்றோடு தொடர்புடையது. எனவே, ஒட்டகம் வளமைச் சின்னத்தைக் குறிக்கும் என்பது ஒரு கருத்து. ஒட்டகம், அரேபிய வணிகர்களோடு தொடர்புடையது எனக் கொள்வோமானால் அரேபிய வணிகர்கள் இந்த மதகினை அமைப்பதில் பங்கேற்றனர் எனலாம். பாண்டியரின் மீன் இலச்சினை உள்ளதால் 13-ஆம் நூற்றாண்டில் கொங்கு நாட்டை ஆண்ட கொங்குப் பாண்டியரோடு இந்த மதகு தொடர்புடையது எனலாம்.*



தூம்பு

இவற்றுக்கு முற்றிலும் வேறான கத்தியின் உருவம் எதைக் குறிக்கிறது எனத் தெரியவில்லை. இது ஆய்வுக்குரியது. மதகைக் கண்டுபிடித்த மரபுச் சங்கத்தவரான விஜயகுமார், இது ஒரு "ஆண்டெனா" *(ANTENNA)* கத்தி என்று கருதுவதாக நம்மிடம் கூறினார். "ஆண்டெனா" *(ANTENNA)* கத்தி என்பது பின்-வெண்கலக் காலக் கருவி என்று அறிகிறோம். 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த *HALLSTATT* காலத்ததான ஒரு "ஆண்டெனா" கத்தியின் படத்தையும், இந்திய "ஆண்டெனா" கத்தி என்று ஒரு செப்புக் கத்தியின் படத்தையும் இங்கே பார்க்க. பின்னதன் காலம் கி.மு.1500-500 எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்படங்கள் யாவும் இணையத்திலிருந்து எடுக்கப்பட்டவை. வேடபட்டி மதகுச் சிற்பத்திலுள்ள கத்தி, "ஆண்டெனா" வகைக் கத்தியா என்பது ஆய்வுக்குரியது. இம்மதகைத் தொல்லியல் துறையினர் வந்து பார்வையிட்டுள்ளனர் என அறிகிறோம். அத்துறையின் ஆய்வு முடிவுகள் என்ன என்பது தெரியவில்லை.



"ஆண்டெனா" கத்தி



ஆண்டெனா கத்தி-இந்தியா-கி.மு.1500-500



ஆண்டெனா கத்தி - விக்கிப்பீடியா



பாண்டியர் இலச்சினை



ஒட்டகம்

குளத்துள் அனைவரும் குழுமி நின்று ஒளிப்படம் எடுத்துக்கொண்டோம். மாணவர்கள் வழக்கமாகத் தங்களின் இயல்புக் கல்விச் சூழலில், வரலாற்றுப் பாடம் என்னும் வலைப்பின்னலில் நிலைத்திருப்பர் எனலாம். அந்தச் சூழலிலிருந்து அவர்கள் வெளியே வந்து மகிழ்ந்ததை இப்பயணத்தின்போது நேரில் கண்டேன். வரலாற்றறிவும் சிறிது பெற்றிருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. இவ்வகையில், கோவை மரபு சார் ஆர்வலர் சங்கத்தவர் பெரும் தூண்டுகோலாக இருந்தனர் என்பதிலும் ஐயமில்லை. ஏனெனில் மாணவர்கள் வரலாற்றுப் பயணம் பற்றிய தங்கள் கருத்துகளை விழியப் பதிவு செய்தமையே சான்று. வேடபட்டிக் குளத்துடன், மரபுச் சங்கத்தினர் தம் பங்களிப்பை முடித்துக்கொண்டு விடைபெற்றனர். இதுபோன்ற களப்பணி தொடரவேண்டும் என்பதான எண்ண முடிவு இரு சாரரிடமும் ஏற்பட்டது.

***பயணத்தின் இறுதியில் பேரூர்க் கோயில்:***

*பயணத்தின் இறுதிக்கட்டத்தில், பேரூர்க் கோயிலைப் பார்த்து ஓரிரு கல்வெட்டுகளைக் கண்டறிதலும் ஒரு நிகழ்வாக இருந்தது. கோயிலின் தென்புறச் சுவர்களில் ஒன்றிரண்டு கல்வெட்டுகளைப் படித்துக்காண்பித்து சில எழுத்துகளை மாணவர்களுக்கு அறிமுகப்படுத்தினேன். வடபுறச் சுவரில், நீர்மேலாண்மை பற்றிய சிறப்பு வாய்ந்த ஒரு*

*கல்வெட்டு உள்ளது. அதை, ஆர்வமுள்ள சில மாணவர்க்குக் காண்பித்துச் செய்தியைப் பகிர்ந்துகொண்டேன்.*

***தேவி சிறை என்றோர் அணை:***

*13-ஆம் நூற்றாண்டில், கி.பி. 1224-ஆம் ஆண்டு. கொங்குச் சோழன் வீரராசேந்திரன் கொங்குநாட்டை ஆண்டுகொண்டிருந்தான். அது அவனது பதினேழாவது ஆட்சியாண்டு. நொய்யல் நீர் பெருகி வளமாக ஓடிக்கொண்டிருந்ததில் வியப்பில்லை. நொய்யலின் குறுக்கே ஏற்கெனவே கோளூர் அணை என்றோர் அணை இருக்கின்றது. இந்நிலையில், வேளாண்மைத் தேவைக்கென இன்னொரு அணை தேவைப்பட்டதன் காரணமாகத் தேவிசிறை என்னும் பெயரில் புதியதோர் அணை கட்டப்பெற்றது. இதுவும் அப்பகுதி மக்களின் வேண்டுகோளை ஏற்று அரசன் ஆணையிட்ட பின்னரே நிகழ்ந்தது. புதிய அணை, கோளூர் அணைப்பகுதியின் மேற்பகுதியில் கட்டப்பெற்றதால் தேவி சிறை அணை மேட்டிலும், கோளூர் அணை பள்ளத்திலும் அமைந்தன. தேவி சிறை அணையில் நீர் தேக்கினால் கோளூர் அணைக்கு நீர் வராது. ஆனால், அரசன் தன் ஆணையில், கோளூரணைக்குச் சேதம் வாராதபடிப் புது அணை கட்டப்படவேண்டும் என்று குறிப்பிடுகின்றான். தேவி சிறையில் நீரைத் தேக்கும்போது கீழுள்ள கோளூர் அணை நீர் நிரம்பிய பின்னரே தேக்கவேண்டும் என்று அரசன் ஆணையிடுகிறான். நீர் மேலாண்மையில் மன்னர் காலத்தில் இருந்த அறமும், அறிவும், அக்கறையும் தற்காலத்தே சற்றும் கற்பனையிலும் காண இயலா.*

***கல்வெட்டின் பொன் வரிகள்:     (க.வெ.எண்: 116/2004-கோவை மா. கல்வெட்டுகள்)***

*1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் கோனேரின்மை*
*2 கொண்டான் பேரூர் நாட்டு புகலிடங் குடுத்த சோ*
*3 ழச் சதுர்வேதி மங்கலத்துச் சபையாற்கும்*
*4 பேரூர் ஊரார்க்கும் நம்மோலை குடுத்தபடியா*
*5 வது  இவர்கள் தங்களூற்கு நீர்த்தட்டப் பெறவே*
*6 நமக்கு வந்தறிவித்தமையிலிவர்கள் தங்களூரெல்*
*7 லையில் தேவி சிறையென்கிற அணையடைத்து வாய்க்காலும்*
*8 வெட்டிக் கோளூரணைக்குச் சேதம் வாராதபடி யவ்வணைக்கு*
*9 ப்பின்பாக நீர் விட்டுக்கொள்ளப்பெறுவார்களாகவும்........*

***முடிவுரை:***

*பேரூர்க் கோயிலும் கல்வெட்டும் பார்த்த, படித்த நல்ல நினைவுகளோடு பயணம் நிறைவு பெற்றது. மாணவப் பருவத்தை நினைவூட்டும் வகையில், நான் பயின்ற கல்லூரியின் நிகழ்காலப் பேராசிரியர், மாணவர் ஆகியோருடன் பயணம் நிகழ்ந்தமை மறக்கவியலாப் பொழுது.*

*தொடர்பு:  துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.*
*doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.*

# 7. வீரகேரளர் ஆட்சியில் கொங்குநாடு

**— துரை.சுந்தரம்**

***முன்னுரை:***

*கோவையில் இயங்கிவரும் வாணவராயர் அறக்கட்டளையினர் மாதந்தோறும் நடத்திவருகின்ற அறக்கட்டளைச் சொற்பொழிவு நிகழ்வுகளில், 2018-ஜூன் மாதச் சொற்பொழிவு மேற்கண்ட தலைப்பில் நிகழ்ந்தது. உரையாற்றியவர் முனைவர் இரா.ஜெகதீசன் அவர்கள். அச் சொற்பொழிவில் கேட்ட வரலாற்றுச் செய்திகளின் பகிர்வு இங்கே:*

***கொங்கு நாட்டின் வரலாறு:***

*தமிழக வரலாற்றில் கொங்குநாட்டு வரலாறு மிகக் குறைவான ஒன்றாகவே உள்ளது. வரலாற்றுக் காலம் தொட்டு, கொங்குநாடு சிறப்பான பண்பாட்டைக் கொண்டது எனினும் முற்றான வரலாறு அறியப்படாததற்கு வரலாற்றை வெளிப்படுத்தும் முதன்மைச் சான்றுகளான (மூலச் சான்றுகள்) பல கல்வெட்டுச் சான்றுகள் வெளிவராமையே காரணமாகும். தென்னிந்தியக் கல்வெட்டுகளின் இருபத்தாறாம் தொகுதியில் கொங்கு நாட்டுக் கல்வெட்டுகள் பதிவாகியுள்ளன. கொங்கு நாட்டில், ஈரோட்டுக்கருகில் அமைந்துள்ள கொடுமணலில் நடந்த அகழாய்வு பற்றிய அறிக்கை வெளிவரவில்லை; தொல்லியலாளர் கா.ராஜன் அவர்களுக்குப் பின்னரே அகழாய்வுச் செய்திகள் வெளியாயின. கொங்கு நாட்டு வரலாற்றுக்குச் சமூகத்தில் சிறப்பிடம் அல்லது முதன்மையிடம் ஏற்படவில்லை. கல்லூரிகளிலும் வரலாற்றுத்துறைக்கு முதன்மை அளிக்கப்படவில்லை. கோவை கிழார் தொடங்கிப் பலர் எழுதியுள்ள நூல்களில் கொங்குநாட்டு வரலாறு முழுதாக எழுதப்படவில்லை. கோவை கிழாரின் நூலில், கொங்கு நாட்டின் அரசியல் வரலாறு மட்டுமே காணலாம். கோவை கிழார், வீரகேரளரைப் பற்றிக் குறிப்பிடவில்லை. ஆரோக்கியசாமி அவர்களின் நூல் ஆங்கிலத்தில் அமைந்து விட்டதால் கொங்குநாட்டின் பொதுக்குடிகளுக்கு அது எட்டவில்லை. புதுக்கோட்டைப் பேராசிரியர் மாணிக்கம் அவர்கள் தமிழில் எழுதியுள்ள நூல் குறிப்பிடத்தக்கது.*

***வீரகேரளர்:***

*வீரகேரளர் கொங்கு நாடு முழுவதையும் ஆட்சி செய்யவில்லை. கொங்கு நாட்டின் இரு பிரிவுகளுள் ஒன்றான தென் கொங்குப்பகுதியை ஏறத்தாழ இருநூற்றைம்பது ஆண்டுகள் ஆட்சி செய்துள்ள வீரகேரளரைப் பற்றி ஆய்வுகள் நடைபெறவில்லை.*
*தென்கொங்குப்பகுதி ஒரு சிறிய நிலப்பகுதியே. கொங்கு நாட்டின் அடிப்படை வரலாற்றை அறிய, வீரகேரளரின் கொடி வழி, ஆட்சிப் பரப்பு ஆகிய செய்திகளும் தேவை. வீரகேரளரின் கல்வெட்டுகளில் சக ஆண்டுக் குறிப்புகள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஒரு சில கல்வெட்டுகளில் காணப்படுகின்ற வானிலைக் குறிப்புகளைக் கொண்டே வீரகேரளரின் ஆட்சிக்காலம் வரையறை செய்யப்படுகின்றது. பழநிக் கல்வெட்டொன்று, மகாமகத் திருவிழாவுக்கு வீரகேரளர் வழங்கிய கொடையைப் பற்றிக் கூறுகிறது. வீரகேரள அரசன் இவ்விழாவினை நடத்தியுள்ளான். கோவைக் கருகில் உள்ள*

*முட்டம் என்னும் ஊர்க் கோயில் கல்வெட்டு ஒன்றின் துணையுடனும், பழநிக் கல்வெட்டின் துணையுடனும், மற்ற கொங்குச் சோழர் வரலாற்றையும் இணைத்து ஒப்பாய்வு செய்தே வீரகேரளர் வரலாற்றை அறிய முடிகின்றது. சோழர்களின் கரூர்ப் பகுதி வரை சோழர்களின் நேரடி ஆட்சி இருந்தது. நாமக்கல் பகுதி மழகொங்கு என அழைக்கப்பட்டது. இப்பகுதியும் சோழர்களின் நேரடி ஆட்சியில் இருந்தது சோழர்களின் நேரடி ஆட்சி இருந்த பகுதியைச் சோழர்கள், வீரசோழ மண்டலம் என்னும் பெயரில் அழைத்தனர்.*

***தென்கொங்கு:***

*கோவை, பேரூர், பொள்ளாச்சி, ஆனைமலை, கொழுமம் ஆகிய பகுதிகளை உள்ளடக்கியது தென்கொங்குப் பகுதியாகும். தென்கொங்குப்பகுதியையே வீரகேரளர் ஆட்சி செய்தனர் என்று முன்னரே குறிப்பிட்டுள்ளோம். இப்பகுதி, பெரும்பாலும் மலைகளை ஒட்டிய பகுதியாகும். மேலும், இது வணிகப்பகுதியாகவும் இருந்துள்ளது. பாலக்காட்டுக் கணவாயில் அமைந்திருந்த பெருவழியின் வழியாகத் தமிழகத்தின் உள் பகுதிகளில் உரோமானியர் வணிகம் செய்தமை நாம் அறிந்த ஒரு செய்தியாகும். உரோமானிய நாணயங்கள் மிகுதியும் கிடைத்த பகுதியும் தென்கொங்கேயாகும். நொய்யலாறும், அதன் கிளை ஆறுகளான பெரியாறு, சின்னாறு, காஞ்சியாறு, நல்லாறு ஆகிய ஆறுகளும், அமராவதி மற்றும் அதன் துணை ஆறுகளான சண்முகா நதி, பாம்பாறு, தேனாறு, குதிரையாறு, உப்பாறு, நற்காஞ்சியாறு ஆகிய ஆறுகளும் வளப்படுத்திய பகுதி தென்கொங்குப் பகுதியாகும். அமராவதிக்கரைப் படுகைப் பகுதி கரைவழி நாடு என்னும் நாட்டுப்பிரிவாக இருந்தது. இது தவிர வைகாவி நாடு, நல்லூர்க்கா நாடு, பேரூர் நாடு, வாயறைக்கா நாடு, வீரகேரள வளநாடு ஆகிய நாட்டுப் பிரிவுகள் பண்டு இருந்தன.*

***வீரகேரளர்-தோற்றம்:***

*வீரகேரளர் எந்த மரபைச் சேர்ந்தவர் என்பதில் பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. கேரள மரபினர் என்பதாகத் தொல்லியல் அறிஞர் கே.வி. சுப்பிரமணிய ஐயர் கருதுகிறார். தமிழகத் தொல்லியல் துறை இயக்குநராக இருந்த நடன காசிநாதன், வீரகேரளர் களப்பிரர் மரபினர் எனக் கருதுகிறார். வரலாற்று ஆசிரியர் வீ.மாணிக்கம், வீர கேரளர், கோக்கண்டன் மரபினர் என்று கருதுகிறார். கொங்கு மண்டலச் சதகம் வீரகேரளரைப் பாண்டியர் என்று குறிப்பிடுகிறது. முற்காலப் பாண்டிய மன்னன் மானாபரணனின் மகன் வீரபாண்டியனுக்கு வீரகேரளன் என்னும் பெயர் இருந்ததையும், இவன் (வீரகேரளன்) மதுரை அருகே இருக்கும் சோழவந்தானில் கட்டுவித்த விண்ணகரத்துக்கு (பெருமாள் கோயிலுக்கு) வீரகேரள விண்ணகரம் என்று பெயர் சூட்டியதையும் கொங்குமண்டலச் சதகம் கூறுகிறது. வீரகேரளரின் தலை நகராக முதலில் கடத்தூரும், பின்னர்க் கொழுமமும் இருந்துள்ளன. வீரகேரளரின் கல்வெட்டுகளில் பெரும்பாலானவை இவ்வூர்களின் கோயில்களிலேயே காணப்படுகின்றன. வீரகேரளர் கல்வெட்டுகள் வட்டெழுத்துக் கல்வெட்டுகளாக அமைந்தன. வீரகேரளர் கல்வெட்டுகளில் இறைவனை “மகாதேவர்” எனக் குறிப்பிடும் மரபைக் காணலாம். இந்த மரபு 10-ஆம் நூற்றாண்டு வரை இருந்துள்ளது.*

***வீரகேரள அரசர்கள்:***

*வீரகேரளன் என்னும் ஓர் அரசன் முதல் அரசனாக அறியப்படுபவன். அவனது இரு மகன்கள் வீரகேரளன் அமரபுயங்கனும் வீரகேரள வீரநாராயணனும் ஆவர். அமரபுயங்கனின் ஆட்சிக்காலம் 986-1009. வீரநாராயணனின் ஆட்சிக்காலம் 1009-1015.*

*அமரபுயங்கன், சோழப்பேரரசன் இராசராசன் காலத்தவன். மலை நாட்டுடன் போர் செய்யமுனைந்த இராசராசன், அமரபுயங்கனை வெற்றிகொண்ட பின்னரே மலை நாட்டின்மேல் போர் தொடுத்தான். இந்த அமரபுயங்கன் பாண்டியன் ஆவான். (கட்டுரை ஆசிரியர் குறிப்பு: மேலே சொன்ன சொற்பொழிவாளரின் கருத்து, தமிழகத் தொல்லியல் துறையின் ''கோவை மாவட்டக் கல்வெட்டுகள்'' நூலில் சுட்டபெற்ற செய்தியிலிருந்து முற்றிலும் மாறுபடுகிறது. இந்நூலில், வீரநாராயணன் மூத்தவனாகவும், அமரபுயங்கன் இளையவனாகவும் குறிக்கப்பெறுகிறார்கள். ஆட்சிக் காலமும் முறையே 957-968, 967-990 எனத் தரப்பட்டுள்ளது. தந்தையின் பெயர் வீரகேரளன் என்பதில் முரண்பாடு இல்லை. சொற்பொழிவாளரும், நூலின் பதிப்பாசிரியர்களும் தனித்தனியே சான்றாதாரங்களின் அடிப்படையிலேயே இக்கருத்துகளைச் சொல்லியிருக்கவேண்டும்.)*

*சொற்பொழிவாளர் கூற்றுப்படி வீரகேரள அரசர்கள் வரிசை:*
*வீரகேரளன்*
*வீரகேரளன் அமரபுயங்கன் 986-1009*
*வீரகேரள வீரநாராயணன் 1009-1015*
*வீரநாராயணன் வீரகேரளன் 1015-1044*
*இவன் பெயரால் கோவை, வீரகேரளநல்லூர் என அழைக்கப்பெற்றது.*
*இவன், 1044-இல் சோழன் முதலாம் இராசாதித்தனால் கொல்லப்படுகிறான்.*
*வீரநாராயணன் அதிசய சோழன் 1044-1076*
*அதிசய சோழன் வீரநாராயணன் 1076-1093*
*வீரகேரளன் அதிராஜராஜன் 1093-1116*
*மேற்படி வீரநாராயணன் வீரகேரளனின் மகன்.*
*அதிராஜராஜன் ஸ்ரீ ராஜராஜன் 1116-1153*
*ராஜராஜன் கரிகாலன் 1153-1165*

*வீரகேரளன் அதிராஜராஜனின் (1093-1116) கல்வெட்டு ஒன்றில் காணப்படுகின்ற வானிலைக் குறிப்பின் அடிப்படையில், இவன் ஆட்சியிலமர்ந்த ஆண்டைக் கணித்துள்ளனர். இவனும் சோழன் முதலாம் குலோத்துங்கனும் நண்பர்கள். இவன், திருக்கண்ணபுரம் கோயிலுக்கு 1104, 1106 ஆகிய ஆண்டுகளில் இருமுறை கொடையளித்துள்ளான். இவனுடைய மகன் அதிராஜராஜ ஸ்ரீ ராஜராஜன் (1116-1153), இருகூர்ச் செப்பேடு வழங்கியவன். இவனுடைய இருபத்தேழாம் ஆட்சியாண்டு வரை இவனது கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. இருகூர்ச் செப்பேட்டினைப் படித்துச் செய்தியை வெளியிட்டவர் தொல்லியல் அறிஞர் பூங்குன்றன் ஆவார். இந்த ஏட்டில் பள்ளிப்படை பற்றிய குறிப்பு ஒன்று காணப்படுகிறது.*

***வீரகேரளர் ஆட்சியில் அரசு நிருவாகம்:***
*வேள் எனப்பட்ட தலைவர்கள் இருந்தனர். வஞ்சி வேளான் என்பவனின் பெயர் கடத்தூர், கொங்கூர், ஆனைமலை ஆகிய ஊர்க் கல்வெட்டுகளில் காணப்படுகிறது. ஊர்களின் தலைவர்கள் காமுண்டன் அல்லது காமிண்டன் என அழைக்கப்பட்டனர். ஒவ்வொரு ஊருக்கும் ஊரவை ஒன்றும் இருந்தது. ஊரவையின் உறுப்பினர் ஊராளி என்றழைக்கப்பட்டார். மன்றாடிகள் என்போர் இருந்துள்ளனர். மன்றுக்குரியவர் மன்றாடி. (கோவை மாவட்டக் கல்வெட்டுகள் நூலில், பதிப்பாசிரியர்கள் மன்றாடி என்பதற்குத் தரும் விளக்கம்: மன்றாட்டு, மன்றாட்டுக் காணி, மன்றாட்டுப்பேறு ஆகியன கால்நடை*

*வளர்ப்புச் சமூகத்திலிருந்து வந்த ஊர் வருவாயிலிருந்து உருவாக்கப்பட்ட பங்கு முறையாகும். கால்நடை வளர்ப்புச் சமூகத்தோடு தொடர்புடைய மன்றம் என்ற சொல்லிலிருந்து மன்றாட்டு வந்தது. மன்றாட்டை நிருவகிப்பவன் மன்றாடி எனப்பெற்றான்.) வீரகேரளர் ஆட்சியில், கடத்தூரில் நிலைப்படை ஒன்று இருந்துள்ளது. இது, நிலைநின்ற ஆயிரவர் படை என்னும் பெயர் கொண்டிருந்தது. படைத் தலைவர்கள் "படைவளவஞ் செய்வார்" என்று கல்வெட்டுகளில் குறிப்பிடப்பெறுகிறார்கள். வீரகேரளர் காலத்திலிருந்து கடத்தூர்க் கோயிலில் தேவரடியார் இருந்துள்ளனர்.*

*மேற்படிச் செய்திகளைச் சுட்டும் கல்வெட்டு வரிகள் கீழே:*

*1 ஸ்வஸ்திஸ்ரீ கோ அதிராஜராஜ தேவற்கு ………………… வீரகேரள வலநாட்டு நன்னனூர் ஆளுடையார் நக்காண்டாற்கு மேற்படியூரில் வெள்ளாளந் வட்டமணியனான அதிராசராச வஞ்சி வேளாந்……..*

*ஆனைமலைக் கல்வெட்டு (AR 214 / 1927-28)*

*2 ஸ்வஸ்திஸ்ரீ வீரநாராயண தேவற்கு யாண்டு மூந்றாவது கடற்றூ[ர்] இருக்கும் வதிளார் சந்தந் போத்தநாந மருதக்காமிண்டந் ………*

*கடத்தூர்க் கல்வெட்டு*

*3 ஸ்வஸ்திஸ்ரீ வீரநாராயண தேவற்கு யாண்டு மூந்றாவது கடற்றூர்மந்றாடிகளில் காவன் சொக்கனான.....*

*கடத்தூர்க் கல்வெட்டு*

*4 ஸ்வஸ்திஸ்ரீ வீரநாராயண தேவற்கு யாண்டு மூந்றாவது கடற்றூர் நிலை நின்ற ஆயிரவற்கு நாயகஞ் செய்வார்களில்.....*

*கடத்தூர்க் கல்வெட்டு*

*5 ஸ்வஸ்திஸ்ரீ வீரநாராயண தேவற்கு யாண்டு மூந்றாவது திரு மருதுடையார் தேவரடியாரில் சொக்கந் வெம்பியேந் ...*

*கடத்தூர்க் கல்வெட்டு*

*கொங்கு நாட்டில் வீரகேரளர்தாம் வேளாண்மைக்கு அடித்தளம் அமைத்தவர்கள். தென்கொங்கில் இரு பூ (இரண்டு போகம்) நெல் விளைந்ததாகக் கல்வெட்டுக்குறிப்பு உள்ளது. மன்னறை என்று கொங்கு நாட்டுக் கல்வெட்டுகளில் ஒரு குறிப்பு காணப்படுகிறது. இது, சோழ நாட்டுக் கல்வெட்டுகளில் பயிலும் மயக்கல் அல்லது வயக்கல் என்னும் சொல்லுக்கு நேரானது என்று கருதப்படுகிறது. வேளாண்மைக்குத் தகுதியாக்கும் வகையில் புன்செய் நிலங்களைத் திருத்துதலும் திருத்தப்பட்ட நிலமுமே மயக்கல் எனப்பட்டது. இவ்வகை மயக்கல் நிலங்கள் கொங்குநாட்டில் மன்னறை என வழங்கப்பட்டன. கோயம்புத்தூர், பேரூர், கொழிஞ்சிவாடி, கரைப்பாடி, ஆனைமலை ஆகிய ஊர்களில் மன்னறைகள் இருந்துள்ளனவாகக் கல்வெட்டுகள் வாயிலாக அறிகிறோம். வீரகேரளர் ஆட்சியின்போது, பாசன வாய்க்கால்கள் அமைக்கப்பட்டு வேளாண் தொழில் வளம் பெற்றது. இவ்வாய்க்கால்கள் வதிகள் என அழைக்கப்பெற்றன. இவை சிறு வாய்க்கால்கள். பேரூர், கொழுமம், கரைப்பாடி, ஆனைமலை ஆகிய ஊர்க்கல்வெட்டுகளில் வதிகள் பல இருந்தமையை அறிகிறோம். பழநிக்கருகில்*

*போடுவார்பட்டியில் 10-11-ஆம் நூற்றாண்டுத் தூம்பு கண்டறியப்பட்டுள்ளது. பெருங்குள வாய்க்கால், பெருந்தூம்பு ஆகிய பெயருடைய இடங்கள் பழநிப் பகுதியில் இன்றும் உள்ளன.*

***வணிகம்:***

*வீரகேரளர் ஆட்சியின்போது, வணிகமும் சிறப்பான நிலையில் நிலையில் இருந்துள்ளது. பழநி, சோமவார்ப்பட்டிக் கல்வெட்டுகளில் திசை ஆயிரத்து ஐந்நூற்றுவர், வளஞ்சியர் பற்றிய குறிப்புகளையும், ஆனைமலைக் கல்வெட்டில் மடிகை என்னும் வணிகக் கடைத்தெருக்கள் பற்றிய குறிப்பினையும் காண்கிறோம். வியாபாரி என்னும் சொல்லும் பல கல்வெட்டுகளில் காணக்கிடைக்கிறது. வெள்ளலூர் பகுதியில் வெற்றிலை ஏற்றுமதி நடைபெற்றது. வெள்ளலூர் வணிகர் ஒருவர் வெற்றிலையைச் சோழ நாட்டுக்குச் சென்று சேர்ப்பித்ததற்காக அவருக்கு வீரகேரள அரசன் காணித் தன்மமும், வீட்டில் நடைபெறும் சிறப்பு நிகழ்வுகளில் சங்கு ஊதிக்கொள்ளவும், பச்சைப் பிடாம் (பட்டாடை?) போர்த்துக்கொள்ளவும், வீட்டுக்கு இரண்டாம் நிலை (மாடி) எடுத்துக்கொள்ளவும் உரிமைகளை வழங்குகிறான். இந்த உரிமைகள் மக்களுக்கும், மருமக்களுக்கும் சேர்த்து அளிக்கப்படுகின்றன. இச்செய்தி இருகூர்ச் செப்பேட்டில் உள்ளது.*

***இருகூர்ச் செப்பேட்டின் சில வரிகள்:***

*. . . . . அமரபயங்கரப் பெருமாள்ளுக்கும் இவர் பாட்டந்மார் செய்த பணி வெள்ளலூர் வெற்றிலை கொளுப்ப[சு]ங்காய் இவைய் உள்படச் சோழநாட்டு[க்]கு போய் குடுத்த பணிக்கு . . . . . . . . . . . . . . . .*

*இவந்நுக்கு குடுத்த வரிசை ஆண் வழிக்கு ஒற்றைச் சங்கு ஊதி வருவிதாகவும் பெண் வழிக்கு இரட்டைச் சங்கு ஊதி வருவிதாகவும் ....../.பச்சைப் பிடாம் போற்பாநாகவும் இவந் அகம் இரண்டாநிலை எடுத்து சாந்து இட்டுக்கொள்ளப் பெறுவாநாகவும் . . . நம் ஓலை குடுத்தோம்*

***நாணயங்களும், முகத்தல் அளவுகளும்:***

*வீரகேரளர் அவர்களின் ஆட்சிக்காலத்தில் அச்சு, பொன் என்னும் நாணய வகைகளைப் பயன்படுத்தினர். இந்த அச்சு, பின்னர்க் கொங்குச்சோழர் காலத்தில் பழஞ்சலாகை அச்சு என்னும் பெயர் பெற்றது. நெல்லை அளக்க முகத்தல் அளவைகளான மா, கலம், தூணி ஆகியனவும், கருவிகளாகப் பரகேசரிக்கால், சூலக்கால் ஆகியனவும் பயன்பாட்டிலிருந்தன.*

***நகரங்கள்:***

*வீரகேரளர் ஆட்சியின்போது, பழநி, பேரூர் ஆகிய மாநகர்களும், முப்பது சிறு நகரங்களும் இருந்தன.*

***சமயம்:***

*சோமவார்ப்பட்டியில் இருக்கும் அமரபுயங்கீசுவரர் கோயிலும், முட்டமான அமரபுயங்க நல்லூரில் (தற்போதைய பெயர் போளுவாம்பட்டி) இருக்கும் நாகீசுவரர் கோயிலும், கடத்தூரில் இருக்கும் மருதீசர் கோயிலும் வீரகேரளர் கட்டுவித்ததாகக் கருதப்படுகின்றன. கடத்தூரில் உள்ள மருதீசர் கோயில் அமராவதி ஆற்றங்கரையிலேயே கட்டப்பெற்றுள்ளது.*

*கருவறையிலிருக்கும் இலிங்கத்திருமேனி மரத்தாலானது. 13-ஆம் நூற்றாண்டில், கொங்குச்சோழனான வீரராசேந்திரனின் ஆட்சிக்காலத்தில் சமணக்கோயில்கள் பல சைவக்கோயில்களாக மாற்றப்பட்டன. எனவே, வீரகேரளர் ஆட்சியின்போது சமணம் சேதமுறவில்லை எனலாம்.*

*தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.*
*doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.*

# 8. பொம்மைக் கல்யாணம் என்ற விளையாட்டின் வேர்

— முனைவர் ச.கண்மணி கணேசன்

**முன்னுரை:**
*பண்டைத் தமிழர் விளையாட்டுக்களில் பொம்மைக் கல்யாணமும் ஒன்று. இவ்விளையாட்டு பற்றிய செய்திகள் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் எவ்வாறு சித்தரிக்கப்படுகின்றன? என்னென்ன பெயர்கள் பெறுகின்றன? எந்தக் காலத்தில் கொண்டாட்டம் தொடங்கியது? காலமாற்றம் ஏற்பட்டதா? போன்ற வினாக்களின் விடை காணும் முகமாக இக்கட்டுரைச் செய்திகள் அமைகின்றன.*

**பொம்மைக் கல்யாணம் பற்றிய முதற்செய்தி:**
*கபிலரின் குறிஞ்சிக்கலிப் பாடலில் பொம்மைக் கல்யாணம் பற்றிய செய்தி இடம் பெறுகிறது.*

*"சுடர்விரி வினைவாய்ந்த தூதையும் பாவையும்*
*விளையாட ……………………………………..*
*………………………………………………………….*
*தையில் நீராடிய தவந்தலைப் படுவாளோ*
*…………………………………………………………..*
*பொய்தல் மகளையாய்ப் பிறர்மனைப் பாடிநீ*
*எய்திய பிறர்க்கீத்த பயம்பயக் கிற்பதோ*
*…………………………………………………………..*
*சிறுமுத்தனைப் பேணிச் சிறுசோறு மடுத்துநீ*
*நறுநுத லவரொடு நக்கதுநன் கியைவதோ "(பா- 59-அடி-5-21)*

*என்று தலைவன் தைந்நீராடிய தலைவியைப் பார்த்துக் கேட்கிறான். என் காதலை ஏற்றுக் கொள்வதே நீ நோற்றதன் பயன் ஆகும் என்பது அவன் கருத்து.*

*அவள் சிறுவயதில் வேலைப்பாடு அமைந்த ஒளி வீசும் பாவையை வைத்து விளையாடினாள். அத்துடன் பாவை நோன்பிற்காக பிறர் மனைக்கட் சென்று ஐயமேற்றாள். பின்னர் அதைச் சமைத்து ஆயத்தார்க்கும் கொடுத்துத் தன்னுடைய பாவைக்கும் ஊட்டினாள். தன்னொத்த தோழியரோடு அவள் இந்நோன்பை விளையாடிச் செய்ததே தலைவன் இங்கு நகைப்புக்குரியது என்கிறான். விரும்பியபடி மணமுடித்து வாழ்வதற்காக நோற்கும் பாவை நோன்பில் சிறுமுத்தனையும் புனைந்து; பேணி வளர்த்து; அவனுக்கு வேறொருத்தியின் மகளைக் கோடற்கு; விருந்து சமைத்துச் செய்த விளையாட்டு பொம்மைக் கல்யாணம் என்பது குறிப்பாகப் புலப்படுகிறது. இச் சிறுமுத்தனைக் குழமகன் என்கிறார் நச்சினார்க்கினியர்.*

*நீலகேசியில் இடம்பெறும் பாடல்(பா-408) இத்தகு பாவையைக் குழமணர் என்கிறது. அதற்கு கை, கால் முதலியன இரா என்றும் பொ.வே.சோமசுந்தரனார் விளக்கம் தருகிறார்.*

***அம்பாவாடல்; பாவை நோன்பு; தைந்நீராடல்:***
*பரிபாடலில் இந்நோன்பை நல்லந்துவனார் அம்பாவாடல் என்கிறார். அது மார்கழி மாதத்தின் திருவாதிரை நட்சத்திரத்து முழுமதி நாளில் தொடங்கியமை.*

> *"பனிப்படு பைதல் விடுதலைப் பருவத்து*
> *ஞாயிறு காயா நளிமாரிப் [பிற்குளத்து*
> *மாயிருந் திங்கள் மறுநிறை ஆதிரை*
> *விரிநூல் அந்தணர் விழவு தொடங்க*
> *…………………………………………………….*
> *அம்பாவாடலின் ஆய்தொடிக் கன்னியர்*
> *……………………………………………………………..*
> *தாயருகா நின்று தவத்தைந் நீராடுதல் "(பா-11அடி- 75-91)*

*என்ற பாடலடிகளில் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளது. குளிரால் நடுங்குகின்ற முன்பனிப் பருவத்தில் சூரியனின் வெம்மை தாக்காத கடைமாரியை உடைய மார்கழி மாதத்தில் திருவாதிரை நட்சத்திரத்து முழுமதிநாளில் அந்தணர் விழாவைத் தொடங்கினர். அவ்விழா தைமாதம் முழுவதும் தொடர்ந்ததால் தைந்நீராடல் என்றும் அழைக்கப்பட்டது. அம்பாவாடும் பெண்கள் தம் தாயரின் அருகில் இருந்து தைந்நீராடுவதைத் தவம் என்றே சொல்வதால் அதுவே பாவை நோன்பாகிறது.*

*மார்கழி மாதத்து மதிநிறைந்த நன்னாளிலேயே ஆண்டாள் பெண்களை நீராட அழைக்கிறாள் என்பதும் நோக்கத்தக்கது (திருப்பாவை-பா-1)*

*அழகிய பாவை செய்து நீராடி வழிபட்டமையே அம்பாவாடல் என்னும் பெயர் அமையக் காரணம் எனலாம். அம்+பாவையாடல் எனப் பிரித்துப் பொருள் கொள்ள வழியுள்ளது. 'பாவையாடல்' என்னும் தொடர் சங்க காலத்திலேயே தமிழரின் முயற்சிச் சுருக்கம் காரணமாக 'பாவாடல்' என்று சுருங்கி இருக்க வேண்டும்.*

*திருவெம்பாவைப் பாடல்கள் அனைத்தும் 'ஏலோரெம்பாவாய்' என்று விளித்துப் பாடியுள்ளமை; பார்வதிதேவியைப் பாவையாக்கி அவர்கள் வழிபட்ட செயலைப் புலப்படுத்துகிறது. வழிபாட்டிற்கு அமைந்த திருவுருவையே 'பாவை' என்று அழைத்ததாக ப.இராமநாதபிள்ளை தன் விளக்கவுரையில் கூறியுள்ளார்.*

*வைணவத்திலும் பெண்கள் நீராடி சக்திக்குப் பாவை செய்து நோற்றுக் கொண்டாடினர். திருப்பாவைப் பாடல்கள் அனைத்தும் 'ஏலோரெம்பாவாய்' என்று முடிவது பாவை வழிபாட்டின் எதிரொலியே ஆகும். பாகவதமும் ராதை முதலிய கோகுலத்துப் பெண்கள் சக்தியின் பாவை செய்து வழிபட்டமையைப் பேசுகிறது.*

> *"நாமும் நம் பாவைக்குச் செய்யும் கிரிசைகள் கேளீரோ"(பா-2)*

*என்னும் திருப்பாவைப் பாடலடி ஆண்டாள் பாவை செய்து வழிபட்ட மரபைச் சுட்டுகிறது.*

***மார்கழி நீராடல்:***
*பக்தி இயக்க காலத்தில் அம்பாவாடல் மார்கழி நீராடல் என்று பெயர் மாற்றம் பெற்றதுடன்; தைந்நீராடல் தனிப்பொருளும் சிறப்பும் பெற்றது. ஆண்டாளின் திருப்பாவை,*

*"மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்"(பா-4);*

*என்கையில் 'மார்கழி நீராடல்' என்னும் புதுப்பெயர் வழக்கு தோன்றியமை தெளிவு. பின்னர் தையொரு திங்களும் தரைவிளக்கித் தன்மண்டலமிட்டு மாசி முன்னாள் வரை 'வேங்கடவற்கு என்னை விதிக்கிற்றியே' என்று தொழுவதாக நாச்சியார் திருமொழி அமைந்துள்ளது. வெள்வரைப்பதன் முன்னம் துறைபடிந்து நோற்றாலும் அது பாவை வழிபாடாகச் சுட்டப்படவில்லை. காமனை வழிபட்டுத் திருமாலைச் சேர நோற்பதாகவே அமைகிறது.*

*மாணிக்கவாசகரின் திருவெம்பாவையும் பெண்கள் கூடி நீராடுவதைப் பன்னிப் பன்னிப் பல பாடல்களில் பாடிய பிறகு இறுதியில்,*

*"போற்றியாம் மார்கழிநீ ராடேலோ ரெம்பாவாய்"(பா-20) என முடிகிறது.*

*மார்கழி நீராடல், தைந்நீராடல் என்று இருவேறு கொண்டாட்டமாகத் திரிந்தமையால் பக்தி இயக்கத்திற்குப் பிற்பட்ட காலத்தில்; பாவைநோன்பு திருவாதிரை நட்சத்திரத்தன்று தொடங்கியமை மாறி; மார்கழி முதலிலிருந்தே தொடங்கியமை புலனாகிறது. இதனால் அம்பாவாடல் என்ற தைந்நீராடல் மார்கழி நீராடலாகச் சுருங்கி மாறிய பாவைநோன்பின் வரலாறு தெளிவாகிறது.*

***அம்பாவாடல் நிகழ்ச்சிகள்:***
*விழா தொடங்கியவுடன் முப்புரி நூலணிந்த வேதியர் பொற்கலங்களில் பலிப்பொருளை ஏந்தி வேதநெறிப்படி நீர்க்கரையிலே முள்ளும் இல்லாச் சுள்ளி எரிமடுத்துத் தீ வளர்த்தனர். பெண்கள் வைகறையில் நீராடினர்.*

*"புரிநூல் அந்தணர் பொலங்கல மேற்ப*
*……………………………………………………..*
*……………………..உறைசிறை வேதியர்*
*நெறிநிமிர் நுடங்கழல் பேணிய சிறப்பில்*
*தையல் மகளிர் ஈரணி புலர்த்தர... "(பரிபாடல்-பா-11-அடி-79-86)*

*என்று அம்பாவாடல் நிகழ்ச்சிகள் நல்லந்துவனார் பாடலில் விரித்துச் சொல்லப்படுகின்றன. வைகைக்கரையில் தைந்நீராடிய பெண்கள் வேதியர் வளர்த்த தீயின் அருகில் வந்து தம் ஆடைபுலர்த்தி நின்றனர் என்று காட்சி தொடர்கிறது. பூதந்தேவனாரின்,*

*“பெரும்புலர் விடியலின் விரும்பிப் போத்தந்து*
*தழையும் தாரும் தந்தான் இவனென*
*இழையணி ஆயமொடு தகுநாண் தடைஇத்*
*தைஇத் திங்கள் தண்கயம் படியும்*
*பெருந்தோட் குறுமகள் …………”(பா-80)* நற்றிணை

*எனும் பாடல் தனக்குத் தழையும், தாரும் தந்த தலைவனை எண்ணித் தைந்நீராடிய தலைவியைக் காட்சிப்படுத்துகிறது.*

*எருமை மாடுகளை மேய்ச்சலுக்குக் கிளம்பும் விடிகாலைப் பொழுதில் தலைவி தன் தோழியரோடு குளத்தில் படிந்து நோன்பாற்றினாளாம். பெண்கள் பலரும் தைமாதத்தில் ஒருங்கு நீராடும் குளிர்ந்த குளத்தை ஐங்குறுநூறு பரத்தமை மேற்கொண்ட தலைவன் மார்புக்கு உவமை ஆக்குகிறது.*

*“நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும்*
*தைஇத் தண்கயம் போலப்*
*பலர் படிந்துண்ணும் நின் பரத்தை மார்பே “(பா-84)*

*எனும் பாடலடிகள் நீராடும் குளத்திற்குச் சிறப்பளிப்பதன் மூலம் நோன்பியற்றும் பெண்களின் பெருக்கத்தையும், நோன்புக்காலத்தையும் நமக்குத் தெளிவாகத் தருகின்றன.*

*பாவை நோன்பின் போது தானத்தையும், பிச்சையையும் குறையின்றிக் கூடியமட்டும் செய்து நோற்றனர்.*

*“ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி*
*உய்யுமா றெண்ணி உகந்தேலோ ரெம்பாவாய்”(பா-2)*

*எனும் திருப்பாவை அடிகள் நோக்குக.*

*இறைவியைப் பாவையாகச்செய்து; அவளிடம் விரும்பும் கணவரைப் பெறவேண்டும் என்றும், நிலவுலகிற்கு மழை வேண்டும் என்றும் வேண்டினர்.*

*“உன்னடியார் தாள் பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம்*
*அன்னவரே என்கணவ ராவார் அவருகந்து*
*சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம்”*

*என்று திருவெம்பாவை நோன்பிகள் பாவையைத் துதிக்கின்றனர்.*

*“......................................நந்தம்மை ஆளுடையாள்*
*தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு*
*முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே*
*என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய் “*

*என்பது மாணிக்கவாசகரின் திருவெம்பாவை. இறைவனுக்கு முன்னர் இறைவியின் அருள் வந்து சேர்வது போல் மழைவந்து சேர வேண்டுகின்றனர். ஆண்டாளும்,*

> *"ஆழியுள் புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி*
> *ஊழிமுதல்வன் உருவம்போல் மெய்கறுத்து*
> *ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து*
> *தாழாதே சாரங்க முதைத்த சரமழை போல்*
> *வாழ உலகினில் பெய்திடாய்... "*

*என்று மழை வேண்டுகிறாள்.*

*பரிபாடலும் அம்பாவாடும் போது, "வெம்பாதாக வியனில வரைப்பென" (பா-11-அடி-80) பெண்கள் வேண்டியதாகச் சொல்கிறது.*

***அம்பாவாடலும் சமயமும்:***

*மார்கழி மாதத்துத் திருவாதிரையன்று தொடங்கிய விழாவிற்குரிய தெய்வம் சிவபெருமான் என்று பொ.வே.சோமசுந்தரனார் பரிபாடல் உரையில் கூறியிருப்பினும்; பாவை நோன்பிற்குரிய தெய்வமாகிய பார்வதிக்குப் பாவை செய்து நோற்றார்கள் என்று பாடலடிகள் உணர்த்துவது கண்டோம்.*

*திருவெம்பாவைக்கு விளக்கவுரை கூறும் ப.இராமநாதப்பிள்ளை இது 'மாதிருக்கும் பாதியன் விழா' என்று சொல்லித் தொடர்ந்து சிவசக்திக்கு உரியதென்கிறார். சக்தியைப் பாவையாகக் கொண்டு வழிபட்டமையை ஆண்டாளிடமும் காண்கிறோம். இங்கு சைவ வைணவப் போட்டியால் தான் திருவாதிரையன்று தொடங்கிய விழா மார்கழி முதல் தேதியிலிருந்து கொண்டாடப்பட்டதோ என்னும் ஐயம் எழுகிறது.*

***முடிவுரை:***

*திருவாதிரை முழுமதிநாளில் தொடங்கி அம்பாவாடல் என்று அழைக்கப் பட்ட தைந்நீராடலின் போது பெண்கள் விடியுமுன் நீர்த்துறைக்குச் சென்று நீராடிப் பாவை செய்து வழிபட்டனர். அந்தணர்கள் வேதமந்திரம் கூறித் தீமுறை வழிபாடும் செய்தனர். பெண்கள் ஐயமேற்று நோன்பிருந்தனர். பாவை நோன்பு தைமாத இறுதிவரை தொடர்ந்தது. பக்திஇயக்கக் காலத்தில் மார்கழி நீராட்டு என்று பாவைநோன்பு சுருங்கியது. தைந்நீராடல் தனியொரு போக்கில் காமனை நோக்கி வழிபடுவதாய் அமைந்தது. சிறுபிராயப் பெண்கள் சேர்ந்து பாவைநோன்பின் போது சிறுமுத்தன் என்று சீராட்டிப் பாராட்டி விருந்தயர்ந்து தன் குழமகனுக்குப் பெண்கேட்டு விளையாடிய போக்கிலிருந்தே பொம்மைக் கல்யாணம் தோன்றியது.*

*தொடர்பு: முனைவர் ச.கண்மணி கணேசன் (kanmanitamilskc@gmail.com)*

# 9. தேவாரத்தில் இராவணன்

**— விக்கி கண்ணன்**

இராவணன் என்று சொன்னாலே நம்மில் பலருக்கும் இராமாயணக் கதைகள் ஞாபகத்துக்கு வரும். தேவார காலத்தில் இராவணன் என்று சொன்னால் சைவ அடியார்களுக்குக் கைலாயத்தை தூக்கிய காட்சி தான் ஞாபகத்துக்கு வந்திருக்கிறது. அதன் தாக்கத்தில் திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் தனது பதிகங்களில் மாறி மாறி இராவணனைப் பற்றி பாடியுள்ளனர்.




அப்பரும் சம்பந்தரும் முறையே ஒவ்வொரு தலங்களிலும் பத்து பாடல்கள் பாடியுள்ளனர். அதில் அப்பர் தனது பத்தாவது பாட்டில் இராவணன் கைலாயத்தை தூக்கிய காட்சியை ஒவ்வொரு தலங்களிலும் விவரிக்கிறார். இதேபோன்று சம்பந்தரும் தனது எட்டாவது பாட்டில் இராவணன் கைலாயத்தை தூக்கிய காட்சியை விவரிக்கிறார். இருவரும் கிட்டத்தட்ட தாங்கள் பாடிய 90 சதவீத தலங்களில் இக்காட்சியை விவரிக்கின்றனர். இராவணன், கரிய அரக்கன், தென்னிலங்கையின் மன்னன் எனப் பலவாறு குறிப்பிடப்படுகிறான்.

அப்பர் தனது பாடலில், "சிவந்த கண்களுடன் கைலாயத்தைத் தூக்கும் அரக்கனின் செயலால் நிலைகுலைந்த பார்வதியின் நிலைகண்டு, தனது காலின் பெருவிரலை ஊன்றி அந்த நடுக்கத்தை போக்குகிறார். இதனால் இராவணனின் 10 தலையில் சில நொறுங்குகின்றன. அவ் வலியைப் போக்க இராவணன் வீணை மீட்டிப் பாடுகிறான். அந்த இசையில் மயங்கிய சிவன் இராவணனை ஆட்கொள்கிறார்".

சம்பந்தர் தனது பாடலில்," கர்வத்தால் கைலாய மலையைத் தூக்கிய அரக்கனின் செயலை கண்டு, அவன் ஆணவத்தை அடக்க சிவன் தன் பெருவிரலை ஊன்றுகிறார். இதனால் இராவணனின் தலைகள் சிதறுகின்றன. நிலைகுலைந்த இராவணன், தன் செயலை மன்னிக்குமாறு வீணை மீட்டிப் பாடுகிறான். அந்த இசையில் மயங்கிய சிவன் இராவணனை ஆட்கொள்கிறார்."

இருவருமே ஒரே கதையை வெவ்வேறு வடிவில் சித்தரிக்கின்றனர். இருவரின் பாடல்களுள் சில..

திருநாகை காரோணத்தில் அப்பர் பாடிய பாடல்;

"கருமலி கடல்சூழ் நாகைக் காரோணர் கமல பாதத்
தொருவிரல் நுதிக்கு நில்லா தொண்டிறல் அரக்க னுக்கான்
இருதிற மங்கை மாரோ, டெம்பிரான் செம்பொ னாகந்
திருவடி தரித்து நிற்கத் திண்ணம்நாம் உய்ந்த வாறே."

கைலாயத்தில் அப்பர் பாடிய பாடல்;

"கற்றனன் கயிலை தன்னை காண்டலும் அரக்கன் ஓடி
செற்றவன் எடுத்த வாறே சேயிழை அஞ்ச ஈசன்
உற்றிறை ஊன்றா முன்னம் உணர்வழி வகையால் விழுந்தான்
மற்றிறை ஊன்றி னானேல் மறித்துநோக் கில்லை யன்றே."

திரு அனேகதங்காவதம் தலத்தில் சம்பந்தர் பாடிய பாடல்;

"ஈர மேதுமில னாகி யெழுந்த இராவணன்
வீர மேதுமில னாக விளைத்த விலங்கலான்
ஆரம் பாம்ப தணிவான்றன் அனேகதங் காவதம்
வார மாகிநினை வார்வினை யாயின மாயுமே"

திருநறையூர் தலத்தில் சம்பந்தர் பாடிய பாடல்;

"கரையார் கடல்சூழ் இலங்கை மன்னன் கயிலை மலைதன்னை
வரையார் தோளா லெடுக்க முடிகள் நெரித்து மனமொன்றி
உரையார் கீதம் பாட நல்ல வுலப்பி லருள்செய்தார்
திரையார் புனல்சூழ் செல்வ நறையூர் சித்தீச் சரத்தாரே."

இதேபோன்று பல பதிகங்களில் இந்தக் கதை பாடப்பட்டுள்ளது. வெறும் இலக்கியமாக மட்டும் இல்லாமல் பல்லவர் காலத்தில் இச்சிறப்பம் செதுக்கப்பட்டுள்ளது. காஞ்சி பேருந்து நிலையத்தில் இருந்து பூக்கடை சத்திரம் செல்லும் சாலையில் வலது பக்கத்தில் அமைந்துள்ளது "முக்தீஸ்வரர் கோவில்". கிபி 8 ஆம் நூற்றாண்டில், மூன்றாம் நந்திவர்மனின் காலத்துக் கோவிலாக சொல்லப்படும் இக்கோவிலில் இராவணன் கயிலை மலையைத் தூக்கும் அழகிய சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது. சிவனும் பார்வதியும் மேலே அமர்ந்திருக்க, விரல் அழுத்தத்தால் நிலைகுலைந்த இராவணனின் நிலை காட்டப்பட்டுள்ளது.

தொடர்பு: விக்கி கண்ணன் (vickysrinivasan8@gmail.com)

## 10. சங்க இலக்கியத்தில் தித்தி

— *முனைவர். ப. பாண்டியராஜா*

*தித்தி என்பது பெண்களின் உடம்பில் காணப்படும் ஒருவகைப் புள்ளிகள் என்று சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இதனைத் தேமல், அதாவது, Yellow spreading spots on the body என்று தமிழ்ப் பேரகராதி (Tamil Lexicon) குறிப்பிடுகிறது.*

*தித்தி என்றால் என்ன என்பதைச் சங்க இலக்கிய மேற்கோள்கள் வழி ஆய்வோம்.*

*1.*
*குறும் பொறை அயல நெடும் தாள் வேங்கை*
*அம் பூ தாது உக்கு அன்ன*
*நுண் பல் தித்தி மாஅயோளே - நற் 157/10*

*இதன் பொருள்:*
*சிறிய குன்றுகளை அடுத்து இருக்கும் நீண்ட அடிமரத்தையுடைய வேங்கை மரத்தின்*
*அழகிய பூந்தாதுக்கள் உதிர்ந்ததைப் போல*
*நுண்ணிய பலவான தேமல் புள்ளிகள் பரந்த மாநிறத்தவளான நம் தலைவி.*

*மிகவும் உயரமான வேங்கைமரத்தின் பூக்களிலுள்ள தாதுக்கள் எதன் மீது உதிர்ந்து கிடந்தன என்ற செய்தி இங்கு இல்லை. மிகவும் உயரமான மரம் என்பதால் தாதுகள் தரை மீது சிந்துவதற்குள் காற்றால் அடிக்கப்பட்டு சிதறிப்போயிருக்கும். எனவே அருகிலுள்ள மரக்கிளையில் அந்த நுண்ணிய தாதுக்கள் உதிர்ந்து விழுந்திருக்கலாம்.*

*பெண்களின் மார்புப்பகுதியில் தோன்றும் சுணங்கு என்ற புள்ளிகள் வேங்கை மரத்துப் பூக்களைப் போன்று சற்றுப் பெரிதானவை என அறிகிறோம்.*
*தகை இணர் இள வேங்கை மலர் அன்ன சுணங்கினாய் - கலி 57/17*
*என்ற அடி இதனை அறிவுறுத்தும். ஆனால் தித்தி என்ற புள்ளிகள் வேங்கை மலரின் நுண்ணிய தாதுக்கள் போன்றவை என்பதை வேங்கை அம் பூ தாது உக்கு அன்ன நுண் பல் தித்தி என்ற சொற்கள் விளக்குகின்றன.*

*2. அடுத்து, தாமரை மலரின் தாதுக்களைப் போன்றது தித்தி என்று ஒரு குறுந்தொகைப் பாடல் கூறுகிறது.*

*குண்டு நீர் தாமரை கொங்கின் அன்ன*
*நுண் பல் தித்தி மாஅயோயே - குறு 300/4*

*இதன் பொருள்:*
*ஆழமான நீரில் உள்ள தாமரைமலரின் பூந்தாது போன்ற*
*நுண்ணிய பல தேமலையுடைய மாநிறத்தவளே!*

*இந்த அடிகள், தித்தி என்பது தாமரை மலரின் பூந்தாதுக்கள் போன்று நுண்ணியதாகவும், பலவாகவும் இருக்கும் என்று தெரிவிக்கின்றன. மேலும் இவை மேனியில் எந்தவோர் இடத்திலும் காணப்படும் என்றும் உணர்த்துகின்றன.*

*3. இனி, தித்தியைப் பற்றி மிக விரிவாக விளக்கும் அகநானூற்றுஅடிகளைப் பார்ப்போம்.*

*மென் சிறை வண்டின் தண் கமழ் பூ துணர்*
*தாது இன் துவலை தளிர் வார்ந்து அன்ன*
*அம் கலுழ் மாமை கிளைஇய*
*நுண் பல் தித்தி மாஅயோளே - அகம் 41/13-16*

*இதன் பொருள்:*
*மென் சிறகுடைய வண்டுகள் உள்ள குளிர்ந்த மணங்கமழும் பூங்கொத்துகளில் உள்ள*
*தாதுடன் கூடிய தேன்துளி தளிரில் ஒழுகியது போல*
*அழகு ததும்பும் மாநிறமேனியில் கிளைத்துத்தோன்றும்*
*நுண்ணிய பல தேமல் புள்ளிகளையுடைய மாநிறத்தவளாகிய நம் தலைவி*

*பூங்கொத்துக்களில் உள்ள பூக்களின் மேல் வண்டுகள் மொய்க்கின்றன. அதனால், அந்தக் கொத்துக்களில் உள்ள பூந்தாதுக்கள், தேனுடன் கலந்து அதன் அடியிலுள்ள தளிர்களில் தெறித்துவிழுகின்றன. அதைப் போல இருக்கிறதாம் பெண்களின் தளிர்மேனியில் பரவலாய்க் காணப்படும் நுண்ணிய பல தேமல் புள்ளிகளான தித்தி.*

*பூ எந்த நிறத்தில் இருந்தாலும் அதன் தாது பொன்னிறத்தில்தான் இருக்கும் என்பது உண்மை. பூந்தாது மிகவும் நுண்மையானது. பலவாகச் சேர்ந்தால்தான் அதற்கு ஒரு வடிவம் கிடைக்கும். மேலே கண்ட மூன்று குறிப்புகளிலும் 'நுண் பல் தித்தி' என்று குறிப்பிடப்பட்டிருப்பதால், தித்தி என்பது நுண்மையான பல பொன்னிறப் புள்ளிகளின் சேர்க்கை என்பது தெளிவாகும்.*

*4. அடுத்து இந்தத் தித்தி எவ்வாறு அமைந்திருக்கும் என்று பார்ப்போம். இந்த நற்றிணை அடிகளைப் பாருங்கள்.*

*கம்மென*
*எதிர்த்த தித்தி ஏர் இள வன முலை*
*விதிர்த்து விட்டு அன்ன அம் நுண் சுணங்கின் - நற் 160/3-5*

*மென்மையாக, மேன்மேலே தோன்றிய தித்தியையும், எழுச்சியையுடைய இளைய அழகிய கொங்கைகளின் மேலே, அள்ளித்தெளித்தாற்போன்ற அழகிய நுண்ணிய தேமலையும்*

*என்று இதற்கு உரைகாணும் பின்னத்தூரார், பின்னர் விளக்கத்தில் தித்தி என்பது வயிற்றின் மேலே தோன்றுவது என்பார்.*

*ஆனால், ஔவை.துரைசாமி அவர்கள், இதற்கு...*
*மெல்லென, முற்பட மேலே பரந்த தித்திபொருந்திய எழுகின்ற இளைய அழகிய முலைகளையும் விரலால் தெறித்தாற் போல் பரவிய பொன் போலும் தேமலையும் என்று உரை கூறுவார். இவர் கூற்றுப்படி, தித்தி என்பது மார்பகத்தில் தோன்றுவது என்றாகிறது. இவர் தித்தி என்பது வரிவரியாகத் தோன்றுவது என்றும், சந்தனக் குழம்பைக் கைவிரலால் தெறித்தாற்போலத் தோன்றுவது சுணங்கு என்றும் கூறுவார்.*

*எதிர்த்த தித்தி முற்றா முலையள் - நற் 312/7*

*என்ற வேறொரு நற்றிணை அடியும் 'எதிர்த்த தித்தி' என்பதால், இது மேலேறிப் படரும் தன்மையுள்ளது என்பது தெளிவாகிறது. எனவே தித்தி என்பது படர்ந்துள்ள இடத்தின் அடிப்பாகத்தில் சிலவாகவும், மேலே படர்ந்து விரிந்து பலவாகவும் இருக்கும் என்பது தெளிவாகிறது.*

*அடுத்ததாக,*

*வடித்து என உருத்த தித்தி - அகம் 176/23*

*என்கிற அகநானூற்று அடிக்கு, 'பொன்னை உருக்கி வார்த்தாலொப்ப உருக்கொண்ட தேமலையும்' என்று பொருள்கொள்வார் வேங்கடசாமி நாட்டார்.*

*எனவே இது பொன்னிறம் கொண்டது என்பது தெளிவாகிறது.*

*5. அடுத்து, இந்தத் தித்தி உடம்பில் எங்கெங்கு படரும் என்று காண்போம். மேலே கண்ட சிலகுறிப்புகளினின்றும் தித்தி என்பது அழகு ததும்பும் மாநிற மேனியில் படரும் என்று பொதுவாகவும், பெண்களின் மார்பகம் என்று குறிப்பாகவும் கூறுவதைக் கண்டிருக்கிறோம். இந்தக் குறுந்தொகை அடிகளைப் பாருங்கள்.*

*அய வெள்ளாம்பல் அம் பகை நெறி தழை*
*தித்தி குறங்கின் ஊழ் மாறு அலைப்ப - குறு 293/5,6*

*நீரில் வளர்ந்த வெள்ளாம்பலின் அழகுக்குப் பகையாகிய முழு நெறிப்பையுடைய தழையுடை,*
*தேமலையுடைய தொடையில் மாறிமாறி அலைக்க*

*என்பது இதன் பொருள். எனவே, தித்தி என்ற இவ்வகைத் தேமல், தொடைப் பகுதியிலும் காணப்படும் என்பதை மேலே கண்ட அடிகள் நிறுவுகின்றன. குறங்கு என்பது தொடை.*

*அடுத்து,*

*அத்த ஆலத்து அலந்தலை நெடு வீழ்*
*தித்தி குறங்கில் திருந்த உரிஞ - அகம் 385/9,10*

*பொருள்:*
*வழியிலுள்ள ஆலமரத்தின் ஆடி அசைகின்ற நெடிய விழுது*
*தேமல் பொருந்திய தனது துடையில் நன்கு உராய்ந்திட*

*என்ற அகநானூற்று அடிகளும், தித்தி தொடைப்பகுதியிலும் படர்ந்திருக்கும் என்பதை உறுதிப்படுத்துகின்றது.*

*அடுத்து,*

*நுணங்கு எழில் ஒண் தித்தி நுழை நொசி மட மருங்குல் - கலி 60/3*

*இதன் பொருள்:*
*நுட்பமான அழகிய ஒளிவிடும் புள்ளிகளைக் கொண்ட மிகவும் சிறியதாக மெலிந்திருக்கும் இளமை ததும்பும் இடை*

*என்ற கலித்தொகை அடி, தித்தி என்பது இடைப்பகுதியிலும் காணப்படும் என்றும், அது ஒளிவிடும் புள்ளி (ஒண் துத்தி) என்றும் கூறுகிறது.*

*6. இனி, தித்தி என்பதைப் பற்றிய சில முரண்பாடான கருத்துக்களைப் பார்ப்போம்.*

*உயவும் கோதை ஊரல் அம் தித்தி*
*ஈர் இதழ் மழை கண் பேர் இயல் அரிவை - பதி 52/17,18*

*இதன் பொருள்:*
*அங்குமிங்கும் அலைப்பதால் வருந்தும் மாலையினையும், மேனியில் ஊர்ந்துநிற்கும் அழகிய தேமலையும்,*
*ஈரப்பசையுள்ள இதழ்களைக் கொண்ட குளிர்ந்த கண்களையும், பெருமை பொருந்திய இயல்பினையும் உடைய உன் மனைவி*

*என்ற பதிற்றுப்பத்து அடிகளுக்கு உரை வகுத்த ஔவை துரைசாமியார், ஊரல் அம் துருத்தி என்பதற்கு மேனியில் ஊர்ந்துநிற்கும் அழகிய தேமல் எனப் பொருள் கொள்கிறார்.*
*ஆனால்,*

*ஊரல் அம் வாய் உருத்த தித்தி - அகம் 326/1*

என்ற அகநானூற்றுப் பாடலுக்கு உரை எழுதும் வேங்கடசாமி நாட்டார், இதனை '*ஊரலாகிய அழகுவாய்ந்த உருப்பெற்ற தேமல்*' என்கிறார். இவர் ஊரல் என்பதுவும் ஒரு தேமல் வகை என்பார். இதனாலோ என்னவோ ஊரல் என்ற சொல்லுக்கு, ஊர்வது *(creeping thing)* என்றும், தேமல் வகை *(Erruptive patch on the skin)* என்றும் இரண்டு பொருள்களையும் தருகிறது தமிழ்ப்பேரகராதி. ஊரல் என்பதற்கு, அரித்தல், தினவு *(Itching sensation)* என்ற பொருளும் உண்டு. ஒருவேளை தித்தி என்ற பொன்னிறப்புள்ளிகள் மேனியில் ஓரளவு நமைச்சல் உண்டாக்கலாம். இதனால் கெடுதல் இல்லை என்பதனைக்குறிக்கவே, இதனை ஊரல் தித்தி என்று சொல்லாமல், ஊரல் அம் தித்தி என்று புலவர்கள் குறிப்பிடுகின்றனர் என்றும் சொல்லலாம்.



பூந்தாதை உதிர்த்துவிடும் வண்டு - தித்தி

இனி, தித்தி என்ற சொல் சங்க இலக்கியங்களைத் தவிர வேறு இலக்கியங்களில் மிக மிக அருகியே வந்திருப்பதைக் காணலாம். அவற்றில், பெருங்கதை என்ற நூலில் உஞ்சைக்காண்டத்தில் தித்தி பற்றிய ஒரு செய்தி உண்டு.

*தித்தி ஒழுகிய மெத்தென் அல்குலர் - உஞ்ஞை 41/97*

என்ற இந்தப் பெருங்கதை அடியால் தித்தி என்ற தேமல், இடுப்பைச் சுற்றி, இடுப்பிற்கும் சற்றுக் கீழான அல்குல் பகுதியிலும் படர்ந்திருக்கும் எனத் தெரியவருகிறது.

எனவே, பெண்களின், இடைப்பகுதி, தொடைப்பகுதி மற்றும் மேனியின் பல பகுதிகளிலும், மிக நுண்ணியவாகவும், பலவாகவும் பொன் நிறத்தில் தோன்றும் ஒளிர்வுள்ள புள்ளிகளே தித்தி என்பது இவற்றால் பெறப்படும்.

தொடர்பு: முனைவர்.ப.பாண்டியராஜா
*pipiraja@gmail.com*
*http://sangacholai.in*
*tamilconcordance.in/*

## 11. சங்க இலக்கியத்தில் திதலை

*— முனைவர்.ப.பாண்டியராஜா*

*1. முதலில் திதலை என்றால் என்னவென்று பார்ப்போம்.*

*வேப்பு நனை அன்ன நெடும் கண் நீர் ஞெண்டு*
*இரை தேர் வெண்_குருகு அஞ்சி அயலது*
*ஒலித்த பகன்றை இரும் சேற்று அள்ளல்*
*திதலையின் வரிப்ப ஓடி விரைந்து தன்*
*நீர் மலி மண் அளை செறியும் - அகம் 8-12*

*இதன் பொருள்:*
*வேம்பின் அரும்பினைப் போன்ற நீண்ட கண்ணினையுடைய நீர் நண்டானது இரையினைத் தேடித்திரியும் வெள்ளைக் கொக்குக்கு அஞ்சி, அருகிலிருக்கும் தழைத்த பகன்றையினை உடைய கரிய சேறும் சகதியுமாய் இருக்கும் தரையில் திதலையைப் போன்று வரிகள் உண்டாக ஓடி, விரைவாகச் சென்று, தன் ஈரம் மிக்க மண் வளையுள் பதுங்கிக்கொள்ளும்.*



*இங்குள்ள ஒவ்வொரு சொல்லையும் உற்றுப்பார்க்கவேண்டும்.*

நண்டுக்கு ஒரு பக்கத்துக்கு நான்கு என மொத்தம் எட்டுக்கால்கள் உண்டு. அவற்றைத் தவிர இரண்டு கவட்டைபாய்ந்த முன்னங்கைகளும் உண்டு. இவற்றின் நுனியில் கூரான நகங்கள் உண்டு. இந்த நண்டு, முன்னால், பின்னால், பக்கவாட்டில் என்று எத்திசையிலும் செல்லக்கூடியது. இது நடப்பதோ சேற்று அள்ளல், அதாவது குழைசேறு. வைத்தவுடன் கூரான நகங்கள் பொதக்கென்று ஆழ்ந்துவிடும். இது ஒரு இரைதேடும் கொக்கைக்கண்டு அஞ்சி ஓடுகிறது. எனவே வளைந்து வளைந்துசெல்லாமல் நேராக ஓடித் தன் வளைக்குள் புகுந்துவிடும். அப்போது அந்தக் கால்கள் ஏற்படுத்தும் தடத்தைக் கற்பனை செய்து பாருங்கள். நகங்கள் சேற்றில் ஆழும்போது அவை ஏற்படுத்தும் பலவான புள்ளிகள். அந்த நகங்களை விரைவாக எடுத்து முன்னே வைக்கும்போது ஏற்படும் சிறிய நேர்கோடுகள், அந்தப் புள்ளிகளை இணைத்தவாறு செல்லும். அதுவே திதலை.

*2. இத்தகைய புள்ளிகளாகிய வரி போன்ற அமைப்பு பெண்களின் மேனியில் அரும்புகின்றது என்று சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.*

*கோடு ஏந்து அல்குல் அரும்பிய திதலை*
*வார்ந்து இலங்கு வால் எயிற்று பொலிந்த தாஅர்*
*சில் வளை பல் கூந்தலளே அவளே - நற் 198/6-8*

*இதன் பொருள்:*
*வரிகள் பொருந்திய உயர்ந்துநிற்கும் அல்குலில் அரும்பிய திதலையும்*
*நேராக விளங்கும் வெண்மையான பற்களும், அழகுள்ள மாலையும்,*
*ஒருசில வளையல்களும், நிறைந்த கூந்தலும் உடையவள் அவள்;*
*அரும்புதல் என்பது முகிழ்த்து உருவாதல்.*

*3. இந்தத் திதலை பெண்களின் மேனியில் எவ்வாறு தோற்றமளிக்கிறது என்று பார்ப்போம்.*
*3.1*
*பொன் உரை கடுக்கும் திதலையர் - திரு 145*

*என்கிறது திருமுருகாற்றுப்படை, இதற்குப் பொன்னை உரைத்துப்பார்க்குபோது ஏற்படும் தடம் போன்ற திதலையயுடையவர் என்பது பொருள்:*



பொன் உரை - திதலை

பொன்னை எவரும் நேர்கோட்டில்தான் உரைத்துப்பார்ப்பர். அந்த உரைகல் சொரசொரப்பானது. அதில் பொன்னைத் தேய்க்குப்போது புள்ளிகளாலாகிய ஒரு நேர்கோடு உருவாகும். மேலும் உண்மையான தங்கமாயிருந்தால் மினுமினுக்கும். எனவே மினுமினுப்புடன் கூடிய புள்ளிகளாலான கோடுகளின் அமைப்பே திதலை என்றாகிறது.

*3.2*
*மாவின்*
*தளிர் ஏர் அன்ன மேனி, தளிர் புறத்து*
*ஈர்க்கின் அரும்பிய திதலையர் - மது 706-708*

என்கிறது மதுரைக்காஞ்சி. இதன் பொருள்:

*மாமரத்தின்*
*தளிரினது அழகை ஒத்த நிறத்தினையும், தளிரினது புறத்தில்*
*ஈர்க்குப்போலத் தோன்றிய திதலையையும் உடையர்*
வெற்றிலையை நீளவாக்கில் மடித்தால் வெளிப்புறத்தில் ஒரு நீண்ட காம்பு தெரியுமல்லவா! அதுதான் ஈர்க்கு. அதைப்போன்ற மாந்தளிரின் ஈர்க்கு போன்றதாம் இந்தத் திதலை. பொதுவாக மாந்தளிரின் நிறத்தைப் பெண்களின் மேனி நிறத்துக்கு ஒப்பிடுவர். அந்தத் தளிரின் ஈர்க்குப் போன்றதாம் பெண்களின் தளிர் மேனியில் தோன்றும் திதலை.
இந்த ஈர்க்கு, பொன்னிறத்தில் நீண்டு இருப்பதைப் படத்தில் பாருங்கள்.




**தளிர்ப்புறத்து ஈர்க்கு - திதலை**

*3.3*
*மா ஈன்ற தளிர் மிசை மாயவள் திதலை போல்*
*ஆய் இதழ் பன் மலர் ஐய கொங்கு உறைத்தர - கலி 29/7,8*

*என்கிறது கலித்தொகை. இதற்கு, மா மரம் துளிர்விட்ட தளிரின் மேல், மாமை நிற மகளிரின் அழகுத் தேமல் போல, என்பது பொருள்:*

*அழகிய இதழ்களைக் கொண்ட பலவான மலர்களின் மென்மையான மகரந்தப்பொடிகள் படிந்திருக்க, மாநிற மகளிரின் மேனியில் திதலையானது, மாந்தளிரின் மேல் மாம்பூக்களின் மகரந்தப்பொடிகள் உதிர்ந்துகிடப்பது போன்று இருப்பதாகக் கலித்தொகை குறிப்பிடுகிறது.*

*எந்த மரத்தின் பூவாக இருந்தாலும் அதன் தாது பொன்னிறத்தில்தான் இருக்கும்.*

*இந்த மாந்தளிர்கள் தொங்கியபடி இருப்பதை மேலுள்ள படம் காண்பிக்கிறது. அதன் மீது உதிர்ந்த பூந்தாதுக்கள் சரிந்து துகள்களாலான ஒரு நேர்கோடாகப் பொன்னிறத்தில் மின்னிக்கொண்டிருக்கும் அல்லவா! அதுவே திதலை.*

*4. இந்தத் திதலை பெண்களின் மேனியில் எங்கெங்கு தோன்றுகின்றன என்பதையும் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.*
*4.1*
*திதலையைப் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியத்தில் 29 இடங்களில் காணப்படுகின்றன. அவற்றில் 15 இடங்களில் திதலை என்பது அல்குலில் காணப்படுவதாகக் குறிப்புகள் உள்ளன. அவற்றில் 13 இடங்களில் திதலை அல்குல் என்ற தொடர் இடம்பெற்றுள்ளது.*

*அவற்றில் சில....*

*திதலை அல்குல் முது பெண்டு ஆகி - நற் 370/6*
*திதலை அல்குல் என் மாமை கவினே - குறு 27/5*
*திதலை அல்குல் நின் மகள் - ஐங் 29/4*
*திதலை அல்குல் துயல்வரும் கூந்தல் - ஐங் 72/2*
*திதலை அல்குல் எம் காதலி - அகம் 54/21*

*இங்கே அல்குல் என்பது பெண்குறி என்று தவறாகப் புரிந்துகொள்ளப்படுகிறது. அல்குல் என்பது இடுப்புக்குச் சற்றே கீழ் உள்ள பகுதி. அது இடுப்பைச் சுற்றி எந்த இடமாகவேண்டுமானாலும் இருக்கலாம்.*

*கொள்வீர் அல்குல் ஓர் கோவணம் - தேவா-சம்:582/2*
*(பொருள்: அரையிற் கோவணம் உடுத்தியவராய் விளங்கும் கள்வரே)*

*என்கிற சம்பந்தர் தேவாரத்தில் அல்குலில் கோவணம் அணிந்தவராக இறைவனை விளிக்கிறார் சம்பந்தர்.*

*இடுப்பில் கயிறுகட்டி, அதில் கோவணத்தைச் செருகி, முன்பக்க மானத்தை மறைத்துப் பின்பக்கமாக இழுத்துப் புட்டத்திற்கு மேலே செருகியிருப்பர். எனவே, அல்குல் என்பது அடிவயிறு, அல்லது அடிமுதுகு என்றாகிறது.*

*திதலை அல்குல் துயல்வரும் கூந்தல் - ஐங் 72/2*

*என்ற அடி, அல்குலில் கூந்தல் கிடந்து அசையும் என்கிறது. குட்டையான கூந்தல் முதுகில் கிடந்து அசைவதைப் பற்றி யாரும் பாராட்டிப்பேசமாட்டார்கள். நீண்ட கூந்தல் முதுகுக்கும் கீழே தொங்கி, இடுப்புக்கும் கீழே எழுந்துநிற்கும் புட்டத்தின் மேல் பட்டு, நடக்கும்போது முன்னும் பின்னும், பக்கவாட்டிலும் அசைவதே துயல்வருதல். இதைத்தான்*

*கோடு ஏந்து அல்குல் அரும்பிய திதலை - நற் 198/6*

*என்கிறது நற்றிணை. எனவே அல்குல் பெரும்பாலும் பெண்களின் இடுப்புக்குக் கீழான பின்புறம் என்பதே சரி எனப்படுகிறது.*

*எனவே, மிகப்பெரும்பாலும் பெண்களின் அடிஇடுப்பைச் சுற்றி அல்குல் அரும்புவதாக அறிகிறோம்.*

*4.2*
*அடுத்து, திதலை என்பது பெண்களின் மார்புப்பகுதியிலும் காணப்படும் என்கின்றன இலக்கியங்கள்.*

*திதலை மென் முலை தீம் பால் பிலிற்ற*
*புதல்வன் புல்லி புனிறு நாறும்மே - நற் 380/3,4*

*என்கிறது நற்றிணை. இதன் பொருள்:*
*தேமல் படிந்த மென்மையான கொங்கைகளின் இனிய பால் சுரந்து வழிய*
*புதல்வனை அணைத்துக்கொள்வதால் புனிற்றுப் புலவு நாறுகின்றது;*

*புதல்வன் தடுத்த பாலொடு தடைஇ*
*திதலை அணிந்த தேம் கொள் மென் முலை - அகம் 26/12,13*

*என்கிறது அகநானூறு. இதன் பொருள்:*
*புதல்வனுக்கே திகட்டும் பாலுடன் சரிந்து*
*அழகுத் தேமலை அணிந்த இனிமை கொண்ட மெல்லிய கொங்கைகள்*

*என்ற அடிகளால், பிள்ளைபெற்ற பெண்களின் மார்புப்பகுதியில் திதலை அரும்புவதாக அறிகிறோம்.*

*திதலை செய் பூண் முலை மங்கை_பங்கா என் சிவகதியே - திருவா:6 41/4*

*என்ற திருவாசக அடியும் இதனை உறுதிப்படுத்தும்.*

*4.3*
*அடுத்து, பெண்களின் வயிற்றுப்பகுதியிலும் திதலை அரும்புவதாக அறிகிறோம்.*

*புதல்வன் பயந்த திதலை அம் வயிற்று*
*வால் இழை மகளிர் நால்வர் கூடி - அகம் 86/11,12*

*என்கிற அகநானூற்று அடிகளுக்கு,*

*மகனைப் பெற்ற திதலையையுடைய அழகிய வயிற்றினையுடைய*
*தூய அணிகலன்களையுடைய மகளிர் நால்வர் கூடிநின்று*
*என்று பொருள்.*

*வரி கிளர் பணை தோள் வயிறு அணி திதலை*
*அரியலாட்டியர் அல்கு மனை வரைப்பில் - அகம் 245/8,9*
*(பொருள்: வரி விளங்கும் பருத்த தோளினையும், வயிற்றில் அணிந்த திதலையையும்*
*உடைய கள்விற்கும் மகளிர், இருக்கின்ற மனையகத்தில்)*

*என்ற அகநானூற்று அடிகள் இதற்குச் சான்று பகர்கின்றன. இந்த மகளிர் பிள்ளைபெற்று பலநாட்கள் ஆனவர்கள்.*

*பசலை பாய்ந்த திதலை தித்தி*
*அசைந்த அம் வயிறு அடைய தாழ்ந்த - உஞ்ஞை 43/128,129*

*திதலை அம் வயிறு அங்கையின் அதுக்கி - உஞ்ஞை 44/25*

*என்ற பெருங்கதை அடிகளும் இதனை மெய்ப்பிக்கின்றன.*

*5. அடுத்து எவ்வகைப் பெண்களுக்கு இந்தத் திதலை அரும்பும் என்று காண்போம்.*
*5.1*
*முதலாவதாக, பேறுகாலத்துக்குச் சற்றுப்பிந்திய பெண்களுக்கு மார்பில் இந்தத் திதலை அரும்பும் என்று முன்னர்க் கண்டோம்.*

*5.2*
*அடுத்து, பிள்ளை பெற்றுச் சில ஆண்டுகளான பெண்களுக்கு வயிற்றில் இந்தத் திதலை அரும்பும் என்றும் முன்னர்க் கண்டோம்.*

*5.3*
*புதல்வன் ஈன்று என பெயர் பெயர்த்து அம் வரி*
*திதலை அல்குல் முது பெண்டு ஆகி - நற் 370/5,6*
*(பொருள்: புதல்வனை ஈன்றதனால் தாய் என்னும் வேறொரு பெயரைப் பெற்று, அழகிய*
*வரிகளையுடைய திதலையை உடைய அல்குலுடன் முதுபெண் ஆகி)*

*என்ற அடிகள் ஈன்று அண்மைத்தான பெண்களுக்கு அல்குலிலும் திதலை தோன்றும் என்று உணர்த்துகின்றன. இங்கு, அம் வரி திதலை என்ற சொற்கள், திதலை என்பது*

*(பொன்னைத் தேய்த்த) அழகிய கோடு போன்றது என்று நாம் கண்டதை உறுதிசெய்கின்றது.*

*5.4*
*திதலை அல்குல் பெரும் தோள் குறு_மகட்கு - நற் 6/4*

*திதலை அல்குல் குறு_மகள் - நற் 77/11*

*திதலை அல்குல் குறு_மகள் அவனொடு*
*சென்று பிறள் ஆகிய அளவை - அகம் 189/9,10*

*என்ற அடிகளில் காணப்படும்  குறுமகள் என்பது இளம்பெண்ணைக் குறிக்கும். இவள் திருமணப்பருவத்து இளம்பெண்.*

*இவளது அல்குலிலும் திதலை தோன்றும் என அறிகிறோம்.*

*6. அடுத்து, இந்தத் திதலை என்பது மகளிரின் மேனிக்கு அழகுசேர்ப்பது என்றும், பாராட்டப்படுவது என்றும் இலக்கியங்கள் பகர்கின்றன.*

*கண்ணும் தோளும் தண் நறும் கதுப்பும்*
*திதலை அல்குலும் பல பாராட்டி*
*நெருநலும் இவணர்-மன்னே - நற் 84/1-3*

*இதன் பொருள்:*
*என் கண்ணையும், தோளையும், குளிர்ச்சியான நறிய கூந்தலையும்*
*திதலை படர்ந்த அல்குலையும் பலவாறு பாராட்டி*
*நேற்றுக்கூட இவ்விடம் இருந்தார், நிச்சயமாக*

*கடல் ஆடு வியல் இடை பேர் அணி பொலிந்த*
*திதலை அல்குல் நலம் பாராட்டிய*
*வருமே தோழி வார் மணல் சேர்ப்பன் - நற் 307/3-5*

*இதன் பொருள்:*
*கடலாட்டுவிழா நடைபெறும் அகன்ற இடத்தில், பெருமைமிக்க அணிகளால் பொலிவுபெற்ற உன் தேமல் படர்ந்த அல்குலின் அழகைப் பாராட்டுவதற்கு வருகின்றான் தோழி! நீண்ட மணல் பரந்த நெய்தல் நிலத் தலைவன்!*

*காதல்கொண்ட தலைவர்களால், இந்தத் திதலை பாராட்டப்படுவது மட்டுமன்று. காதல்வயப்பட்டு, பிரிவுத்துன்பத்தால் வாடும் தலைவிகளும் பிரிவால் வாடும் தம் கவின்பெறு திதலையை எண்ணிப் பெருமூச்சு விடுவதும் உண்டு எனக் காண்கிறோம்.*

*கன்றும் உண்ணாது கலத்தினும் படாது*
*நல் ஆன் தீம் பால் நிலத்து உக்கு ஆங்கு*
*எனக்கும் ஆகாது என் ஐக்கும் உதவாது*
*பசலை உணீஇயர் வேண்டும்*
*திதலை அல்குல் என் மாமை கவினே - குறு 27*

*இதன் பொருள்:*
*கன்றும் உண்ணாமல், பாத்திரத்திலும் வீழாமல்*
*நல்ல பசுவின் இனிய பால் நிலத்தில் சிந்தியதைப் போல்*
*எனக்கும் பயன்படாமல், என் தலைவனுக்கும் இன்பம் செய்யாமல்,*
*பசலைநோய் உண்பதை விரும்பும்*
*திதலை படர்ந்த என் அழகிய பின்புறத்தின் மாந்தளிர் போன்ற அழகினை.*

*7. அடுத்து, திதலை என்பது ஆகுபெயராகவோ, ஒப்புப்பொருளாகவோ பெண்களின் மேனி சார்ந்ததாக இல்லாமலும் சங்க இலக்கியத்தில் ஓரிடத்தில் வருவதைக் காண்கிறோம்.*

*திதலை எஃகின் சேந்தன் தந்தை*
*தேம் கமழ் விரி தார் இயல் தேர் அழிசி - நற் 190/3,4*

*புள்ளிகள் படர்ந்த வேலையுமுடைய சேந்தன் என்பானின் தந்தையாகிய, தேன் கமழ்கின்ற விரிந்த மலராலான மாலையையும், சிறப்பாகச் செய்யப்பட்ட தேரையும் உடைய அழிசி என்பது இதன் பொருள்.*

*பற்பல காரணங்களால், பெண்களின் மேனியில் காணப்படும் பொன்னிற மாற்றம்தான் திதலை என்றிருக்க, ஒரு வேலுக்கு எவ்வாறு திதலை அரும்பும்?*

*இங்கே, திதலை எஃகின் என்ற தொடரை, தீத்தலை எஃகின் என்று பாடம் கொள்வார் ஔவை துரைசாமியார். ஆனால்,*

*மிகப் பல ஆசிரியர்கள் திதலை எஃகின் என்றே பாடம் கொண்டு தேமல் படர்ந்த வேல் என்று பொருள் கொள்கின்றனர்.*

*சிலவகை இரும்புகளைத் தேய்க்கும்போது புள்ளிகளோடு கூடிய வரிகள் தோன்றலாம். ஆனால் அதனைப் புலவர் விதந்து குறிப்பிடுவது ஏன்? பகைவரைக் குத்தியதால் வேலில் பட்ட குருதி வழிந்த தடம் துடைக்கப்படாமல் காய்ந்துபோய், பொன் உரை போலத் தோன்றுவதால் அதனையும் திதலை எஃகு என்கிறார் புலவர் என்று ஓர் அருமையான விளக்கம் தருகிறார் புலியூர்க்கேசிகனார்.*

*இவ்வே பீலி அணிந்து மாலை சூட்டி*
*கண் திரள் நோன் காழ் திருத்தி நெய் அணிந்து*
*கடி உடை வியன் நகரவ்வே அவ்வே*

பகைவர் குத்தி கோடு நுதி சிதைந்து
கொல் துறை குற்றில மாதோ என்றும்
உண்டு ஆயின் பதம் கொடுத்து
இல் ஆயின் உடன் உண்ணும்
இல்லோர் ஒக்கல் தலைவன்
அண்ணல் எம் கோமான் வை நுதி வேலே - புறம் 95

என்ற ஔவையின் பாடல் நினைவுக்கு வருகிறதல்லவா?

இதுகாறும் கண்டவற்றால், திதலை என்பது பெண்களின் மேனியில் சின்னஞ்சிறு பொன்னிறப் புள்ளிகளால் ஏற்பட்ட வரிவரியான அமைப்பு என்பது தெரிய வருகிறது.

இதனை,
1. தேமல்., *Yellow spots on the skin, considered beautiful in women;*
2. ஈன்ற பெண்களுக்குள்ள வெளுப்பு நிறம். *Pale complexion of women after confinement;*
என்கிறது தமிழ்ப் பேரகராதி *(Tamil Lexicon).*

தொடர்பு: முனைவர்.ப.பாண்டியராஜா
*pipiraja@gmail.com*
*http://sangacholai.in*
*tamilconcordance.in/*

# 12. பண்டைய மதுரையின் இருபெரு நியமங்கள்

## — முனைவர் ச.கண்மணி கணேசன்

***முன்னுரை:***

*மாங்குடிமருதனார் இயற்றிய மதுரைக்காஞ்சியில் அவர் சுட்டிச் செல்லும்*

*"ஓவுக் கண்டன்ன இருபெரு நியமத்து"*

*என்ற தொடர் அறிவுறுத்தும் இரண்டு நியமங்கள் எவை என்பதை வரலாற்றியல் நோக்கில் காண்பதே இவ் ஆய்வுக்கட்டுரையின் நோக்கமாகும்.*

*மதுரைக்காஞ்சி ஆய்வுக்குரிய முதன்மை ஆதாரமாக அமைகிறது. பிற செவ்வியல் இலக்கியங்களும், கள ஆய்வும் துணைமை ஆதாரங்களாகும்.*

*மதுரைக்காஞ்சிக்கு உரை எழுதிய பெருமழைப்புலவர் பொ.வே.சோம சுந்தரனார், 'ஓவியத்தைக் கண்டாலொத்த காட்சியினை உடைய இரண்டாய பெரிய அங்காடித்தெருவின் கண்' என்று பதவுரையும், 'இருவகைப்பட்ட அங்காடித்தெருவின் கண்' என்று கருத்துரையும் (பத்துப்.-2ம் பாகம்-ப.- 129&130) கூறுகிறார். முனைவர் வி. நாகராசன், 'ஓவியத்தைக் காண்பது போல் கண்ணுக்கு இனிமையைத் தரும் நாளங்காடி, அல்லங்காடி என்ற இரு கூற்றினை உடைய பெரிய அங்காடித்தெரு' (பத்துப்.-2ம் பகுதி-ப.- 99) என்கிறார். 'ஓவியத்தைக் கண்டாற்போன்ற காட்சியை உடைய இரு அங்காடித் தெருவில்', என்கிறார் (பத்துப்.-பகுதி-2-ப.-133) புலவர் அ.மாணிக்கனார். இந்த உரைகள் சிலப்பதிகாரச் செய்தியோடு ஒத்துப் போகாமையே இந்த ஆய்விற்குக் காரணமாக அமைகிறது.*

*மாங்குடி மருதனார் பேசும் இருபெரு நியமங்கள் மதுரையிலிருந்த இரண்டு பெரிய ஆலயங்களையே சுட்டுகின்றன.*

*பாடற்செய்திகள் பின்வரும் வரிசைமுறையில் அமைகின்றன. பாண்டியர் குடி, செங்கோன்மை, வெற்றி, நால்வகைப் படைகள், நெடுஞ்செழியனின் போர்வேட்கை, அவனது முன்னோர் பெருமை, பாண்டிய நாட்டு ஊர்கள், கொடைத்தன்மை, குறுநில மன்னர் இருக்கை, தலையாலங்கானத்துப் போர், கொற்கை, பரதவரை அடக்கல், சான்றாண்மை,போன்ற சிறப்புகளைப், பாடியபின்னர் காஞ்சித்திணைப்பொருளை வலியுறுத்துகிறார்.*

*தொடர்ந்து ஐந்து நிலவளங்களை அணுகக் கொண்டு இருக்கும் வையை, ஆற்றங்கரைப் பாண்சேரி, அதையொட்டிய அகழி, கோட்டைவாயில், உள்ளே எழுந்த பேரொலி,என்று அமையும் வருணனையில் அடுத்து வருவதே இருபெரு நியமமும், திருவிழாக் கொடிகளும் ஆகும்.*

*அதையடுத்து நாற்படைகள் வந்து போகும் மதுரைத் தெருக்களில் ஏழாம் நாள் புனித நீராட்டின் போது எழுந்த நாளங்காடி ஆரவாரம் பேசப்படுகிறது.*

*தொடர்வது பெருநிதிக்கிழவர் வழிபாடு, மாலையில் தெய்வங்கட்குப் பலியிட்ட விழா ஆரவாரம், பௌத்த சமண அந்தணர் பள்ளிகள், அறங்கூறு அவையத்தார் தெரு, காவிதி மாக்கள் தெரு, வணிகர் தெருக்களில் எழுந்த அல்லங்காடி ஆரவாரம் முதலியனவாம்.*

*இவ்வாறு நாளங்காடியையும், அல்லங்காடியையும் விரிவாக விதந்து ஓதுவதால் 'இருபெருநியமம்' என்பது இரண்டு ஆலயங்கள் என்பதும், அந்த ஆலயங்களில் திருவிழா குறித்த கொடிகள் ஏற்றப்பட்டிருந்தன என்பதும் புலனாகிறது. இரண்டு அங்காடிகள் என்று பொருள் கொண்டால் கூறியது கூறல் குறையோடு பொருள் தொடர்நிலை தெளிவுற அமையவும் வழியில்லை.*

*பிங்கல நிகண்டு 'நியமம்' என்ற சொல்லுக்கு 'கடைத்தெரு' என்னும் பொருள் மட்டுமின்றி 'தெய்வம் வழிபடல்' என்றும் பொருள் தருகிறது.*

*பிற சங்கஇலக்கியங்களிலும் நியமம் என்ற சொல் ஆலயம் என்ற பொருளில் வழங்குகிறது. கோசர் மதுரையை அடுத்த செல்லூரின் கிழக்கே ஒரு நியமத்தை நிறுவினர். அங்கே கடவுள்மங்கலம் செய்ய வேள்வி நிகழ்த்தினர் என்பது மருதனிளநாகனாரின் அகநானூற்றுப் பாடல்கள் (90&220) மூலம் தெரிகிறது.*

*பண்டைத் தமிழகத்தில் கோயில், நகர், நியமம், கோட்டம், பள்ளி என ஐந்து வகை வழிபாட்டிடங்கள் இருந்தன என்று சிலப்பதிகார ஊர்காண்காதையில் இளங்கோவடிகள் வரிசைப்படுத்தி உள்ளார்.(அடி-7-11)*

*கோயில் என்பது வேதநெறிப்படி தீமுறை வழிபாடு நிகழ்ந்த இடமாகும்.*
*நகர் என்பது அரசுக்குச் சொந்தமான நிலத்தில் மக்களுக்காக மன்னன் அமைத்த ஆலயம் ஆகும்.*
*நியமம் என்பது அரசரும் அந்தணரும் அல்லாத பிற மக்கட்சமூகத்தார் நிறுவிய வழிபாட்டிடம் ஆகும். ('சிலப்பதிகாரம் காட்டும் வழிபாட்டிடங்கள்'- மின்தமிழ் மேடை- ஜூலை- 2018- ப- 70-82)*
*கோட்டம் என்பது வேதநெறி அல்லாத வழிபாட்டு முறையைப் பின்பற்றும் இடமாகும். கோட்டத்தில் வேள்விச்சாந்தி நிகழ்த்தும்போது அது கோயில் என்று அழைக்கப்பட்டது. அறச் சாலையாகவும் கல்விச் சாலையாகவும் அமைந்த வழிபாட்டிடமே பள்ளி என்று அழைக்கப்பட்டது.*

*மதுரை வருணனையில் இளங்கோ, திருமாலுக்குரிய வழிபாட்டிடத்தை,*
*"உவணச் சேவல் உயர்த்தோன் நியமம்"(மேலது-அடி-8) என்கிறார்.*

*மதுரைக்காஞ்சி சுட்டும் இருபெரு நியமங்களுள்; சுயம்புலிங்கத்தைக் கருவறையில் கொண்டு இன்று மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயில் என்று அழைக்கப்படும் 'மழுவாள் நெடியோனி'ன் நியமம் ஒன்று; இன்னொன்று பண்டு உவணச்சேவல் உயர்த்தோன்*

*நியமம் என்று அழைக்கப்பட்டு இன்று பன்னிரண்டு துண்டுகள் ஆக்கப்பட்டிருக்கும் கூடல் அழகர் கோயில் எனலாம்.*

*சங்ககாலத்தில் ‘மழுவாள் நெடியோன்’ நியமத்தை வடகிழக்கிலும், திருமால் நியமத்தை மேற்கெல்லையிலும் கொண்டிருந்த மதுரை பின்னர் மழுவேந்திய சிவனுக்குரிய ஆலவாய் என்று பெயர் பெற்ற கோவிலை ஊரின் நடுவிடமாகக் கொண்டு விரிந்துள்ளது. இடைக்காலத்தில் ஆவணி மூலவீதியை அடுத்துக் கோட்டையுடன் கூடிய மதுரை நாயக்கர் ஆட்சிக் காலத்தில் நாலாபுறமும் விரிந்தது. ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திலும் அங்ஙனமே விரிந்தது. அப்படி விரியும்போது இருபெரு நியமங்களுள் ஒன்றான திருமால் ஆலயம் துண்டாடப்பட்டுள்ளது.*

*பண்டைத் தமிழகத்தில் ஊர்கள் கீழ், மேல் என்று இருகூறுபட்டிருந்தன. (கீழக்குயில்குடி,மேலக்குயில்குடி; கீழ்மாத்தூர், மேல்மாத்தூர்; கீழ்ப்பனங்குடி, மேல்பனங்குடி முதலியன சான்றாகும்.) கீழ்ப்பகுதியிலேயே பெரும்பாலும் இறந்தோரைப் புதைக்கும் இடங்கள், தவ வாழ்க்கை மேற்கொள்வோர்க்குரிய இருப்பிடங்கள் இருந்தன என்பது அகழ்வாய்வு மூலம் புலப்படுவதை ஆய்வாளர் கூறியுள்ளனர் (தேவகுஞ்சரி- Madurai Through The Ages- p.-16). இன்றைய மதுரையின் மையப்பகுதியை ஒட்டித் தென்கிழக்கில் கீழ்மதுரை உள்ளது.*

*இக்கீழ்மதுரைக்கும் இன்றைய மதுரை தெற்குவெளிவீதியின் கிழக்கு மூலைக்கும் இடையே உள்ள தூரம் நடைப்பயண தூரமே ஆகும். கீழ்மதுரையை அடுத்துள்ள அனுப்பானடியில் வரலாற்றுக்கு முந்திய காலத் தாழிகளும் பிற எச்சங்களும் கிடைத்துள்ளன (B.S.Baliga-Gazetteers Of India-p.393). இதனால் கீழ்மதுரைக்கு நேர்மேற்கிலேயே பண்டைய மதுரை இருந்திருக்க வேண்டும் எனலாம். அவ்வாறு கொண்டால் ஆலவாய்க்கோயில் நகரின் வடகிழக்குத் திசையில் அமைகிறது.*

*இன்றைய மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயிலின் கருவறையில் உள்ள லிங்கம் சுயம்புலிங்கம் எனவும், அது பல ஆண்டுகளுக்கு முன் இருந்த ஒரு கடம்பமரத்தின் படிமம் என்றும் கூறுகின்றனர். (P.V.Jeyachandran-The Madurai Temple Complex-Madurai Kamaraj University- Ph.D.thesis-1979-p.-255&261) மரங்கள் இவ்வாறு காலப்போக்கில் கார்பன் சேர்க்கையால் கல்மரங்களாவது உண்டு என அறிவியல் அறிஞர்கள் கூறியுள்ளனர் (சு.கி.செயகரன்- ”பாசில்கள்- பூமகளின் காலச் சுவடுகள்- கலைக்கதிர்- செப்டம்பர் 1977-ப.-63). எனவே சங்ககாலம் தொட்டு இக்கோயிலின் கருவறையிலுள்ள லிங்கம் வழிபடுபொருளாக இருக்கக் கூடியது சாத்தியமே. திருவிளையாடற் புராணக்கதையும் தேவர்களெல்லாம் வழிபாடு செய்துகொண்டு இருந்த லிங்கம் கடம்பவனக் காட்டில் இருந்ததாகவே கூறுகிறது (திருநகரம் கண்ட படலம்-பா-3-12). ஏற்கெனவே வழிபாடு நிகழ்ந்த இடத்தைக் குலசேகர பாண்டியன் கற்கோயில் எடுத்து விரித்துள்ளான்.*

*சங்ககால மதுரை இன்றைய மதுரை மையப்பகுதியின் தென்கூறை மட்டும் உள்ளடக்கியது என்ற கருத்தை ஆதரிக்கும் வகையில் மயமதம் கூறும் நகரமைப்பு விதிகளும் உள்ளன. பண்டு தமிழகத்தில் மயமதமே பெரிதும் போற்றப்பட்டது. சாத்தனார்,*

*”மிக்க மயனால் இழைக்கப்பட்ட*
*சக்கரவாளக் கோட்டைமீங் கிதுகாண்“ (மணி.- சக்கர.- அ.-201-202)*
*என மயனின் மரபு போற்றப்பட்டமையைக் குறிப்பிட்டுள்ளார். திருத்தக்கதேவர்,*

*“மயனிழைத்த அம்பாவையின் வைகினாள்“(சீவக சிந்தாமணி- பதுமையார் இலம்பகம்- பா-145)என்று மயமதத்தின் பெருமையை உவமையில் எடுத்தாள்கிறார். வில்லிபுத்தூராரும்,*

*“சிற்ப வல்லபத்தின் மயன் முதலுள்ள தெய்வ வான் தபதியர்“ (பாரதம்- ஆதிபருவம்- இந்திரப்பிரத்தச் சருக்கம்- பா-18) என்று மயனை முதன்மைப் படுத்துகிறார். கம்பரும், இராமனுக்கும் சீதைக்கும் திருமணம் நிகழ்ந்த மண்டபம் மயனால் நிருமிக்கப்பட்டது என்கிறார். (இராமாயணம்- பால காண்டம்- கடிமணப் படலம்- பா-45) தெய்வத் தச்சர்களில் மயனே தமிழகத்தோரால் பெருமைப்படுத்தப் படுகிறான்.*

*மயமதம் சிவன்கோயில் நகரின் ஈசான்ய திசையில் அமைய வேண்டும் என்று கூறுகிறது. (பாகம்- 1-ப.-76). இதனால் சங்ககால மதுரையில் மழுவேந்திய சிவபெருமானின் கோயில் மயன் விதித்தபடி வடகிழக்குத் திசையில் அமைந்திருந்தது என்பது ஏற்றுக் கொள்ளத் தக்கதாகிறது. அத்துடன் திருமால் கோயில் ஊரை நோக்கி இருப்பது சுபபலனை அளிக்கும் என்றும் மயமதம் கூறுகிறது (பாகம்-1-ப.-82). இன்றைய கூடலழகர் கோயிலே மதுரையின் பழைய வைணவ ஆலயம் என்பது பரிபாடல் திரட்டு மூலம் தெளிவாகிறது. இக்கோயில் தெற்குமாசி வீதியும், மேற்குமாசி வீதியும் சந்திக்கும் மூலையில் கிழக்கு முகமாக உள்ளது. பண்டு இக்கோயில் நேர்மேற்கில் அமைந்ததாதல் வேண்டும். சிவன் கோயிலை மையமாக வைத்து, அதைச் சுற்றி நாற்புறமும் வீதிகள் இணையாகச் செல்லும் அமைப்பு பரிபாடல் திரட்டு காலத்திலேயே உருவாகி இருக்க வேண்டும் என்பது,*

*”மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்*
*பூவோடு புரையும் சீறூர் பூவின்*
*இதழகத் தனைய தெருவம் இதழகத்து*
*அரும்பொகுட் டனைத்தே அண்ணல் கோயில் “(பரி.- திரட்டு- பா-7)*
*என்ற பாடலடிகள் மூலமாகத் தெளிவாகிறது. மதுரையின் அருகில் இருந்தையூர் என்ற குடியிருப்புப் பகுதி இருந்தமையும்,*

*“நான்மாடக்கூடல் எதிர்கொள்ள ஆனாது*
*மருந்தாகும் தீநீர் மலிதுறை மேய*
*இருந்தையூர் அமர்ந்த செல்வ “(மேலது-பா-1)*
*என்ற பரிபாடல் திரட்டு அடிகள் மூலம் தெரிய வருகின்றது. அத்துடன் வையையின் போக்கில் மதுரைக்கு முன்னரே இருந்தையூர் இருந்ததென்பதும் புலனாகிறது.*

*இவ்வூரின் சுற்றுப்புறமும் சூழலும் குறித்து இதே பாடல் மேலும் உரைப்பதாவது:*

*“ஒருசார் அணிமலர் வேங்கை மராஅ மகிழும்*
*……………………………………………………………..*

*மணிநிறங் கொண்ட மலை*
*ஒருசார் தண்ணறுந் தாமரைப் பூவின் இடையிடை*
*…………………………………………………………………..*
*கண் வீற்றிருக்கும் கயம்*
*ஒருசார் சாறுகொள் ஓதத்து இசையொடு மாறுற்று*
*……………………………………………………………………*
*திருநயத்தக்க வயல்*
*ஒருசார் அறத்தொடு வேதம்*
*…………………………………………………………………………*
*அறத்தில் திரியாப் பதி ".* இவ்வாறு ஒருபுறம் மலையும்,

ஒருபுறம் குளமும், ஒருபுறம் வயலும், ஒருபுறம் ஊரும் கொண்டிருந்த திருமால் கோயில் இன்றைய கூடலழகர் கோயிலின் இருப்பிடத்தோடு பொருந்தியுள்ளது. ஒருபுறம் பசுமலையும், ஒருபுறம் ஆவணிமூல வீதியை அடுத்துக் கோட்டை, அகழியுடன் கூடிய மதுரை ஊரும், ஒருபுறம் மாடக்குளமும், ஒருபுறம் பசுமையான வயற்புறமும் கொண்டது இன்றைய கூடலழகர் கோயில். (1980 வரை இருந்த வயற்புறங்களில் இன்று T.V.S.நகர் வரை பல புறநகர்ப் பகுதிகள் தோன்றி விட்டன.)

கூடலழகர் கோயிலில் எழுந்தருளியிருக்கும் திருமால் இருந்த கோலத்தில் காட்சி அளிக்கிறார். இவருக்கு இருந்தவளமுடையார் என்றும் பெயர். இருந்த வளமுடையார் கோயில் கொண்டிருக்கும் பகுதி இருந்தையூர் ஆகும். இன்றைய கூடலழகர் கோயிலின் இருப்பிடம் மதுரையின் தென்மேற்குப் பகுதியாதலால் வையை இப்பகுதியைக் கடந்த பின்னரே மதுரை நகர்க் கோட்டையின் வடக்கு வாயிலை அடைய முடியும். மேற்கூறிய பாடல் கருத்துக்கள் முற்றிலும் இக்கோயிலுடன் பொருந்தி வருகின்றன. இந்த ஆலயம் பாண்டியப் பேரரசுக்காலத்தில் மதுரையின் புறநகர்ப் பகுதியாக இருந்தது.

இடைக்கால இரண்டாம் பாண்டியப் பேரரசுக் காலக் கோட்டை இன்றைய ஆவணிமூல வீதிகளுக்கும் மாசிவீதிகளுக்கும் இடைப்பட்ட பகுதியில் இருந்தது. கோட்டைச் சுவரை அடுத்து வெளியே அகழியும், புறநகர்ப் பகுதிகளும் இருந்தன. (பார்க்க - படம் 1) .

விஸ்வநாத நாயக்கர் மாசிவீதிகளை உருவாக்கும் போது இருந்தையூர், நடுவூர், கரியான் திருவுறை, காளிகோயில், ஹரிஹரபுத்திரர் கோயில், தென்திரு ஆலவாய், சப்தகன்னியர் கோயில் முதலிய புறநகர்ப் பகுதிகளை இணைத்தார். (W.Francis- The Madras District Gazetteers- p.-266& B.S.Baliga- மு.நூ.-p.-48&63)

கி.பி.1559ம் ஆண்டு அரியநாதமுதலியின் துணையோடு விஸ்வநாத நாயக்கர் பாண்டியர்களின் கோட்டையை இடித்து அகழியைத் தூர்த்துவிட்டுப் புதிதாக 72 கொத்தளங்களோடு கூடிய உட்கோட்டைச் சுவரையும், புறக் கோட்டைச் சுவரையும் எழுப்பித் திசைமாணியின் நான்கு மூலைகளிலும் நான்கு வாயில்களை நிறுவினார். இவ்வமைப்பு ஆற்றின் போக்கினை அடுத்த குறுங்கோணத்தில் இருந்தது. சுற்றிலும் நான்கு திசைகளிலும் அகழி இருந்தது என்று மதுரை மாவட்ட கெசட் கூறுகிறது.




இன்றைய வெளிவீதிகளே அகழிகளாக இருந்தன. ஆய்வாளரும் இக்கருத்தை ஏற்றுக் கொண்டுள்ளனர். *(J.P.L.Shenoy- Madurai The Temple City- p.10)* அப்போது திருமாலுக்குரிய பெருநியமத்தின் வாயில் உட்கோட்டைச் சுவரில் பொருந்தி, கோயிற்பகுதி முழுமையும் உட்கோட்டைச் சுவருக்கும், வெளிக்கோட்டைச் சுவருக்கும் இடைப்பட்ட பகுதியில் அமைந்து இருக்க வேண்டும். ஏனெனில் இன்றைய

1)கண்ணன் கோயில்
2) ஹயக்ரீவர் கோயில்
3) இராமர் கோயில்
4)சோனையார் கோயில் (காவல் தெய்வம்- கருப்பசாமி)
5) வைகுண்ட ஏகாதசி இராப்பத்து பல்லாண்டு பாடும் மண்டபம்
6)வீரராகவப்பெருமாள் கோயில்
7) பிரசன்ன வெங்கடேசப் பெருமாள் கோயில்
8) சீனிவாசப் பெருமாள் கோயில்
9) ஆஞ்சநேயர் கோயில்
10) கூடலழகர் கோயில்
11)சக்கரத் தாழ்வார் கோயில்
12) மதனகோபாலசாமி கோயில்

முதலிய அத்தனை வழிபாட்டு இடங்களும் மாசிவீதிக்கும் வெளிவீதிக்கும் இடைப்பட்ட பகுதியில் தான் உள்ளன.

கி.பி.1837ம் ஆண்டு ஆளுநர் பிளாக்பர்ன் நாயக்கர்காலக் கோட்டையை இடித்து பெருமாள் மேஸ்திரி வீதிகளையும், மாரட் வீதிகளையும் உருவாக்கிய போது (B.S.Baliga- மு.நூ.- ப.395-396) திருமாலுக்குரிய பெருநியமம் 12 கூறுகளாகப் பிரிந்து விட்டது. (பார்க்க - படம் 2&3)




இன்றைய கூடலழகர் கோயிலுக்கும் மதனகோபாலசாமி கோயிலுக்கும் இடையே ஒரே ஒரு வீதி மட்டுமே கிழக்கு மேற்காகச் செல்கிறது. இவ்வீதியில் தான் சக்கரத்தாழ்வார் கோயில் வாசலும் உள்ளது. இவ்வீதி மாசிவீதியை பெருமாள் மேஸ்திரி, மாரட் வீதிகளுடன் இணைக்கிறது. மேற்கூறிய மூன்று வீதிகளும் உருவாகும் முன்னர் இருகோயில்களும் அடுத்தடுத்து ஒரு கோயிலின் இரு கூறுகளாக இருந்திருக்க வேண்டும். கண்ணன், ஹயக்ரீவர், ராமர் கோயில்கள் கூடலழகர் கோயிலின் எதிரிலேயே உள்ளன. அங்கிருந்து கூப்பிடு தூரத்திலேயே வீரராகவப்பெருமாள் கோயில் தென்னழகுக்காரத் தெருவில் உள்ளது. சீனிவாசப் பெருமாள் கோயிலும், ஆஞ்சநேயர் கோயிலும் தெற்கு மாரட் வீதியருகில் எதிரெதிரே உள்ளன. பிரசன்ன வெங்கடேசப் பெருமாள் கோயில் இன்று சௌராஷ்டிரா கிருஷ்ணன் கோயில் என்று வழங்கப்படுவதன் காரணம் அது அந்த இனத்தவரால் புரக்கப்படுவதாகும்.

கள ஆய்வின்போது இக்கோயில்கள் அனைத்தும் நடந்து சென்று தரிசிக்கும் படியே உள்ளன. குறுக்குமறுக்காகச் செல்லும் குடியிருப்புச் சிறுவீதிகளும், கடை வீதிகளும், மக்கட்பெருக்கமும், நகர விரிவாக்கமும் கோயிலைத் துண்டாடி உள்ளன.

***முடிவுரை:***

*மாங்குடி மருதனார் பேசும் இருபெரு நியமங்கள் மதுரையிலிருந்த இரண்டு பெரிய ஆலயங்களையே சுட்டுகின்றன.அவை முறையே சுயம்புலிங்கத்தைக் கருவறையில் கொண்டு இன்று மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயில் என்று அழைக்கப்படும் 'மழுவாள் நெடியோனி'ன் நியமம் ஒன்று; இன்னொன்று பண்டு உவணச்சேவல் உயர்த்தோன் நியமம் என்று அழைக்கப்பட்டு இன்று பன்னிரண்டு துண்டுகள் ஆக்கப்பட்டிருக்கும் கூடல் அழகர் கோயில் எனலாம்.*

***துணைநூற்பட்டியல்:***


*1) பத்துப்பாட்டு -வர்த்தமானன் பதிப்பகம்- முதல் பதிப்பு - 1999*

*2) பத்துப்பாட்டு- பகுதி 2- நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் - முதல் பதிப்பு - 2004*

*3) பத்துப்பாட்டு -பகுதி 2- கழக வெளியீடு- 2008*

*4) மயமதம்-1&2ம் பாகம்- மயமுனிவர்- K.S.S.சுப்பிரமணிய சாஸ்திரி (மொ.பெ.ஆ.)- தஞ்சை சரஸ்வதி மகால் வெளியீடு- 113*

*5) சு.கி.செயகரன்- ''பாசில்கள்- பூமகளின் காலச் சுவடுகள்- கலைக்கதிர்- செப்டம்பர் 1977*

*6) B.S.Baliga- Gazetteers Of India- Government of Madras- Madurai*

*7) Devakunjari,D- Madurai Through The Ages- 1st edition- 1970- National book stall,kottayam*

*8) W.Francis- Madras District Gazetteers- Madurai-1906- Government press, Madras.*

*9) J.P.L.Shenoy- Madurai The Temple City- 2nd edition- 1955- Associated printers ltd.,Madras,Bangalore.*

*10) P.V.Jeyachandran-The Madurai Temple Complex-Madurai Kamaraj University- Ph.D.thesis-1979*



*தொடர்பு: முனைவர் ச.கண்மணி கணேசன் (kanmanitamilskc@gmail.com)*

## 13. உண்டாலம்ம இவ்வுலகம்!

**— சொ. வினைதீர்த்தான்**

***பாடியவர்: கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி (182). புறநானூறு.***

**பாடலின் பின்னணி:** இப்பாடலில், கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி, மனித நேயத்தோடு "தமக்கென முயலா நோன்தாள் பிறர்க்கென முயலுநர்" உள்ளதால்தான் இவ்வுலகம் நிலைபெற்று இயங்கிக் கொண்டிருக்கிறது என்ற உயர்ந்த கருத்தைக் கூறுகிறான்.

*உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்*
*அமிழ்தம் இயைவ தாயினும், இனிதுஎனத்*
*தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;*
*துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவது அஞ்சிப்*
*புகழ்எனின் உயிருங் கொடுக்குவர்; பழியெனின்*
*உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்;*
*அன்ன மாட்சி அனைய ராகித்*
*தமக்கென முயலா நோன்தாள்*
*பிறர்க்கென முயலுநர் உண்மை யானே.*

கொண்டு கூட்டு: இவ்வுலகம் தமக்கென முயலா நோன்தாள் பிறர்க்கென முயலுநர் உண்மை யானே உண்டு எனக் கூட்டுக.

**உரை:** இந்திரனுக்குரிய அமிழ்தம் கிடைத்தாலும், அது இனிமையானது என்று தனித்து உண்ண மாட்டார்கள்; யாரையும் வெறுக்க மாட்டார்கள்; சோம்பலின்றிச் செயல்படுவார்கள்; பிறர் அஞ்சுவதற்குத் தாமும் அஞ்சுவார்கள்; புகழ்வரும் என்றால் தம் உயிரையே வேண்டுமானாலும் கொடுப்பர்; பழிவரும் என்றால் உலகம் முழுவதும் கிடைப்பதானாலும் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்; மனம் தளர மாட்டார்கள். இத்தகைய சிறப்புடையவர்களாகித் தமக்காக உழைக்காமல், பிறர்க்காக வலிய முயற்சியுடன் உழைப்பவர்கள் இருப்பதால்தான் இவ்வுலகம் இயங்கிக்கொண்டிருக்கிறது.

**சிறப்புக் குறிப்பு:**
திருக்குறளில் பல அதிகாரங்களில் விளக்கமாகக் கூறப்பட்டிருக்கும் கருத்துகள் இப்பாடலில் சுருக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றன. குறிப்பாக, விருந்தோம்பல், அன்புடைமை, வெகுளாமை, அறிவுடைமை, மடியின்மை, தீவினையச்சம், ஊக்கமுடைமை, புகழ், ஈகை, ஒப்புரவு, பண்புடைமை ஆகிய அதிகாரங்களின் மையக்கருத்துக்களை இப்பாடலில் காணலாம். கீழே கொடுக்கப்பட்டுள்ள நான்கு

குறட்பாக்களின் கருத்துகளுக்கும் இப்பாடலில் குறிப்பிடப்பட்டிருக்கும் கருத்துகளுக்கும் மிகுந்த ஒற்றுமை இருப்பதைக் காண்க.

*விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா*
*மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று. (குறள் - 82)*
பொருள்: விருந்தினராக வந்தவர் வீட்டின் புறத்தே இருக்கத் தான் மட்டும் உண்பது சாவா மருந்தாகிய அமிழ்தமே ஆனாலும் அது விரும்பத்தது அன்று.

*அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது*
*அஞ்சல் அறிவார் தொழில். (குறள் - 428)*
பொருள்: அஞ்சத்தக்கதைக் கண்டு அஞ்சாதிருப்பது அறியாமையாகும்; அஞ்சத்தக்கதைக் கண்டு அஞ்சுவதே அறிவுடையவரின் தொழிலாகும்.

*பண்புடையார் பட்டுண்டு உலகம்; அதுஇன்றேல்*
*மண்புக்கு மாய்வது மன். (குறள் - 996)*
பொருள்: பண்புடையவர்கள் பொருந்தி இருத்தலால் இவ்வுலகம் உளதாயிருக்கின்றது;. அவர்கள் இல்லையேல் அது மண்ணினுள்ளே புதைந்து மறைந்து போகும்.

தொடர்பு: சொ.வினைதீர்த்தான்
*karuannam@gmail.com*

## 14. கோவிலிலே குதிர் — ஆதித்திருவரங்கம்

### — *திரு. சிங்கநெஞ்சம் சம்பந்தம்*

*தென்பெண்ணையாற்றின் தென் கரையில் போய்க் கொண்டிருந்தோம், ஆதித்திருவரங்கம் நோக்கி. சாலையில் வாகனங்கள் அதிகமில்லை என்றாலும், வளைவுகள் அதிகம். வண்டி மெதுவாகவே பயணித்தது. பச்சைப் பட்டாடை விரித்தது போல் பறந்து கிடந்த வயல் வெளியில் மாலை சூரியனின் மஞ்சள் கிரணங்கள் மாயாஜாலம் செய்து கொண்டிருந்தன. கஜாப் புயலின் கோரக் காட்சிகளால் புண்ணாகிப் போயிருந்த கண்கள் புத்துணர்வு பெற்றன. ஊரைத் தாண்டி வலது பக்கம் திரும்ப, பிச்சைக்காரர்களின் பின்னணியில் கோவில். பார்த்தாலே தெரிந்தது, பழமையான கோவில் என்று. சனிக் கிழமை என்பதால் கொஞ்சம் கூட்டம் இருந்தது. விறகடுப்பில் குழிப் பணியாரம் செய்து விற்றுக் கொண்டிருந்தார் ஒரு கிராமத்துப் பெண்மணி.*

*மிகவும் பெரிய கோவில் என்று சொல்ல முடியாது, ஆனால் சிறிய கோவிலும் இல்லை. சுமார் இரண்டு ஏக்கர் பரப்பில் அமைந்திருக்கிறது. தூய்மையாகவே இருக்கிறது. நுழைவாயிலைக் கடந்து உள்ளே சென்றதும், ராஜகோபுரம் தெரிந்தது. வலதுபுறம், வட்டவடிவமான உருளைகள் இரண்டை ஒன்றின் மேல் ஒன்று நிற்க வைத்து அதன் மேலே ஒரு கூம்பினை வைத்தது போல் செங்கல்லால் ஆன ஒரு வித்தியாசமான கட்டிடம். பராமரிப்பு இன்றி புதர்களும் செடிகளும் வளர்ந்திருந்தன. பக்கத்தில் பெயர்ப் பலகை ஒன்றுமில்லை. அங்கிருந்து வந்த இளைஞரிடம், " இது என்ன" என்று கேட்டதற்கு, " ஏதோ, தியானமண்டபம்னு சொல்றாங்க, பாத்துப் போங்க, பாழடஞ்சி கெடக்கு" என்றார். பார்த்து பார்த்து மெதுவாக உள்ளே சென்றோம். புல்லும் பூண்டும் மண்டிக் கிடந்தன. கற்களும் கண்ணாடித் துண்டுகளும் சிதறிக் கிடந்தன. ம்ஹூம், இது தியான மண்டபமாக இருக்க வாய்ப்பே இல்லை என எண்ணிக் கொண்டேன்.*

*இல்லம் திரும்பி இணையத்தில் பார்த்தபோது அந்தக் கட்டிடம், தானியங்களைச் சேமித்துவைக்கும் குதிர் என்று தெரிந்தது. .மேலே நான்கு புறமும் தானியங்களைக் கொட்ட வாயில்கள், கீழே தானியங்களை அள்ள ஒரு வழி, ...இருக்கும்..... இருக்கும் இது குதிராகத்தான் இருக்கும்.*

*வளமான தென்பெண்ணைக் கரையில், இந்தத் திருக் கோவிலுக்கு 400 ஏக்கர் நிலம் இருந்தது, இப்போது அது 100 ஏக்கராகக் குறைந்து விட்டது., அறுவடை செய்து வரும் நெல், கம்பு போன்ற தானியங்களில் ஆறில் ஒரு பங்கினை கோவிலுக்குக் கொடுத்துவிடுவார்கள். அவற்றைச் செமித்து வைக்கவே இந்தக் குதிர்கள் பயன்பட்டன, இந்தக் குதிரில் சுமார் 2,500 மூட்டை, அதாவது 5,000 கலம் நெல் சேமிக்க முடியும் என்றெல்லாம் பலப் பல செய்திகள் இணையத்தில் கிடைத்தன. ஆனால், இன்று பாழ்பட்டுக் கிடக்கும் இதனைப் புனரமைக்கவோ, காப்பாற்றவோ நாதியில்லை என நினைக்கும் போது உள்ளம் கசிகிறது.*


ஆதித் திருவரங்கம் குதிர்


ஆதித் திருவரங்கம் குதிர்


ஆதித்திருவரங்கம் குதிரின் உட்புறம் –மேல்நோக்கிய பார்வை ( இணையத்திலிரு


ஆதித் திருவரங்கம் திருக்கோவில்

கோவில்களில் உள்ள குதிர்கள் பற்றி இணையத்தில் கிடைத்த பிற தகவல்களையும் உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன். ஆதித் திருவரங்கத்தில் உள்ளது போன்றே, திருவரங்கத்திலும் குதிர்கள் உள்ளன என்பதை அறிந்த போது வியப்பாக இருந்தது. இங்கேயும், பராமரிப்பின்றி, குதிர்கள் பாழ்பட்டுக் கிடக்கின்றன என்பது. வேதனைத் தரும் செய்தி.

மாறாக, குடந்தைக்கும் தஞ்சைக்கும் இடையே பாபநாசம் அருகேயுள்ள திருப்பாலைவனம் திருக்கோவிலில் உள்ள குதிர் முறையாகப் பாதுகாக்கப்பட்டு வருவதாகத் தெரிகிறது. இந்தக் குதிர் 17ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில், அச்சுத நாயக்கரின் அமைச்சர் கோவிந்த தீட்சிதரால் கட்டப்பட்டதென்றும், சுமார் 35 அடி உயரமும் 80 அடி விட்டமும் கொண்ட இந்தக் குதிரில் 3,000 கலம் நெல் சேமிக்க முடியும் என்றும் தகவல்கள் கூறுகின்றன.

செஞ்சிக் கோட்டையில் குதிர் / நெற்களஞ்சியம் ஒன்று இருப்பதைக் கல்லூரிக் காலத்தில் பார்த்திருக்கிறேன். ஆதித்திருவரங்கம் ஆலயத்தில் உள்ள குதிர், செஞ்சி நாயக்கர்களால் கட்டப்பட்டிருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது. ஒரு யூகம் தான்.







தொல்லியல் / இந்து அறநிலையத் துறைக்கு எப்போதும் இல்லாத அளவிற்கு, இந்த ஆண்டு மிக அதிக அளவில் நிதி ஒதுக்கப்பட்டுள்ளது. அழிந்து வரும் மரபுச் சின்னங்களைப் பாதுகாக்க இந்த நிதி பயன்படுத்தப் படவேண்டும்.

*தொடர்பு: திரு. சிங்கநெஞ்சம் சம்பந்தம் (singanenjam@gmail.com)*

## 15. புதுச்சேரியில் வசதியாகத்தான் வாழ்ந்தார் பாரதி

**— கோ. செங்குட்டுவன்**

தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் கலைஞர்கள் சங்கத்தின் 14ஆவது மாநில மாநாடு, இந்த ஆண்டு ஜுன் மாதத்தில் புதுச்சேரியில் நடந்தது. அப்போது மாநாட்டு மலர் ஒன்றும் வெளியிடப்பட்டுள்ளது. அண்மையில் அந்த மலரினைப் புரட்டிப் பார்த்தபோது, 'புதுச்சேரியில் பாரதியார் புதிய செய்திகள்' எனும், வில்லியனூர் பழனி அவர்களின் கட்டுரை என்னை ஈர்த்தது.



மனைவியுடன் பாரதி

'நம்மிடையே பாரதி வரலாறு தொடர்பாக ஒப்புக்கொள்ளப்பட்டனவாக உள்ள இரண்டு தகவல்கள் கட்டுக்கதைகளே என அடையாளம் காட்ட முற்படுவதே இக்கட்டுரையின் நோக்கம்' எனத் தொடக்கத்திலேயே தெளிவாக அறிவித்து விடுகிறார் கட்டுரையாளர்.

பாரதியின் புதுச்சேரி வருகை மற்றும் புதுச்சேரி வாழ்க்கை குறித்த கீழ்க்காணும் தகவல்களைத் தருகின்றது இக்கட்டுரை:



புதுவையில் மகாகவி பாரதியார் வாழ்ந்த இல்லம்

- *கைது செய்யப்படுவோம் என்று அஞ்சி பாரதியார் அடைக்கலம் தேடி புதுச்சேரி வரவில்லை. இந்தியா பத்திரிகையைத் தொடர்ந்து நடத்த வேண்டும் என்று தீட்டப்பட்ட ஒரு நீண்ட கால செயல் திட்டத்தின் ஒரு பகுதிதான் பாரதியின் புதுச்சேரி வருகை.*
- *வியப்பும் பெருமிதமும் கொண்டு நாம் போற்றி எழுத வேண்டிய உன்னதமான வாழ்க்கையைத் தான் பாரதி புதுச்சேரியில் வாழ்ந்திருக்கிறார்.*
- *புதுச்சேரியில் இருந்த செல்வச் சீமான்களைப் போலத்தான் அவரும் பெரியதொரு வீட்டில் வாழ்ந்திருக்கிறார்.*
- *புதுச்சேரியில் அவர் எழுதி குவித்தவை ஏராளம். தென் ஆப்ரிக்காவில் கூட 1917இல் அவரது நூல் ஒன்று வெளிவந்தது. டர்பனில் இருந்து ஆயிரம் ரூபாய் பணம் அவருக்கு வந்து சேர்ந்ததாகவும் தகவல் உண்டு.*
- *ஏராளமான உதவிகள் பல திசைகளில் இருந்தும் அவருக்கு வரத்தான் செய்தன.*
- *உலகம் அவரை ஏற்றுப் போற்றிக் கொண்டாடவே செய்தது. அதனால் தான் 'எத்தனைக் கோடி இன்பம் வைத்தாய் இறைவா' என்று அவர் பாடி மகிழ்ந்தார்.*

*என்றெல்லாம் விவரிக்கும் இக்கட்டுரையில், 'பாரதி' திரைப்படக் குழுவினரின் ஒப்பாரி குறித்தும் இடித்துரைக்கப்பட்டுள்ளது. இறுதியில், 'பாரதியார் பட்ட துயரங்களை மட்டுமே முன்னிறுத்திப் பட்டியல் போடுவதை இனி அனைவரும் விட்டுவிட வேண்டும்' எனும் கோரிக்கையும் முன் வைக்கப்பட்டுள்ளது.*

*உண்மையில், மேற்காணும் கட்டுரை, பாரதியின் புதுச்சேரி வாழ்க்கைக் குறித்த பிம்பங்களைத் தகர்ப்பதாகத்தான் இருக்கிறது!*

*தொடர்பு: கோ. செங்குட்டுவன் (ko.senguttuvan@gmail.com)*

*படம் உதவி: விக்கிபீடியா*

## 16. ஆரணி பட்டுச் சேலை

— *முனைவர். க. சுபாஷிணி*



*தமிழகத்தின் தொண்டை மண்டல நகர்களில் ஒன்று ஆரணி. ஆரணிக்கு ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொள்வதற்காக இவ்வாண்டு சென்றிருந்தேன். ஆரணிக்குச் செல்வது இது எனக்கு இரண்டாவது முறை. சில ஆண்டுகளுக்கு முன்னர் சமண சமய புராதனச் சின்னங்களையும், சமணர் கோயில்களையும் தேடிப் பதிவு செய்யும் பொருட்டு திருவண்ணாமலை, ஆரணி, பூண்டி, வளத்தி ஆகிய பகுதிகளுக்குச் சென்றிருந்தேன். அப்போது ஆரணியின் சமண சமயம் சார்ந்த புராதனச் சின்னங்கள் மட்டுமே தேடித் திரிந்து பதிவாக்கியதில் ஆரணிக்குப் புகழ் சேர்க்கும் பட்டுச் சேலைகள் பற்றி நான் தெரிந்து கொள்ளவில்லை. ஆனால் இந்த முறை பயணத்தில் நிகழ்ச்சிக்கு உடன் வந்திருந்த நண்பர்கள் ஆரணிக்கு வந்தால் ஆரணி பட்டு ஒன்று எடுத்துக் கொண்டுதான் செல்ல வேண்டும் எனக் கூறி விட்டதால், ஆரணி பட்டு பற்றித் தெரிந்து கொள்வோமே என நண்பர்கள் அழைத்துச் சென்ற கடைக்குச் சென்றேன்.*

*இவ்வாண்டு கைத்தறி நெசவாளர்களைப் பெருமை படுத்தும் வகையில் இரண்டு நிகழ்ச்சிகளைத் தமிழ் மரபு அறக்கட்டளை ஏற்பாடு செய்து நிகழ்த்தியிருந்தோம். வட அமெரிக்காவின் டல்லாஸ் நகரில் நடைபெற்ற வட அமெரிக்கத் தமிழ்ச்சங்கங்களின் கூட்டமைப்பின் ஆண்டு விழாவில் கைத்தறி சேலைகள், கைத்தறி நெசவாளர்கள், தமிழர் பண்பாட்டுக் கூறுகளில் ஒன்றாக இடம் வகிக்கும் கைத்தறி கலையும் தொழிலும் என்ற வகையில் ஜூலை மாதம் நடைபெற்ற அந்த நிகழ்வில் கைத்தறி பற்றிய முதல்*

விழிப்புணர்ச்சி நிகழ்ச்சியை ஏற்பாடு செய்து டிரடிஷனல் இந்தியா அமைப்புடன் இணைந்தவகையில் செயல்படுத்தினோம். அதன் தொடர்ச்சியாக அக்டோபர் மாதம் சென்னை எத்திராஜ் மகளிர் கல்லூரியில் மிகச் சிறப்பாக கைத்தறி விழிப்புணர்ச்சி நாள் விழாவும் அக்கல்லூரியின் பெண்ணியத்துறையுடன் இணைந்த வகையில் தமிழ் மரபு அறக்கட்டளை நிகழ்த்தி மாணவர்கள் மத்தியில் கைத்தறி சேலை பற்றிய கருத்துக்களைக் கொண்டு சென்றோம். அது மட்டுமன்றி இவ்வாண்டு தொடக்கத்தில் சேலம், கொல்லிமலை, சிங்களாந்தபுரம் ஆகிய பகுதிகளில் கிராமங்களில் மக்கள் இல்லங்களில் தறி வைத்து கைத்தறி சேலைகள் உருவாக்கும் தொழிலில் ஈடுபட்டிருப்பதைப் பேட்டி கண்டு பதிவாக்கியிருந்தோம்.

ஆரணி பட்டுச் சேலைகள் சென்னையிலும் கிடைக்கின்றன என்றாலும் இச்சேலைகள் நெய்யப்படும் இடத்திலேயே அவற்றைப் பார்த்து வாங்குவது என்பது ஒரு தனி அனுபவமே. என்னை நண்பர்கள் அழைத்துச் சென்ற இடம் ஒரு சிறிய கடை. ஒரு நெசவாளர் மாத்திரம் அங்குக் கடையில் சில சேலைகளைத் தரையில் விரித்து வைத்தபடி அமர்ந்திருந்தார். சற்று நேரத்தில் அவருக்கு ஒரு உதவியாளர் இளைஞனும் வந்து சேர்ந்தார்.

நான் பார்க்கவேண்டும் என்பதற்காகப் பல சேலைகளை அந்த நெசவாளர் விரித்துக் காட்டி விளக்கிக் கொண்டிருந்தார். ஆரணி பட்டுச் சேலைகளில் சேலையின் உடல் முழுவதும் அதிகமான ஜரிகை வேலைகள் உள்ளன. பல சேலைகளில் பல வர்ணங்கள் கலந்து கலை வேலைப்பாட்டுடன் பூ வேலைகள் செய்யப்பட்ட வகையில் அமைக்கப்பட்டிருந்தன. பெரும்பாலான சேலைகளில் தங்க நிற ஜரிகையே சேலையின் முழுமைக்கும் நிறைத்திருக்கும் வகையில் சேலை உருவாக்கம் அமைந்திருந்தது. பொதுவாக அதிக ஜரிகை சேர்த்த சேலைகளை நான் அணிவதில்லை என்பதால் சற்று திகைத்துப் போய் அமர்ந்திருந்தேன்.

எனக்கு எவ்வகையான நிறம் பிடிக்கும், எவ்வகையான பூ வேலைகள் உள்ள வகையான சேலை அமைப்பு பிடிக்கும் என அந்த நெசவாளர் கேட்க எனது விருப்பத்தைக் கூறினேன். அப்படியான சில சேலைகளை எடுத்து வரச் சொல்லி தனது உதவியாளரை அனுப்பி வைத்தார். நான் ஒரு சேலையாவது வாங்கிக் கொள்ள வேண்டும் என்ற சிந்தனையில் சற்றே சரிகை வேலைப்பாடுகள் குறைந்த ஓரிரு சேலைகளை மட்டும் எடுத்து வைத்துப் பார்த்தேன். அதில் ஒன்று என் கவனத்தை ஈர்க்கவே அதனையே தரும்படி கேட்டுக் கொண்டேன்.

உடனே அவர் சேலையை மிகுந்த கவனத்துடன் திறந்து விரித்து வைத்தார். சேலையின் முந்தானை பகுதியில் நூல்களைப் பிரித்து அவற்றிற்குக் குஞ்சம் போடத் தொடங்கினார். அவர் உதவியாளரும் இணைந்து கொண்டார். இக்காட்சி பார்ப்பதற்கு மிக அழகாக இருந்தது. 10 நிமிடங்களுக்குள் முழுமையாகச் சேலைக்கு குஞ்சம் அமைத்து முடித்து விட்டனர்.

இந்தக் கைத்தறி சேலையைச் செய்ய ஒரு நெசவாளருக்குக் குறைந்தது 10 லிருந்து 15 நாட்கள் வரை ஆகும் என்றும், இச்சேலைகள் தனது வீட்டிலேயே உள்ள தறியில் நெய்யப்பட்டது என்றும் விளக்கினார். பிறகு நான் கைத்தறி நூல்கள் பற்றி விசாரிக்கவே,

அலமாரியில் வைக்கப்பட்டிருந்த மேலும் சில கைத்தறி சேலைகளை எடுத்து எனக்குக் காட்டினார். தங்க ஜரிகை இழைக்கப்பட்ட சேலைகளும் அதில் அடக்கம். ஒரு வெள்ளி சரிகை இழைக்கப்பட்ட சேலையையும் எனக்குக் காட்டினார். இத்தகைய சேலைகளைக் கைத்தறியில் செய்து முடிக்க நாட்கள் தேவைப்படும் என்றாலும் அப்படி யோசித்துத் திட்டமிட்டு வடிவமைக்கும் சேலைகள் அவற்றை வாங்கி அணியும் பெண்களின் வாழ்க்கையில் என்றென்றும் மனதில் மகிழ்ச்சியை நிறைத்திருக்கும் என்பதனையும் கூறினார்.

அவர் கூறியதும் உண்மைதான். சில பட்டுச் சேலைகள் குடும்பத்தில் பல ஆண்டுகள் நம்முடனேயே வாழ்கின்றன. என் தாயார் திருமணத்தில் கட்டிய சேலைகூட இன்று எங்கள் தாயாரின் நினைவாக எங்களுடன் இருக்கின்றது என்பதும் அப்போது எனக்கு நினைவில் வந்து போனது.

சேலைக்குக் காசு கொடுத்தோம், வாங்கிக் கொண்டோம் என்றில்லாது சேலையை வாங்குபவரிடம் கொடுப்பதே ஒரு சடங்காகச் செய்தார் அந்த நெசவாளர். நான் வாங்கிய சேலையை அழகாக அட்டைப்பெட்டிக்குள் வைத்து அதனை மகாலட்சுமி உருவப் படத்திற்கு முன் காட்டி மந்திரம் சொல்லி வணங்கி அதில் சந்தனம் பூசி குங்குமப் பொட்டு வைத்தார். சாமியை வணங்கிக் கும்பிட்டு அந்தச் சேலையை எனக்கு கைகளில் வழங்கினார்.

பொதுவாக ஒரு புடவைக்கடையில் பத்தாயிரம் சேலைகளுக்கிடையே ஒரு சேலையை வாங்குவது என்பது ஒரு இயந்திரத்தன்மையான நிகழ்வு. ஒரு கைத்தறி நெசவாளரிடம் நேரடியாகச் சென்று அங்கே, அச்சேலையைப் பார்த்து பார்த்து நூலினைக் கோர்த்து இழைத்து வடிவமைத்துக் கொடுத்த அந்த நெசவாளரின் கைகளிலிருந்து வாங்குவது என்பது பெருஞ்சிறப்பு. அந்தச் சிறப்பான அனுபவம் பெற வேண்டுமென்றால் வாய்ப்பு கிடைக்கும் போது நேரடியாகத் தமிழகத்தின் நெசவுத் தொழில் வாழும் கிராமங்களுக்கு நேரடியாகச் சென்று நமக்குத் தேவையான சேலைகளை நெசவாளர்களிடமிருந்து வாங்குவோம்.

**கைத்தறி நெசவாளர்களை ஆதரிப்போம்.**
**கைத்தறி நெசவு தமிழர் மரபு!**

தொடர்பு: முனைவர் க.சுபாஷிணி (ksubashini@gmail.com)

## 17. கைத்தறிக்குக் கைக்கொடுப்போம்

**— *முனைவர் அரங்கமல்லிகா***

*நெசவுத் தொழில் 5,000 வருடங்கள் பழமை வாய்ந்தது. சிந்து சமவெளி நாகரிகச் சின்னங்களிலும், ஆதிச்சநல்லூரில் கிடைத்த தாழிகளில் மண்வெட்டி, கொழு, நெல், உமி ஆகியவற்றுடன் பழைய இற்றுப்போன பஞ்சாடையும் கிடைத்துள்ளன. தமிழகத்தில் இராஜராஜசோழன் காலத்தில் நெசவுத்தொழில் செழிப்புற்று வளர்ந்துள்ளது. உறையூரில் முன்காலத்தில் நெசவுத்தொழிலுக்குச் சாயமிடும் தொட்டிக் காணப்பட்டதாகவும், உறையூரில் நெசவு செய்யப்பட்ட சேலைகள் ஒரு தேங்காய் மூடியில் அடைக்கக்கூடிய அளவுக்கு மெல்லியதாக இருந்தது எனவும் கூறுகின்றனர். சங்க இலக்கியத்தில், குறிப்பாகத் தொல்காப்பியம் "உடைபெயர்த் துடுத்தல்" என்று கூறுகிறது. பண்டைக்காலத்தில் பெண்கள் நூல் நூற்றமையை நக்கீரர், கபிலர், பவணந்தியார் ஆகியோர் குறிப்பிட்டுள்ளனர்.*

*இந்தியாவில் ஆடை கலாச்சாரம் பன்மைத்துவமானது. இந்தியச் சுதந்திரப்போராட்டத்தில் அந்நியர்கள் இயந்திர நூற்பாலைகளை வைத்துத் துணி நெய்தபோது அண்ணல் காந்தியடிகள் கதராடையை நூற்று அதனை அரசியலாக்கினார். நெசவாளிகள், விவசாயிகள் தமிழகத்தின் ஜீவநாடிகள். இன்றைக்கு விசைத்தறி கொண்டு குறைந்த நேரத்தில் குறைந்த முதலீட்டில் அதிகம் உற்பத்தி செய்வதால், நெசவாளிகள் அன்றாட உணவுக்கே வழியில்லாமல் இடம் பெயர்கின்றனர். நெசவாளிகள் குறைந்த விலைக்குத் தயாரிக்கமுடியாத சூழலும் நிலவுவதால் தொழிலில் பின்தங்கியுள்ளதோடு 60% நெசவாளிகள் வாழ்வாதாரம் இழந்துள்ளனர் எனவும் ஓர் அறிக்கைக் கூறுகிறது.*

*மைய அரசும் இந்தியா ஹேண்ட்லூம் முத்திரையோடு வேறுவேறு அடையாளத்துடன் துணிகளை அறிமுகப்படுத்தியுள்ளது. எனினும் இடைத்தரகர்களும் அவர்களின் உழைப்பைச் சுரண்ட கடையனிலும் கடையராய் மாறியுள்ளனர். இச்சூழலில் எத்திராஜ் மகளிர் கல்லூரி, மகளிர் கல்வி மையம் பெண்ணியம் தொடர்பாகப் பெண்கள் தொழில் முனைவை ஊக்கப்படுத்த எண்ணி "கைத்தறிக்குக் கைக்கொடுப்போம்" என்ற தலைப்பில் ஜெர்மனி வாழ் முனைவர் க. சுபாஷிணி அவர்களின் தலைமையில் இயங்கும் தமிழ் மரபு அறக்கட்டளையுடன் இணைந்து ஒரு நிகழ்ச்சியை 25.10.18 அன்று எத்திராஜ் மகளிர் கல்லூரியில் நடத்தியது. நிகழ்ச்சிக்குத் தலைமை வகித்த கல்லூரி நிர்வாகக் குழுத்தலைவர் திரு. வி. எம். முரளிதரன் அவர்கள் நெசவுத்தொழிலாளர் அடிப்படை வாழ்வாதாரம் பெற அவர்களுக்கு உதவும் வகையில் பெண்கள் கல்லூரியில், கைத்தறி ஆடை உடுத்துவதை அங்கீகரித்து கைத்தறிக்குக் கை கொடுக்க ஆதரவு அளித்தார்.*

*ஜெர்மனியிலிருந்து நிகழ்வுக்கு வருகை தந்திருந்த முனைவர் சுபாஷிணி, அமெரிக்க தமிழ்ச் சங்கத்தின் ஃபெட்னா(FeTNA) விழாவில் நடந்த தமிழ் மாநாட்டில் நெசவுத்தொழில் வளம் குறித்துப் பேசியதைச்சுட்டிக்காட்டினார். அந்நிகழ்வில் பெரும் ஆதரவோடு நாம் விரும்பியவாறு ஆடையின் வடிவம், டிசைன் மாற்றிக்கொள்ளலாம்*



என்பதைச் சொல்லி தான் திருவள்ளுவர் உருவத்தைச் சேலை முந்தியில் அச்சிட்ட ஒரு சேலையை உடுத்திக்கொண்டதைப் பெருமையோடு சொல்லி மகிழ்ந்தார்.

மாணவிகளிடம் கதர் ஆடை உடுத்த அவர் அனுமதி கேட்க, குழுத்தலைவர் ஒப்புதலையும் வழங்கினார்.

இந்நிகழ்வில் கைத்தறி ஆடை காட்சியில் எத்திராஜ் மகளிர் கல்லூரி மாணவிகள் மேடையை அழகுபடுத்தி தமிழகத்தின் பாரம்பரிய சேலை உடுத்தும் கலாச்சாரத்தை நினைவுபடுத்தி மாற்றம் நமக்குள் வரவேண்டும் எனச்சொல்லி அசத்தினர். சேலத்திலிருந்து வந்திருந்த கைத்தறி ஆடை நெய்யும் தொழிலாளி திருமதி அல்லி மன நெகிழ்வோடு நன்றி தெரிவித்தார். வையகத்தில் சீரிகையாற் பண்சேர்த்து நன்னூல் பாவாக்கிக் காரிகையார் தாரால் கலை செய்யும் என்பதை உறுதிப்படுத்த எத்திராஜ் மகளிர் கல்லூரி மாணவிகள் தாங்கள் எழுப்பிய பெரும் ஆரவாரத்தில் கைத்தறி ஆடை பறக்கத்தொடங்கியது.

கிராமப்புறத் தற்சார்பு வாழ்வைப் பெண்கள் அடைய, பொருளாதார அடிப்படையில் அவர்கள் மேன்மை பெற பெண்களுக்குத் தொழில் முனைவு அவசியம் என்பதை உறுதிப்படுத்திப் பேசினார் பேராசிரியர் அரங்கமல்லிகா.

இந்நிகழ்வில் மாணவிகள் கைத்தறி ஆடை வாங்க குறைந்தது 700 ரூபாய் என்றாலும் 6,000 மாணவிகள் படிக்கும் கல்லூரியில் ரூ. 42,00,000/= கிடைக்கும். இது ஒரு சிறு கணக்குதான். மாணவிகளும் தமிழ்க்கலாச்சார உடையோடு உலாவருவதில் பெருமகிழ்வு அடைவர். இதை, கல்லூரிகள் கவனத்தில் எடுத்துக்கொண்டால் நலிந்த நெசவாளிகள் வாழ்வாதாரம் பெறுவர்.

இந்நிகழ்வை ஒருங்கிணைத்தவர் பேராசிரியர் அரங்கமல்லிகா, இயக்குநர், மகளிர் கல்வி மையம், எத்திராஜ் மகளிர் கல்லூரி.

தொடர்பு: பேராசிரியர் அரங்கமல்லிகா (arangamallika@gmail.com)

## 18. குடிசைத் தொழில்: முந்திரிப் பருப்பு தயாரிப்பு

*— முனைவர் கி. காளைராசன்*

*புதுக்கோட்டை தஞ்சாவூர் சாலையில் பெருங்களூர் - ஆதனக்கோட்டை அருகே சாலை யோரம் முந்திரிக்கொட்டை யிலிருந்து பருப்பு எடுத்து விற்கின்றனர். சுமார் 45 செ.மீ. விட்டமுடைய அலுமினியச் சட்டியின் அடிப்பாகத்தில் சிறுசிறு துவாரங்கள் (ஓட்டைகள்) இட்டுள்ளனர். இந்தச் சட்டியில் முந்திரிக் கொட்டைகளைப் போட்டு அடுப்பில் வைத்து சூடாக வறுக்கின்றனர். தீயும் இந்தச் சட்டியில் உள்ள துவாரங்கள் வழியாக சட்டிக்கு உள்ளேயே வருகிறது. இதனால் சட்டியின் உள்ளேயும் நெருப்பு எரிகிறது. இவ்வாறு நெருப்பில் முந்திரிக் கொட்டை எரியும் போது அதன் மேலோடு எரிந்து அதிலிருந்து எண்ணெய் போன்ற திரவம் கசிந்து வருகிறது. இந்த எண்ணையுடன் சேர்ந்து நெருப்பு நன்றாகச் சுடர்விட்டு எரிகிறது.*












*சட்டியில் உள்ள துவாரங்கள் வழியாக இந்த எண்ணெய் அடுப்பிற்குள் விழுகிறது. இதன் காரணமாக அடுப்பும் எரிகிறது. முந்திரிக் கொட்டையின் மேல் உள்ள ஓடுதான்*

அடுப்பிற்கான எரிபொருள் ஆகப் பயன்படுகிறது. விறகு அல்லது வேறு எந்தவொரு எரிபொருளும் பயன்படுத்தப்படுவதில்லை. கையில் வைத்துள்ள நீண்ட இருப்புக் கம்பியின் முனையைச் சற்று வளைத்து வைத்துள்ளனர். இந்தக் கம்பிக் கொண்டு சட்டியில் உள்ள முந்திரிப் பருப்பு முழுமையாக எரிந்துவிடாமல் கிளறி விட்டுக் கொண்டே இருக்கின்றனர். உடைத்து எடுக்கக்கூடிய பக்குவத்திற்கு வந்தவுடன் சட்டியில் இருக்கும் வறுத்த கொட்டைகளைத் தனியாகக் கொட்டி வைக்கின்றனர். புதிய கொட்டைகளை எடுத்து வறுக்கத் துவங்கிவிடுகின்றனர்.

வறுத்தெடுக்கப்பட்ட முந்திரிக் கொட்டைகளை எடுத்து சிறிய கல்லில் வைத்து உடைத்து முந்திரிப் பருப்பைப் பிரித்து எடுக்கின்றனர். முந்திரிக் கொட்டையின்கூடு எரிபொருளாகப் பயன்படுகிறது. பிரித்து எடுக்கப்பெற்ற முந்திரிப் பருப்பைக் காயவைக்கின்றனர். அந்த முந்திரிப் பருப்பின் மேல் மெல்லியதான ஒரு தோல்போன்ற பகுதி மூடியுள்ளது. அதை ஒரு கல்லில் வைத்துத் தேய்த்து உரித்து எடுக்கின்றனர். இவ்வாறு தோல் உரிக்கப்பட்டவுடன் வெள்ளை நிறத்தில் முந்திரிப்பருப்பு விற்பனைக்கு வருகிறது. விலை - கால் கிலோ ரூ.220/-

குடிசைத்தொழில். 15-20 குடும்பத்தினர் பரம்பரை பரம்பரையாகச் செய்து வருகின்றனர். குறைந்தவிலையில் சுத்தமாக சுவையாகக் கிடைக்கிறது. புதுக்கோட்டை - தஞ்சாவூர் சாலையில் பயணம் செய்வோர் அனைவரும் ஆதனக்கோட்டை (Adhanakkottai, Tamil Nadu 614902) அருகே சாலையோரம் தயாரிக்கப்படும் இந்த முந்திரிப்பருப்பை வாங்கிப் பயனடையலாம்.

தொடர்பு: முனைவர் கி. காளைராசன் (kalairajan26@gmail.com)

## 19. கண்ணீரை வெல்லும் வானம்பாடிகள்...

***— வித்யாசாகர்***

*கூடுகளைத் தேடாமல் சிறகுகளுக்குள் அடங்கிக்கொண்டவர்கள் நாங்கள். கதகதப்பிற்கு மாறாக நெருக்கத்தின் வெப்பத்தால் தகித்தாலும் ஒற்றுமையெனும் வலிமைக்காய் கைகால் முடங்கிக்கொண்டு லட்சிய முழக்கத்தை நிறுத்திக்கொள்ளாத நெறியுள்ள வானம்பாடிகள் நாங்கள். எங்களுக்கு கனவு பறப்பதாக இல்லை வாழ்வதாக இருக்கிறது, ஆம் அது எல்லோருக்குமான வாழ்வு.*

*சிக்கித் தவித்து துடித்து பசியில் வாடி, ஏழ்மையில் நலிந்து, எதற்கும் விலைபோனவர்களாய் வாழும் இலவச விரும்பிகளான எம் சமுதாயத்திற்கு ஓர் விடிவு வேண்டும். நாங்கள் சிறகடித்து பறக்கும் வானத்தைப் பற்றி பேசுவதேயில்லை, பசியை எல்லோருக்கும் போக்கிடாத கனவுதனை தீதென்று எண்ணி அஞ்சுகிறோம்.*

*ஆதி மனிதர்களான நம்மிடம் எல்லையற்ற பலமும் அறிவும் இருக்கிறது, மரபூரிய மாண்பும் மறமும் விஞ்சியிருக்கிறது, ஆயினும் ஏன் எங்குக் காணினும் இரண்டாம் பட்சமாய் எட்டித் தள்ளப்படுகிறோம்? எட்டித் தள்ளியபின்னும் எதற்கு அஞ்சி நிற்கிறோம்? யார் எம் சிறகுகளை உடைப்பவர்? கனவுக்குத் துயிலும் தூக்கத்தை எம் விடுதலையோடுச் சேர்த்து, கொண்டுபோனவர் எவர்? எமக்குத் தெரியும்' யாருமில.*

*ஆம்; யாருமில எமை வஞ்சித்தவர். எங்களை எம்மினத்தை யாராலும் தோற்கடிக்கவோ ஏமாற்றவோ முடியாது, ஆனால் தோற்க எங்கோ பிசகி எப்படியோ நாம் தயாராகிவிட்டோம். ஏமாற ஏனோ சம்மதித்து சம்மதித்து பெரியதொரு சதியின் பள்ளத்தில் விழத் தானே பழகிக்கொண்டோம். அதிலிருந்து நாமெல்லாம் வெளியே வருகையில், தம் எண்ணத்துள் தாம் வென்றுநிற்கையில் எமது அடுத்த தலைமுறைக் குஞ்சுகள் நாளை விண்ணில் தானே பறக்கத் துவங்கிவிடும்.*

*எனவே நாங்கள் எங்கள் தூக்கத்தைத் தொலைத்து எமது தலைமுறையின் கனவுகளுக்கு விடைதனை தேடி கடல் தாண்டி அலைகிறோம். எமது விடுதலை இதோ எங்களின் சட்டைப்பையில் உண்டென்று எங்களின் பிள்ளைகள் நம்பும் புள்ளியில் எங்களின் ஏக்கங்களுக்கும் நாளை சிறகு முளைத்துவிடும்.*

*அதற்குச் சான்றாகத்தான் நாங்கள் கூடுகளாய்ப் பிரிந்துகொள்வதில்லை. மாறாக ஒற்றைக் கூட்டிற்குள் அடங்கிப் போகிறோம். ஏதோவொரு நாட்டிற்குள்ளும் தமிழர்களாக மட்டுமே அடையாளப் படுகிறோம். அந்தத் தமிழரெனும் கூட்டிற்குக் குச்சிகளை தேடியலைந்து தங்கக் கம்பிகளை முடைந்துவிட்ட எங்களின் சேர சோழ பாண்டிய மன்னர்களான பாட்டன்களுக்கும் முப்பாட்டன்களுக்கும் நன்றி.*

ஏதோ முடிந்தது வாழ்வென ஓய்ந்துவிடாமல் எப்பொழுதும் உழைப்பு உழைப்பு வெற்றி வெற்றி என்று  நாடு நாடாகத் தேசம் தேசமாக ஓடி ஓடி எங்கும் எப்பொழுதும் எதற்கும் தளர்ந்து நின்றுவிடாமல் உழைத்து உழைத்து முன்சென்ற எங்களின் கனவுத் தொழிற்சாலைகளுக்கும், அனைத்து வியர்வை வைரங்களுக்கும், எங்களன்பு உழைப்பாளிகளான மொத்த வெளிநாட்டு வாழ் தமிழர்களுக்கும்  இந்த மழைநேரத்து உதவிக்கான மாண்பு சொறிந்த நன்றி. வெறும் குச்சிகளை தங்கக் கம்பிகளாக்கிய பல தொழிலாளர்களுக்கும்  முதலாளிகளுக்கும் தொழில் முனைவோர்களுக்கும் நன்றி.

வெறும் நன்றியோடு நிற்பதெங்கே, வாருங்கள் எல்லோரும் சேர்ந்து ஒற்றுமைத் தேரிழுப்போம். மழை வெள்ளம் இடி மின்னல் எது வரினும் நாம் ஒன்றே என கூடி நிற்போம். நம்மில் இருக்கும் ஏற்றத்தாழ்வுகளெல்லாம் இடிந்துபோகட்டும் இனி. அன்புத் தீயிட்டு எரிப்போம் தீயெண்ணத்தை. அதில் சாதித் திமிரது இருந்தாலும் பொசுங்கிப்போகட்டும். வானத்து விண்மீன்களை இழுத்து எம் வரிகளுள் கட்டிவைப்போம். காதலர்கள் கைகோர்த்துச்செல்கையில் பின்னே வண்ணங்களாய் மின்னட்டுமந்த விண்மீன்களெல்லாம். வாழ்க்கையை மிக அழகியலோடு வாழ்வோம், வருங்காலத்திற்கு நல்லதாக நம் வரலாறு மிஞ்சட்டும் தோழர்களே..

வாய்மையையும் உழைப்பையும் அறத்தையும் ஒவ்வொரு சொல்லுக்கும் போற்றுவோம்; வாழ்ந்தவர் தமிழரென்று இந்த உலகம் தானே நமை அடையாளங் கண்டுகொள்ளட்டும். அன்று பறக்கும் தமிழரின் வெற்றிக் கோடிக்கு மகிழ்ச்சியின் வண்ணங்களும், இனி நாம் ஒற்றுமையில் தோற்காத ஒற்றை நிறமுமே பூசப்பட்டிருக்கட்டும்.

**வாழ்க எந் தமிழர்தம் நாடு; வளர்க எம்மக்கள்..**

தொடர்பு: வித்யாசாகர் (vidhyasagar1976@gmail.com)

# 20. கொழுக்கட்டை கொட்டும் சடங்கு

**— வலன்ரீனா இளங்கோவன்**

*யாழ்ப்பாணத்து சைவத்தமிழ் வழக்காற்றில் முக்கிய பங்கு வகிப்பவை சடங்குகள். இத்தகைய வாழ்வியல் சடங்குகளில் சிறப்பு பெறுவது "கொழுக்கட்டை கொட்டும் சடங்கு." ஒரு குழந்தை பிறந்தது முதல் பல சடங்குகள் நிகழ்த்தப்படுகின்றன. அந்த வகையில் குழந்தைக்கு பல் முளைத்ததும், பல்கலைக் கண்ட அன்றையதினமோ அல்லது மறுதினமோ இச்சடங்கு நிகழ்த்தப்படும்.*



*பல்லுக்கொழுக்கட்டையை அவித்து தேங்காய் சொட்டில் பற்கள் போலவெட்டி கொழுக்கட்டையில் பதிப்பர். தாய்மாமன் அல்லது தந்தை குழந்தையைச் சுளகில் இருத்தி குழந்தையின் தலையில் வெள்ளைத்துணியைப் போட்டு, கொழுக்கட்டை, கொப்பி, பென்சில், பூக்கள், ரொபிகள் என்பவற்றைச் சுளகு அல்லது தட்டில் வைத்து பிள்ளையின் தலைமீது கொட்டுவர். குழந்தை எப்பொருளை விரும்பி எடுக்கிறதோ அதையே பிள்ளை வளர்ந்ததும் விரும்பும் என்ற ஐதீகம் இன்றுவரை காணப்படுகிறது. இதனை யாழ்ப்பாணத்தில் கொழுக்கட்டை கொட்டும் சடங்கு என்பர். இச் சடங்கு இன்றும் நிகழ்த்தப்பட்டுவருவது குறிப்பிடத்தக்கது.*

*தொடர்பு:*
*திருமதி. வலன்ரீனா இளங்கோவன் (valanteenaelangovan@gmail.com)*

# 21. இந்துமதம் என்று ஒரு யானை

## — தேமொழி

***யானைக்கும் இந்து மதத்திற்கும் இருவகையில் தொடர்புள்ளது...***

*சிற்பங்களில் சிலவற்றிலும், ஓவியங்கள் சிலவற்றிலும் ஒன்பது பெண்கள் இணைந்து ஒரு யானை உருவம் காணப்பெறும். இராஜஸ்தான் ஜெய்ப்பூர் அரண்மனையில் உள்ளதாகக் காட்டப்பெறும் ஒரு மரச்சிற்பமும், திருக்குரங்குடி கோயிலின் ஒன்பது பெண்களை ஒருங்கிணைத்து உருவாக்கப்பட்டிருக்கும் யானைச் சிற்பமும் எடுத்துக்காட்டுகள் (மேலும் பல சிற்பங்களும், படங்களும் இணையத் தேடலில் கிடைக்கப் பெறுகின்றன).*



*http://www.thenewsminute.com/sites/default/files/Composite%20elephant%20made%20of%20beautiful%20Apsaras.JPG*



*https://2.bp.blogspot.com/-GBxzb9SuzZY/Vs96p7u3uUI/AAAAAAAAHO0/0A56_XhfZxI/s1600/042-Mirissa-Temple-ElephantWomen.jpg*




ஆங்கிலேயர் காலத்தில் இஸ்லாம் கிறித்துவ சமயங்கள் அல்லாத பிற இந்திய மண்ணின் சமயங்கள் இந்து சமயம் என வகைப்படுத்தப் பட்ட பொழுது இவ்வாறு அதிகாரப்பூர்வமாக வேத அல்லது வைதீக மதத்தின் பற்பல உட்பிரிவுகள் இந்துமதம் எனப் பெயர் பெற்றது என்பது வரலாறு.

ஆங்கிலேயர் காலத்தில் இவ்வாறு பெயர் பெறும் முன்னரும் இந்திய மண்ணின் பற்பல வட்டார வழிபாடுகள், தெய்வங்கள் யாவும் ஒருங்கிணைக்கப்பட்டதும் வரலாறு. கி.பி 8 ஆம் நூற்றாண்டில் இதன் துவக்கம் எனவும், ஆதி சங்கரர் சிவன், திருமால், சக்தி, சூரியன், கணபதி, முருகன் ஆகிய ஆறு கடவுளர்களை வணக்கும் ஆறு உட்பிரிவினரை ஸ்மார்த்தம் என்பதன் கீழ் தொகுத்ததாகவும் வரலாறு கூறும்.

இச்சமயங்கள் யாவும் பிறப்பு இறப்பு, கடவுளின் தோற்றம், சமயத் தத்துவங்கள் என்று தனிப்பட்ட கருத்துகளைக் கொண்டவை. இருப்பினும் வேதம் கூறும் கடவுள்களுடன் ஒன்றாக இணைக்கப்பட்ட புராணக் கதைகளுடன் யாவும் ஒருங்கே வளர்ந்தன. இவற்றில் கொள்கை மாறுபாடு கொண்டவர்கள் சிலரும் சமணம் பௌத்தம் சீக்கியம் என ஒவ்வொரு காலகட்டத்தில் பிரிந்து போனதும் வரலாறு. இந்துமதக் குடையின் கீழ் இருக்கும் சைவம், வைணவம் என்றாலும் அவர்களுக்குள்ளும் கொள்கை அடிப்படையில் பிரிந்து போனவர்கள் உண்டு. இரண்டாம் குலோத்துங்கன் தில்லை கோவிந்தராஜரைக் கடலில் போட்டதும் வரலாறு. இன்றுவரை லிங்காயத்துகள் தாங்கள் தனி மதம் என்று கூறிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் வழிபடுவது வேத மதக் கடவுள் என்றால் அவர்கள் இந்து மதத்தினர் என்றுதான் கூறவேண்டும் என்றும் சர்ச்சையில் இருப்பதுதான் இந்து சமய உலகம்.

இதில் புறச்சமயங்களுக்கு போட்டியாக மக்களை ஒருங்கிணைக்கும் திட்டங்களும் அவ்வப்பொழுது அரங்கேறின. தங்களை எண்ணிக்கையில் பலப்படுத்திக் கொள்ள வட்டார நாட்டார் வழிபாடு, மூதாதையர் வழிபாடு முறைகளும் உள்வாங்கப்பட்டு எல்லாவற்றையும் ஒரே கடவுள், அவர்களின் அவதாரங்கள், கடவுளரின் உறவினர்கள் என்ற பற்பலக் கதைகளுடன் ஒருங்கிணைப்பு நடந்து வந்துள்ளதும் உண்மை.

இதில் உச்சக் கட்டமாக இஸ்லாமியரையும் பௌத்தரையும் உள்ளிழுக்கும் முறையும் நிகழ்ந்தது. அதற்கு இஸ்லாமியரை எதிர்த்த விஜயநகரப் பேரரசின் ஆட்சிக்காலத்தில் உருவாக்கப்பட்ட மீனாட்சி திருக்கல்யாணம், கள்ளழகராகிய திருமால் தங்கை திருமணம் காண வருதல், வழியில் இஸ்லாமிய பெண் வீட்டில் தங்குதல் போன்ற கதைகளும் உண்டு. அதே போல திருவரங்கத்தில் இஸ்லாமிய தொடர்பு காட்டப்பெறும், பூரி ஜகந்நாதர் கோயிலும் அங்குள்ள வட்டார மக்களின் வழிபாடு முறையை உள்வாங்கிய நிலை ஆகியன இந்த இணைப்பு முயற்சிக்கு மேலும் சில சான்றுகள். புத்தரும் பத்து அவதாரங்களில் ஒன்றாகிப்போனார். இவர்கள் கடவுளருக்குள்ளும் யார்தான் பெரியவர் என்ற போட்டி.

வடநாட்டில் இருப்போருக்கும் தென்னாட்டில் இருப்போருக்கும் சடங்குகளில் வழிபாட்டு முறைகளில் எனப் பல வேறுபாடுகள் உண்டு.
இருப்பினும் **அனைத்து உதிரி வழிபாட்டு பின்னணியினரும் ஒன்பது பெண்கள் யானை போல ஒன்றிணைந்து உள்ளார்கள்.**



*https://upload.wikimedia.org/wikipedia/commons/8/8c/A_four-armed_Krishna_rides_on_a_gopi-elephant%3B_a_steel_engraving%2C1850%27s%2C_with_modern_hand_coloring.jpg*

அதற்குத் தீவிர இந்துமத சமயத்தலைமையும் முழுமூச்சுடன் செயல்படுகிறது. இந்தியா எனில் இந்துமதம் என்ற கொள்கையை ஆணித்தரமாக நம்பும், நம்ப வைக்கும் நடவடிக்கை இது.

யார் துவங்கினார் என அறிய இயலாத வரலாற்றுத் தொடக்கத்தில் இந்துமதத்தின் தோற்றப்பெருமை பேசப்படுகிறது. என்றும் நிலைத்திருக்கும் வாழ்க்கைத் தத்துவம் என்ற முறையில் சனாதன தர்மம் என்று பெருமிதம் பேசப்படுகிறது.

இருப்பினும் வேதமதத்தின் உண்மையான உறுதியான கட்டமைப்பு வர்ணாசிரம தர்மம் என மக்களுக்குள் பிரிவினை பேசும் அடிப்படை மட்டுமே. அது இல்லாது அவர்களால் இந்தியாவில் மட்டுமல்ல அயல்நாட்டிலும் வாழ முடியவில்லை என்பதுதான் நடப்புலக நிலை. இதில் மக்களுக்குள் பேதம் கற்பிக்கப்பட்டு, மனித உரிமைகள் மீறப்பட்டு, பெண்ணுரிமை பறிக்கப்பட்டு, பல சமயங்களில் ஒடுக்கப்பட்டவர் உயிரும் வாழ்வும் பறிக்கப்படுவது வர்ணாசிரம தர்மம் என்ற கோட்பாடு கொடுத்த பரிசுகள். அது பரிணாம வளர்ச்சி பெற்று தொழில் அடிப்படையைப் பிறப்பு அடிப்படையில் உறுதி செய்த வாழ்க்கைமுறையின் தத்துவ வெளிப்பாடு.

இந்தப் பிரிவுகளை அறியாதோர் இருக்க வாய்ப்பில்லை என்பதால் அதில் விரிவாக விளக்கத் தேவையுமில்லை. அதன் அடிப்படை, படிநிலையில் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என மக்களைப் பிரித்து வைத்திருந்த நிலை. இந்த அடுக்குமுறையில் யாரும் யாருக்கும் சமமல்ல. ஆனால் ஒவ்வொருவருக்கும் தான் யாருக்கோ உயர்ந்தவர் என்றும், தனக்குக் கீழாக யாரோ இருக்கிறார்கள் என்ற எண்ணம் தரும் மகிழ்ச்சிக்கும் குறைவில்லை. அதில்தான் வர்ணாசிரம தர்மத்தின் வெற்றியே அடங்கியுள்ளது. பிறப்பின் அடிப்படையில் கட்டுப்படுத்தப்பட்ட தொழில் மற்றும் வாழ்க்கைமுறை இன்றைய நாகரிக உலகில் அடிபட்டுப் போனாலும், சட்ட முறையில் மறுக்கப்பட்டாலும் புரையோடிப் போன இனபேதம் ஆணவக்கொலைகள், சாதிக்கொலைகள் வரை பக்கவிளைவுகள் வெளிப்பட்டுக் கொண்டே இருக்கிறது...இருக்கும்.

கடவுள் மறுப்பு வேத மறுப்பு சொல்வோரையும் தன்னுள் இந்துமதம் ஏற்றுக் கொள்கிறது என்போர் கவனிக்க வேண்டியது ஒன்றுண்டு. அவ்வாறு பேசியவர்கள் இன்றுவரை மாற்றுக்கருத்து பேசியதால் கொல்லப்பட்டவர்களை மறப்பவர்கள் இவர்கள். 2010 இல் இருந்து மறுத்துப் பேசியவர் 30 பேர் கொல்லப்பட்டுள்ளனர் என்பது இவர்களுக்கு நினைவு வருவதில்லை*. உண்மை நிலையும் நடப்புலகமும் வேறு வேறு. கௌரி லங்கேஷ் யார்? தபோல்கர், பன்சாரே, கல்புர்கி உயிரிழந்த காரணம் என்ன ?

அனைவரிடமும் பேதம் காட்டவில்லை என்போர்கள் இந்திய குற்றவியல் தரவுகள் காட்டும் ஒடுக்கப்பட்டோர் மீது நிகழ்த்தப்பட்ட குற்றங்களின் எண்ணிக்கை குறித்து அலச விரும்பாதவர்கள். இன்றுவரை சபரிமலை என்று பெண்களின் வழிபாட்டுரிமை போராட்டமாக இருப்பதை வசதியாக மறந்து போனவர்கள். இவர்களுக்கு எங்கே ஒரு காலத்தில் கோவிலுக்குள் நுழைய ஒடுக்கப்பட்டவர் மறுக்கப்பட்டதும், தாய்மொழியில் வழிபாடு செய்யும் உரிமை மறுக்கப்படுவதும், சதி என்று கைம்பெண்ணை கணவனுடன் எரித்ததும், அவர்கள் கணவன் இறப்பிற்குப் பிறகு வெள்ளை கருப்பு ஆடைகளுடன் சீருடையில் வலம் வந்ததும் நினைவிருக்கும். இன்று விருந்தாவன் கைம்பெண் என்ற மனித உரிமை மீறலின் விளைவுதான் என்பதும் கூட நினைவு வராதே. மாய உலக மயக்கம். வண்ணக்கண்ணாடி வழியே வாழ்க்கையைப் பார்க்கும் மனப்பான்மை அல்லது மனப்பக்குவமின்மை.

*கடந்த காலத்தில் ஒரு சிலருக்கு கல்வி மறுக்கப்பட்டது, சொத்து மறுக்கப்பட்டது, உணவில் உடையில் கட்டுப்படுத்தப்பட்டதும் நினைவு வராது. இன்றுவரை மாட்டுக் கொலை என்று மாட்டிறைச்சி சாப்பிடுபவரை மனிதக் கொலை செய்வது குறித்தும் கண்ணை மூடிக் கொள்பவர் பலர். ஒடுக்கப்பட்ட மக்கள் உயர்கல்வி தொடரமுடியாது தற்கொலை நிகழ்வுகள் எதன் பக்க விளைவு என்பது தெரியுமா? அனைவரையும் அரவணைத்துச் செல்லும் மதக்கோட்பாட்டின் பக்க விளைவா அது?*

***பிரிந்து போகிறேன் என்று போராட்டம் செய்பவர் ஒரு புறம் இருக்க, பிரிந்து போனவர் ஒருபுறமிருக்க, உள்ளிருப்பவரும் நான் எப்படி இந்தக் கும்பலில் சேர்க்கப்படுகிறேன் என்று குழம்பித் தவிக்கும் நிலையில் தங்களை இந்துமதத்தில் அடையாளம் காணமுடியாமல் இருக்கும் நிலையைக் கண்டால் இந்துமதம் என்பது மீண்டும் யானையைத்தான் நினைவு படுத்துகிறது.***

***மதம் என்ற வழியில் செல்வதால் மதம் பிடித்து ஓடி மசூதியை உடைப்பதால் அல்ல அது.***



*https://lh4.googleusercontent.com/-5ciMcK3uaEs/TXJhaU60fsI/AAAAAAAADoc/rPjwIGZv5Nc/s1600/BlindMen%2526theElephant-medium.jpg*

***யானையைக் கண்ட குருடர் கதையை நினைவு படுத்துகிறது ஒவ்வொருவரும் தங்களின் கோணத்தில் இந்துமதம் என்பது என்னவென்றும், கொள்கைகள் என்னவென்றும், வாழ்க்கைமுறை என்னவென்றும் கூறிக்கொண்டிருக்கும் நிலையில் உள்ள சமயம் இந்துமதம். குருடர்கள் யானையைத் தடவித் தடவிப் பார்த்து அவரவர் கோணத்தில் விளக்கம் சொல்லும் நிலைதான் இந்துமத யானையின் நிலை.***

அதற்குச் சான்று அவர்களுக்கு என்று தலைமை, சமய நூல், சமயக்கட்டுப்பாட்டு தலைமை இல்லாத நிலை. இருக்கவும் முடியாது. ஏனெனில் அது உருவாக்கப்பட்ட நிலை அவ்வாறு. கிவ் அண்ட் டேக் பாலிசியில் அமைக்கப்பட்ட அரசியல் கூட்டணி போன்றது. பல வழிபாட்டுமுறைகளையும் ஒருங்கிணைத்த நிலையில் யாரையும் யாரும் கட்டாயப்படுத்த முடியாத ஒரு நிலை. அவ்வாறு கட்டாயப்படுத்தினால் அவரவரும் பிய்த்துக் கொண்டு தனிக்குடித்தனம் போய்விடுவார்கள் என்பதுதான் உண்மைநிலை. ஐயமிருந்தால் லிங்காயத்துகளை நினைவு கூரவும்.

---

**https://www.cjr.org/special_report/gauri-lankesh-killing.php/*

தொடர்பு: தேமொழி *(jsthemozhi@gmail.com)*

## 22. நவீன நாடக உருவாக்கமும் சமூகத் தேவையும்

— *கோ. பழனி*



*தமிழில் நவீன நாடகம், வீச்சாக முன்னெடுக்கப்பட்டதென்பது நாடகப் பயிற்சிப் பட்டறைகளிலிருந்தே தொடங்குகிறது. தேசிய நாடகப்பள்ளியில் கற்று வந்த பேரா. சே. இராமானுஜம் அவர்களின் தன்முனைப்பால், காந்தி கிராமம் கலாச்சார 'அகாதமி' சார்பில் முதல் பயிற்சிப்பட்டறை ஜீன் 20 – 26, 1977இல் நடந்தது. இரண்டாவது, 01.11.1978 முதல் 10.01.1979 வரை 70 நாட்கள் காந்தி கிராமப் பல்கலைக் கழகத்தில் நடத்தப்பட்டது. இப்பட்டறையின் இயக்குனராக இருந்தவர் காஷ்மீரத்துக்காரரான பன்ஸிகௌல். மூன்றாவதாக 1980இல் செப்டம்பர் 01ஆம் தேதி முதல் 10ஆம் தேதி வரை சென்னையில் பாதல்சர்க்கார் நடத்திய பயிற்சிப் பட்டறை. இம்மூன்று பயிற்சிப் பட்டறைகளும் தமிழில் நவீன நாடக முயற்சிகள், நாடகக் குழுக்கள் உருவாவதற்கு அடித்தளமாக அமைந்தவை. குறிப்பாக, 1978இல் மதுரை நிஜநாடக இயக்கம், சென்னை பரிக்ஷா, வீதிநாடக இயக்கம் ஆகிய குழுக்கள் உருவாயின. அதற்கும் முன்பே 1977இல் கூத்துப்பட்டறை என்கிற முழுநேர நாடக இயக்கம் ந. முத்துசாமி மற்றும் பிரக்ஞை வீராசாமி போன்றோர்களால் முன்னெடுக்கப்பட்டு செயல்படத் தொடங்கி இருந்தது என்பது குறிப்பிடத்தக்கது.*

*1984இல் நிஜநாடக இயக்கத்தின் 'துர்க்கிர அவலம்' நாடகம் தென்மண்டல நாடக விழாவில் கலந்துகொண்டு பிறமொழி நாடகங்களுடன் போட்டியிட்டு தேசிய நாடக விழாவிற்குத் தேர்வு செய்யப்பெறுகையில் 'தமிழ் நாடகம்' என்பதான கருத்துருவின் தேவை உணரப் பட்டதாக (1988: 67) பேரா.மு.இராமசுவாமி குறிப்பிடுகிறார். மேலும் "நம்*

*பாரம்பரியக் கலை மரபைப் பின்பற்றி ஒரு தமிழ் நாடகம் உருவாக வேண்டும். ஆனால், நாடகம் சொல்லும் கருத்து, உலகத்து மனிதனுக்கும் சொல்லக்கூடியதாக இருக்க வேண்டும்'' (மேற்படி) என்பதான கருத்து அழுத்தம் பெற்றதாகவும் அவர் கூறுகிறார். அது மட்டுமல்லாது எழுபது, எண்பதுகள் காலகட்டமானது பல்வேறு தேசிய இனங்கள் தத்தம் இனப்பிரச்னைகளுக்காக உரத்து குரல் எழுப்பிய காலகட்டம் என்பதையும் நவீனநாடக உருவாக்கத்தோடு ஒப்புநோக்கிப் பார்க்க வேண்டும்.*

*ஆடல், பாடல் ஆகியன நமது மரபு வழியான நிகழ்த்துமுறையாகவும் கதை தழுவிய கூத்தே நாடகமாகவும் எண்ணப்பட்டு வந்திருக்கின்றன. மனித வாழ்க்கையில் ஆடலும் பாடலும் சிறப்பான இடத்தை வகிக்கின்றன என்பது மறுக்கமுடியாது. பாடல், ஆடல் மரபிலிருந்து தங்கள் கருத்தை அடுக்குமொழி, கவித்துவ மொழி வழியாக திராவிடர் இயக்க நாடகங்கள் எடுத்துப்பேசின. குறிப்பாக, இந்நாடகங்கள் சமூக உணர்வுகளையும் பகுத்தறிவு சிந்தனைகளையும் வெளிப்படுத்தின என்று கூறலாம்.*

*தொன்மையான, திராவிட அடுக்குமொழி நாடகப் போக்குகளிலிருந்து மாறுபட்டு, சமகாலத்திற்கான நவீன நாடகங்கள் மேற்சுட்டிய நாடகப் பயிற்சிப் பட்டறைகளிலிருந்தே உருவாக்கம் பெறுகின்றன. இவ்வாறு உருவாக்கம் பெற்ற நவீன நாடகங்கள் மேடைகளிலும் மக்கள் மத்தியிலும் நிகழ்த்தப்பட்டன. மரபு வழியான உள்ளீடுகளிலிருந்தும் நிகழ்த்து முறைகளிலிருந்தும் மாறுபட்டன. இந்தப் பின்புலத்தில் பல நவீன நாடகக்காரர்கள் உருவாகி, செயல்படத் தொடங்கினர். நான் சந்தித்த – செயலாற்றிய சில நாடகக்காரர்கள், அவர்கள் உருவாக்கிய நாடகங்கள், அவற்றின் சமூகத் தேவைகள் ஆகியவற்றை முன்வைத்து இக்கட்டுரையில் விவாதிக்க விழைகிறேன்.*

**பேரா. சே. இராமானுஜம்:**
*நவீன நாடகத்தின் பன்முகங்களை நுட்பமாக அறிந்தவர் பேரா. சே. இராமானுஜம். பள்ளி நாடகங்கள் – சிறுவர் அரங்கம் என்பதைச் சிறப்புப் பாடமாகக் கொண்டு தனது நாடகப் படிப்பைத் தில்லி தேசிய நாடகப் பள்ளியில் முடித்தவர். திருச்சூர் நாடகப் பள்ளியில் உதவி இயக்குநராகவும், தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக நாடகத் துறைத் தலைவராகவும் பணியாற்றி ஓய்வு பெற்றவர். இவரது நெறியாள்கையில் புறஞ்சேரி, வெறியாட்டம், நாற்காலிக்காரர், மௌனக்குறம், அண்டோரா, செம்பவளக்காளி, தங்கக் குடம் போன்ற பல்வேறு தமிழ் நாடகங்களும் பல மலையாள நாடகங்களும் உருவாக்கம் பெற்றுள்ளன. நாடக உருவாக்கம், பயிற்சிப் பட்டறை, நாடகப் பனுவல் உருவாக்கம், நாடக ஆய்வுகள் என தன்வாழ்நாள் முழுவதும் பயணப்பட்டவர் பேராசிரியர். இவரின் நாடகப் படைப்புகள் எளிமையும் நேர்த்தியும் கொண்டவை. தன் படைப்புகளில் வலிந்து அரசியலைப் புகுத்துவது இவரிடம் இல்லை. இருப்பினும் இவரது படைப்புகள் சமகால அரசியலையும் கலை நேர்த்தியையும் வெளிப்படுத்தி நிற்கும். இவரின் நெறியாள்கையில் உருவான நாடகங்கள் அனைத்துமே மற்ற நாடகக்காரர்களுக்குப் பாடங்களாக விளங்குபவை. அந்த வரிசையில் வெறியாட்டம், நாற்காலிக்காரர், மௌனக் குறம் ஆகிய நாடகங்கள் குறிப்பிடத்தக்கன.*

*வெறியாட்டம், கி.மு. 400களில் வாழ்ந்த கிரேக்க நாடகக்காரர் யூரிபிடிசின் 'ட்ரோஜன் விமன்' (ட்ராய் நகரத்துப் பெண்கள்) என்கிற நாடகத்தைத் தழுவி உருவாக்கப்பட்டது.*

*ட்ராய் நகரத்துப் பெண்கள் பெலெப்பொனேஷிய யுத்தத்தில் கணவர்களையும் உடைமைகளையும் இழந்த அவலத்தை மையமிட்டது இந்நாடகம்.*

*பேரா. இராமானுஜம் இந்நாடகத்தின் அடியிழையாக ஒப்பாரியை இணைத்து, ட்ராய் நகரத்துப் பெண்களின் அவலத்தை வெளிக்காட்டி இருப்பார். இது, அந்நாடகம் நிகழ்த்தப்பட்ட காலத்தில் பார்வையாளர்களால் ஒரு குறியீடாகப் பார்க்கப்பட்டது.*

*பெண் 1: மூத்தவளே பேரரசி*

*முதியவளே எம்மரசி*

*எல்லோரும்: பெருந்தேவி நாச்சியாரே*

*பெண்களுமே தெண்டனிட்டோம்*

*பெண் 2: சேதியென்ன சொல்லுமம்மா?*

*சோர்ந்தழவும் காரணமேன்?*

*பெண் 3: புலம்பித் தவித்திடவும்*

*புதிதாகச் சேதியுண்டோ?*

*பெண் 4: அழுது தவித்திடவும்*

*அடுத்தேதும் சேதியுண்டோ?*

*பெண் 5: தோல்விக்கு நம்நாடு*

*தோரணங்கள் கட்டியதும்,*

*பெண் 6: வீழ்ச்சிக்கே நம்நாடு*

*வாசல் தெளித்ததுவும்*

*பெண் 1: ஓலமிட்டு அழுதிடவே*

*கோலமிட்டு நின்றதுவும்*

*எல்லோரும்: தஞ்சம் புகுந்திடவே*

*தரையேது மில்லாது*

*நெஞ்சங்கள் விம்முவதும்*

*நெடுமூச்சு வளர்வதுவும்*

*பெருந்தேவி கதையாச்சு*

*பெண்டிர் எங்கள் கதையாச்சு*

*நடந்தகதை இவையெல்லாம்*

*நாங்கள் அறிந்த கதை*

*பிறந்த துண்டோ ஏதேனும்*

*புலம்பலுக்குப் புதுக்கதைகள்?*

*(சி.அண்ணாமலை (தொ.ஆ); 2003: 245)*

*போர் நிகழ்வு எவ்வாறு இருக்கும் என்பதும் போரின் விளைவு என்னவாக இருக்கும் என்பதும் ஈழத்தை – ஈழத்தின் நிகழ்வுகளை உற்று நோக்கியவர்கள் நன்கு அறிவர். உலகம் முழுவதும் போரின் கோரமுகம் பலரின் கண்முன் இன்றும் வந்துபோய்க் கொண்டே இருக்கிறது. இந்தப் பின்புலத்தில் வெறியாட்டம் நாடகத்தின் ஒப்பாரி, ஈழத்தில் நடந்த இனப்படுகொலைகளையும் அதன் விளைவுகளையும் பார்வையாளர்களின் மனவெளியில் திரையிட்டுக் காட்டியது. கி.மு. 400இல் எழுதப்பட்ட ட்ராய் நகரத்துப் பெண்கள் நாடகத்தை இருபதாம் நூற்றாண்டின் இறுதியில் வாழும் மக்களுக்கும் பொருந்துவதாக பேரா. சே. இராமானுஜம் வாசித்து உருவாக்கியுள்ளார்.*

*ந. முத்துசாமி எழுதிய நாற்காலிக்காரர் நாடகத்தை நெறியாள்கை செய்த சே. இராமானுஜம், அந்நாடகத்தில் வரும் சீட்டுக்கட்டு, கோலிக்குண்டு குழுக்களை முதல் உருவாக்கத்தில் சிறுவர்களாகவும் பிறிதொரு உருவாக்கத்தில் முதியவர்களாகவும் காட்சிப்படுத்தி இருந்தார்.*

*இந்நாடகத்தில் விளையாட்டு என்பது ஒரு குறியீடாகக் கொள்ளப்பட்டது. அதாவது, விளையாட்டு என்பது ஓட்டு அரசியல். நாடகத்தில் வரும் இரு குழுவினரும் விளையாடும் ஆட்டங்கள் மாறிக்கொண்டே வந்து வாழ்க, ஒழிக விளையாட்டாக மாறி, காக்கைக் குடுவையில் கல் போட்டு தண்ணீரை மேலெழுப்பும் விளையாட்டாக நகர்ந்து, அது கலவரமாக மாறி, அதனால் வேடிக்கை பார்த்துக்கொண்டு சும்மா இருந்த நாற்காலிக்காரர் பாதிக்கப்படுவது வரை அத்தனையும் குறியீடுகளாகப் பார்வையாளர்களை வந்தடைகின்றன. ஓட்டு அரசியல் எவ்வாறு செயல்படுகிறது என்பதையும் இதனால் பாதிக்கப்படுபவர்கள் வெகுமக்களாகவே இருக்கின்றனர் என்பதையும் இந்நாடகம் உணர்த்துகிறது. இந்தியா போன்ற ஜனநாயக நாட்டில் வாழும் நமக்கு எல்லா காலத்திற்கும் பொருந்துவதாக இந்நாடகம் இருக்கும் என்பதில் ஐயமில்லை.*

*பெண்களை சகஉயிரியாகப் பார்க்காத மனோநிலையும் பெண்களுக்கு எதிரான குற்றங்களும் காலம் காலமாக இச்சமூகத்தில் இருந்து வருகிறது. வேட்டையாடி உணவு சேகரித்து, பகிர்ந்து உண்டு வாழ்ந்த – வாழும் சமூகங்களிடையே இந்தப் போக்குகள் மிகமிகக் குறைவே. குற்றாலக் குறவஞ்சியில் வரும் சிங்கன் – சிங்கி, குறவஞ்சி தெருக்கூத்தில் வரும் குறத்தி, சமகாலத்துப் பேருந்து நிலையம், தொடர்வண்டி நிலையம், மக்கள் கூடுகின்ற இடங்கள், ஆற்றங்கரை, மலை, சந்திரமதி, திரௌபதை, சீதை ஆகியோரின் காலங்கள் எனப் பல சூழல்களை காட்சிகளாக்கி மௌனக்குறம் நாடகத்தை நெறியாள்கை செய்துள்ளார் பேரா. இராமானுஜம்.*

*காலம் காலமாக பெண் எவ்வாறு பார்க்கப்பட்டாள், இன்று எவ்வாறு பார்க்கப்படுகிறாள் என்பதை மலையின சிங்கன் – சிங்கி பாத்திரங்கள் வழி எடுத்துக்காட்டுகிறது மௌனக்குறம். 'பெண்ணினத்தை பண்டமாக, அடிமையாகப் பார்க்கும் இந்தச் சமவெளிச் சமூகமே வேண்டாம்' என்று சிங்கனும் சிங்கியும் மலைக்கே திரும்பிச் செல்வதாக இந்நாடகத்தை நிறைவு செய்கிறார் பேராசிரியர்.*

*மாற்றுப் பாலினரும் பெண்ணும் ஆணும் சரிநிகர் சமம் என்று எப்போது இந்தச் சமூகம் மாறுகிறதோ, பெண்களுக்கு எதிரான வன்கொடுமைகள் எப்போது இல்லாமல் போகிறதோ அக்காலம் வரை மௌனக்குறம் போன்ற நாடகங்களின் தேவை இருக்கவே செய்யும்.*

*மேலே குறிப்பிட்டதுப் போல பேரா. சே. இராமானுஜம் தம் நாடகங்களில் நேரடியாக அரசியல் பேசுவதில்லை. கலைத்துவத்தோடு நுட்பமாக அரசியலைப் பொதித்து வைப்பது அவரின் தனித்தன்மை என்பதற்கு மேலே சுட்டிய நாடகங்கள் துளி சான்று.*

***பேரா. மு. இராமசுவாமி:***
*தொடக்க கால நவீன நாடகப் பயிற்சிப் பட்டறைகளில் கலந்து கொண்டு தனது ஆளுமையை வளப்படுத்தக் கொண்டவர் பேரா. மு. இராமசுவாமி (முரா). இவர் நாடகத்தின் பால் தீராப் பற்றுக் கொண்டவர். மதுரையில் 1978ஆம் ஆண்டு நிஜநாடக இயக்கம் இவரால் தொடங்கப்பட்டது. இந்த இயக்கம் தொடங்கிய பிறகு ஒவ்வொரு ஆண்டும் நாடக விழாக்களை மதுரையில் நடத்திய பெருமைக்குரியவர். தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக நாடகத் துறைப் பேராசிரியராகவும் தலைவராகவும் செயலாற்றியவர். நாடக நெறியாள்கை, நடிப்பு, நாடகப் பயிற்சிப் பட்டறைகள், ஆய்வு என இவரது நாடக வெளி சார்ந்த பயணம் தொடர்ந்து கொண்டிருக்கிறது.*

*வீதி நாடகத்தில் தொடங்கிய முராவின் தமிழ் நாடக வெளிச் செயற்பாடுகள் அழுத்தமான அரசியல் உள்ளீடுகளைக் கொண்டவை. துர்க்கிர அவலம், ஸ்பார்ட்டகஸ், சாபம்? விமோசனம்!, முனி, கலிலியோ, கட்டுண்ட பிராமிதியஸ், கலகக்காரர் தோழர் பெரியார் போன்ற நாடகங்கள் குறிப்பிடத்தக்கன. இருபந்தைந்திற்கும் மேற்பட்ட நாடகங்களை முரா நெறியாள்கை செய்துள்ளார்.*

*நடுவணரசின் சங்கீத நாடக அகாதமி நடத்திய தென் மண்டல நாடக விழாவில் 1984ஆம் ஆண்டு இவரின் துர்க்கிர அவலம் என்கிற நாடகம் நிகழ்த்தப்பட்டபோது, அந்நாடகம்*

*அனைத்து மொழியினரின் கவனத்தையும் ஈர்த்தது குறிப்பிடத்தக்கது. இந்நாடகம் கிரேக்க நாடகமான ஆண்டிகனியைத் தழுவியது.*

*வானியல், அறிவியல் உண்மைகளை உலகிற்குச் சொன்ன கலிலியோ நாடகத்தை பல பள்ளிகளிலும் நடத்தியது நிஜநாடக இயக்கம். மத அடிப்படைவாதத்திற்கும் மூட நம்பிக்கைகளுக்கும் எதிரான அறிவுச் செயற்பாடுகளை முன்னெடுத்தவர்களுள் கலிலியோவும் ஒருவர். அவரைப் பற்றியும் அவரது கண்டுபிடிப்புகள் பற்றியும் மாணவர்கள் அறிந்துகொள்ள வேண்டிய தேவையை நிறைவு செய்தது இந்நாடகம். இதில் கலிலியோவாக நடித்த முரா அவர்களின் வேடப்பொருத்தம் குறிப்பிடத்தக்கது.*

*முனி, சங்கீத நாடக அகாதமியின் நிதி உதவித் திட்டத்தில் உருவாக்கம் பெற்ற நாடகம். கவிஞர் மலைச்சாமி இந்நாடகப் பனுவலை உருவாக்கினார். இந்நாடகம், உண்டு உறைவிடப் பயிற்சிப் பட்டறையின் வழியாக தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் 1995ஆம் ஆண்டு நிகழ்த்தப்பட்டது. முனி நாடகத்தின் மேடை அமைப்பு இங்கு குறிப்பிடவேண்டிய ஒன்று. மகாபாரத – அர்ச்சுனன் தபசு தெருக்கூத்தில் பயன்படுத்தப்படும் தபசு மரத்தின் சிறு வடிவம் இந்நாடகத்தில் கையாளப்பட்டது. அர்ச்சுனன் தபசு மரம், ஆணாதிக்கத்தின் குறியீடாகப் பார்க்கப்படுகிறது. அதே பொருண்மையில் முனியில் பயன்படுத்தப்பட்ட தபசு மரம், பெண்ணிய அரசியலை பளிச்சென வெளிப்படுத்தியது.*

*பலரைப் போலவே, தொப்புளான் ராஜாவால் பாதிப்புக்குள்ளான ஒருத்தி முனி. தொப்புளான் ராசாவின் பெண்களுக்கெதிரான கொடுமைகள் அதிகரித்துக் கொண்டே செல்ல, முனி தன் நாக்காலேயே ராசாவைச் சுழற்றி இறுக்கிக் கொன்று விடுகிறது. பழமரபுக் கதையை அடியொற்றி, மலைச்சாமியால் உருவாக்கப்பட்ட இந்நாடகப் பனுவலை பல்வேறு பரிமாணங்களோடு பெண்ணிய அரசியல் பேசும் நாடகமாக உருவாக்கினார் முரா. தொப்புளான் ராசாவைப் போன்றோர் இந்த மண்ணில் இருக்கும் வரை முனி தன் நாக்கைத் தொங்கவிட்டுக் கொண்டிருப்பாள்.*

*கிரேக்க நாடகக்காரன் ஈஸ்கைலஸ் கி.மு. வில் எழுதிய 'புராமிதியஸ் பவுண்ட்' என்கிற நாடகத்தை 2002ஆம் ஆண்டு இவர் நெறியாள்கை செய்தார். புராமிதியஸ் அதிகாரத்திற்கு மட்டுமே சொந்தமாக இருந்த நெருப்பை, அனைத்து மக்களும் பயன்கொள்ளும் வகையில் பரவலாக்கி விடுகிறான். அதனால் அதிகாரம் அவனை மலையுச்சியில் சிலுவையில் அறைந்து, நரிகளுக்கும் கழுகுகளுக்கும் இரையாக்குகிறது. இந்நாடகத்தில் நெருப்பு ஒரு குறியீடு. நெருப்பு என்பதை அறிவாகவும் செல்வமாகவும் கொள்ளலாம். உலக மக்கள் அனைவரும் பயன்கொள்ள வேண்டிய ஒன்றை, ஓரிடத்தில் குவித்து வைத்திருப்பவர்களுக்கு எதிராகப் போராடி மாண்டு போனவர்களை மக்கள் இன்றளவும் போற்றி வருகின்றனர். அத்தகையவர்களுள் ஒருவனாகத்தான் புராமிதியஸ் திகழ்கிறான். இந்நாடகத்தின் தேவை, என்றென்றைக்கும் உண்டு என்றே தோன்றுகிறது.*

*கலக்காரர் தோழர் பெரியார் தமிழகத்தின் பல ஊர்களில் நிகழ்த்தப்பட்ட நாடகம். பெரியாரின் கருத்துக்களை இந்த மண் அறியும். ஆனால், பெரியார் கம்யூனிச சித்தாந்தத்தை உள்வாங்கிய ஒரு தோழர் என்பதை இந்நாடகம் வெளிப்படுத்துகிறது.*

*கறுப்புச் சட்டை பெரியாரை சிவப்புச் சட்டைப் பெரியாராக, தன் அரசியல் பார்வை சார்ந்து மேடையேற்றியவர் முரா.*

*பெரியாரின் வாழ்வில் நடந்த பல்வேறு நிகழ்வுகளை ஒரு கதையைப் போல காட்சிப்படுத்தியது இந்நாடகம். எளிமையான மேடைப் பொருட்களைப் பயன்படுத்தி இந்நாடகத்தைப் பல இடங்களில் மேடையேற்றுவதற்கு ஏற்ப உருவாக்கியிருந்தார் பேராசிரியர். பெரியார் இந்த மண்ணை விட்டுப் பிரிந்து பல ஆண்டுகள் ஆகிப்போன சூழலிலும் சாதி மத வேறுபாடுகள், பெண்ணடிமைத்தனம் போன்றன இன்றும் குறைந்தபாடில்லை. இவை பெரியாரின் காலத்தைக் காட்டிலும் மேலும் வீச்சாக இருப்பதாகவே தோன்றுகிறது. ஆக, பெரியாரின் கொள்கைகளை இன்னும் வீச்சாக முன்னெடுத்துச் செல்லவேண்டிய தேவை உள்ளது.*

***இளைய பத்மநாதன்:***
*ஈழத்தைச் சார்ந்த நாடகக்காரர் இளைய பத்மநாதன் (பத்தண்ணா). இவர், போர்ச்சூழல் காரணமாகத் தமிழகத்திற்குப் புலம் பெயர்ந்தவர். தமிழகத்திற்கு வந்தவர் ஆங்காங்கே நடக்கும் கூட்டங்கள், நாடக நிகழ்வுகள், நாடக விழாக்கள் ஆகியவற்றில் கலந்துகொண்டு விவாதங்களில் ஈடுபட்டு வந்துள்ளார். ஒரு சூழலில் சென்னைப் பல்கலைக்கழக தமிழிலக்கியத் துறையின் பேராசிரியராகப் பணியாற்றிக் கொண்டிருந்த வீ. அரசு அவர்களுக்கும் நாடகக்காரர் அ. மங்கை அவர்களுக்கும் அறிமுகம் ஆகியுள்ளார். இதன் தொடர்ச்சியாக, நாடக ஆர்வலர்களையும் சென்னைப் பல்கலைக்கழக தமிழிலக்கியத் துறை மாணவர்களையும் இணைத்து உருவாகியிருந்த பல்கலை அரங்கத்தோடு 1989 முதல் பத்தண்ணா செயல்படத் தொடங்குகிறார்.*

*பத்தண்ணா நாடக நெறியாளுனராகவும் பனுவல் ஆசிரியராகவும் செயல்படுபவர். இடதுசாரி அரசியல் பின்புலம் உள்ள இவர், தமிழகத்திற்கு வருவதற்கு முன் ஈழத்தில் நாடகங்கள் செய்து கொண்டிருந்தவர். நாடகப் பயிற்சிப் பட்டறைகள் நடத்தி பங்கேற்பாளர்களுக்கு ஆடல், பாடல், நடிப்புப் பயிற்சிகள் அளித்து நடிகர்களாக உருவாக்கிய பிறகு பனுவலுக்குள் செல்வது பத்தண்ணாவின் முறை. தமிழ் மரபு சார்ந்த ஆடல், பாடல் உத்திகளை நவீன நாடகத்திற்கு உந்துதலாக இருக்க வேண்டும் என்பது பத்தண்ணாவின் கருத்து. அவ்வாறு உருவாக்கப்படும் நாடகமே தமிழ் அடையாளம் சார்ந்த நாடகமாக இருக்க முடியும் என நம்பிச் செயல்படுபவர். அவரது வார்த்தைகளில் சொல்ல வேண்டுமானால், ''உலகின் எந்த மூலையிலிருந்தும் நாடகப் பனுவல்களை எடுத்து நாடகமாக உருவாக்கத் தயார். ஆனால், அந்தப் பனுவலை தமிழ் அடையாளம் சார்ந்த நாடகமாக உருவாக்கவே நான் முனைவேன்'' என்பார். அந்த வகையில் 1989 ஆம் ஆண்டு கண்களுக்கு அப்பால் என்கிற ஈழத்துப் படைப்பாளி நந்தியின் பனுவலை வீதி நாடக வடிவில் உருவாக்கினார். கண்ணப்ப நாயனார் கதையை அடியொற்றிய இந்நாடகம், சாதிய ஒடுக்குமுறைக்கு எதிரான குரலை எழுப்பியது.*

*ஜெர்மன் நாட்டு நாடகக்காரன் பெர்ட்ரோல்ட் பிரெக்ட் எழுதிய விதியும் விதிவிலக்கும் (Exception and the Riule) என்கிற நாடகப் பனுவலைத் தழுவி, பல்கலை அரங்கத்தினர் உருவாக்கிய ஒரு பயணத்தின் கதையை 1990ஆம் ஆண்டு நெறியாள்கை செய்தார் பத்தண்ணா. இந்நாடகத்தில் புதையல் தேடிச் செல்லும் முதலாளிக்கு வழிகாட்டியும் சுமைகளைத் தூக்கிச் செல்லும் கூலியும் முதன்மையான பாத்திரங்கள். பயணத்தின் போது*

முதலாளி ஓய்வெடுக்கத் தங்கிய அறைக்குக் கூலி செல்கிறான். அப்போது சந்தேகித்த முதலாளி கூலியை கொலை செய்து விடுகிறான். அந்த வழக்கு நீதிமன்றத்திற்கு வருகிறது. நீதியரசர் 'முதலாளி குற்றவாளி அல்ல' என்று தீர்ப்பளிக்கிறார்.

உழைக்கும் மக்களின் நிலையும் இடைத்தரகர்களின் நிலையும் முதலாளி வர்க்கத்தின் பண்புகளும் இந்நாடகத்தில் வெளிப்படுகின்றன. ஆடல், பாடலோடு நிகழ்த்தப்பட்ட ஒரு பயணத்தின் கதை வர்க்க அரசியலை அழுத்தமாகப் பேசியது.

பத்தண்ணா எழுதிய தீனிப்போர் நாடகப் பனுவலை அ. மங்கை நடுவணரசின் சங்கீத நாடக அகாதமியின் நிதி உதவியுடன் நெறியாள்கை செய்தார். இந்நாடகம் 1992ஆம் ஆண்டு நிகழ்த்தப்பட்டது. நாட்டு விலங்குகளுக்கும் காட்டு விலங்குகளுக்கும் இடையில் ஏற்பட்ட போர், உணவு இடைவேளையின் போது தாவர உணவு ஙீ புலால் உணவு என்பதாக உருமாறி நாடகம் நிறைவுறுகிறது. பேரா. சே. இராமானுஜம் அவர்களின் வெறியாட்டம் ஈழத்துப் போர்ச் சூழலோடு இணைத்துப் பார்க்கப்பட்டது போலவே, தீனிப்போரும் பார்க்கப்பட்டது.

1993ஆம் ஆண்டு ஏகலைவன் நாடகத்தை நெறியாள்கை செய்தார் பத்தண்ணா. மகாபாரதக் கதையில் குருபக்தியை வலியுறுத்தச் சொல்லப்பட்ட ஏகலைவன் கதையின் மறுவாசிப்பு இந்நாடகம். தெருக்கூத்தின் ஒப்பனையை இந்நாடகத்தில் இடம்பெற்ற பாண்டவர்கள் பாத்திரங்களுக்குப் பயன்படுத்தினார் பத்தண்ணா.

மற்ற நாடகங்களைப் போலவே இதுவும் ஆடல், பாடல் சார்ந்தே உருவாக்கப்பட்டது. போர்ப்பயிற்சி பெற்ற அரசர்களைக் காட்டிலும் வில்வித்தையில் சிறந்திருந்த வேடன் ஏகலைவனின் ஆற்றலைப் பொறுக்காத அரச குலம், சூழ்ச்சியால் அவனது திறமைகளை அழிக்கும் அரசியலைப் பேசுகிறது இந்நாடகம். ஆற்றல் சுரண்டல்கள் இருக்கும் வரை ஏகலைவனின் தந்தையைப் போன்றோரின் கேள்விக் குரல்கள் ஒலிக்கத்தான் வேண்டும்.

**கோ. பழனி:**
1989ஆம் ஆண்டு தொடக்கம் பல்கலை அரங்கில் செயல்படத் தொடங்கிய கோ. பழனி நடிகராக, இசைஞராக, நெறியாளுனராக தமிழ் நாடக வெளியில் இயங்கிக் கொண்டிருப்பவர். டிசம்பர் – 6 (வீதி நாடகம் – 1993), பாஞ்சாலி (1995), தடி (1998) ஆகிய நாடகங்களை பல்கலை அரங்கின் வாயிலாகவும் அந்நியர்கள் (1999), கத்திரிக்கா ராஜா (2004), விளக்குகள் (2005) ஆகிய சிறார் நாடகங்களையும் ஒத்திகை (தஞ்சாவூர்) நாடகக் குழுவின் வழி சாம்பான், ஒத்தல்லோ (2000 – 2001) ஆகிய நாடகங்களையும் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத் துறையின் முகங்கள் நாடகக் குழுவின் வழி வியூகம் (2014), ஒரு ஊர்ல…!? (2016) ஆகிய நாடகங்களையும் நெறியாள்கை செய்துள்ளார். பயிற்சிப் பட்டறைகள் (பள்ளி ஆசிரியர்கள், மாணவர்கள், சீர்திருத்தப் பள்ளி சிறார்கள்), நாடக ஆய்வுகள் என்று தமிழ் நாடக வெளியில் இயங்குபவர்.

மதச் சார்பற்ற நாடான இந்தியாவில் 1992ஆம் ஆண்டு பாபர் மசூதி இடிக்கப்பட்டது. விக்கிரமாதித்தனிடம் வேதாளம் கேள்வி எழுப்பும் கதையம்சத்தை எடுத்துக்கொண்டு மசூதி இடிக்கப்பட்டது சரியா? தவறா? என்று விவாதித்தது டிசம்பர்-6. மதத்தின் பெயரால் நடக்கும் கலவரங்கள் இன்றைக்கும் தொடர்ந்துகொண்டுதான் இருக்கின்றன.

*மனிதநேயம் மிக்கவர்கள் இத்தகைய போக்குகளுக்கு எதிராக ஒன்றிணைந்து செயலாற்ற வேண்டிய கடமையை இந்நாடகம் வலியுறுத்துகிறது.*

*தடி, சாம்பான் ஆகிய நாடகங்கள் சாதிய ஒடுக்குமுறைகளுக்கு எதிரான குரலை எழுப்பியவை. தடி, சுடுகாட்டில் பிணம் எரிக்கும் தொழிலைச் செய்பவரின் பின்புலம் சார்ந்தது. சாம்பான், 'குடித்தொழிலாக பறையடிக்க முடியாது' என்று மறுத்த தஞ்சைப் பகுதியைச் சார்ந்த குருமூர்த்தி என்பவரின் வலதுகைக் கட்டைவிரல் வெட்டப்பட்டதை அடிப்படையாகக் கொண்டது. சாம்பான் நாடகத்தை இந்தியாவின் வீதிநாடக பிதாமகன் என்று அறியப்பட்ட பாதல் சர்க்கார் அவர்கள் பார்த்து, மகிழ்ந்து பாராட்டினார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.*

*ஷேக்ஸ்பியரின் நாடகத்தைத் தழுவி உருவாக்கப்பட்ட நாடகம் ஒத்தல்லோ. இந்நாடகத்தில் வரும் பாத்திரங்களின் பண்புகளுக்கு ஏற்ப, விலங்குகளின் முகங்கள் தலைக்கிரீடங்களாக அணிவிக்கப்பட்டன. விக்டோரியன் அரங்கைப் போன்றே பிரம்மாண்டமான தூண்களும் கேடயங்களும் பயன்படுத்தப்பட்டன. ஒத்தல்லோ, ஒடுக்கப்பட்ட சமூகத்தின் குறியீடாக இந்நாடகத்தில் உருவகிக்கப்பட்டான்.*

*பாஞ்சாலி மராட்டி மொழி நாடகப் பனுவலைத் தழுவி தமிழில் நிகழ்த்தப்பட்ட நாடகம். இந்நாடகத்திற்கான நிதி உதவியை தில்லி 'கதா' அமைப்பு வழங்கியது. இந்நாடகம் மகாபாரதக் கதையில் வரும் திரௌபதை பாத்திரத்தை மறுவாசிப்பு செய்து, மராட்டியில் எழுதப்பட்டிருந்தாலும் தமிழ் அடையாளம் சார்ந்த ஆடல், பாடலை உள்வாங்கி பெண்ணிய அரசியலை முன்வைத்து நிகழ்த்தப்பட்டது. இந்நாடகத்தை விமர்சனம் செய்த 'தி இந்து' ஆங்கில நாளிதழ், Colour Full Faces என்று பாராட்டி இருந்தது.*

*பூர்வகுடி மக்களை, மண்ணிற்கு அந்நியமான மாற்றார்கள் – ஆள்பவர்களை வளைத்துப்போட்டு – எவ்வாறெல்லாம் அழித்தொழித்து, வளங்களையும் வனங்களையும் அபகரித்துச் செல்கிறார்கள் என்பதை எடுத்துக்காட்டும் நாடகம் வியூகம்.*

*காடுகள் அழித்தொழிப்பு*
*கனிம வளங்கள் அழித்தொழிப்பு*
*காற்று அழித்தொழிப்பு*
*நீர் வளங்கள் அழித்தொழிப்பு*
*மலைகள், மனித இனங்கள் அழித்தொழிப்பு*
*அழித்தொழிப்புகள் தொடர்கின்றன. மனிதரைத் தவிர வேறு எந்த உயிரியும் அழித்தொழிப்புகளில் ஈடுபடுவதில்லை. மனிதருள் எவர் இவ்வகைச்செயல்களில் ஈடுபடுகின்றனர்? யாருக்காக?*

*அறிவியல் வளர்ச்சி, தொழில்நுட்ப வளர்ச்சி, நகர வளர்ச்சி, நாகரீக வளர்ச்சி... என்பன போன்றவை எல்லாம் யாருக்கானவை? யாரை நோக்கியவை? இயற்கை வளங்கள் மனித இனத்தால் தம்வயப்படுத்திக் கொள்ளப்பட்ட காலம்தொடங்கி, மாபெரும் அழிவுகளைச் சந்தித்த காலம் என்பது இம்மாதிரியான 'வளர்ச்சி' ஏற்பட்ட காலத்தில்தான்.*

*அத்தியாவசிய தேவைகளுக்காக மனிதர்கள், இயற்கையை வளைத்துக் கொண்டது போய், அதி உற்பத்திக்காக வியூகங்கள் தீட்டி, தங்கள் 'விஸ்வரூப'க்கைகளை விரித்துச் சுருட்டிய – ஆக்கிரமித்த இயற்கை வளங்கள் எத்தனை எத்தனை?! வளர்ச்சி என்ற பெயரில் மண்ணையும் மலையையும் காட்டையும் கடலையும் அவற்றை நம்பியே வாழ்ந்து கொண்டிருக்கின்ற உயிரிகளையும் இராட்சத எந்திரங்களால் அழித்து மனித உடல்கள்மீது ஆலைகளைக் கட்டிக்கொண்டிருக்கின்றனர் இந்த வியூக'மனிதர்கள்' என்பதை உரத்துப் பேசிய நாடகம் இது.*

*இலாப நோக்கத்திற்காக மட்டுமே மண்ணின் நலனையும் மைந்தர்களின் நலன்களையும் கிஞ்சித்தும் அக்கறை கொள்ளாது அந்நிய முதலீடுகளை ஈர்க்கும் ஆட்சியாளர்களின் தான்தோன்றித்தனம் உள்ளவரை இதுபோன்ற நாடகங்கள் அவசியமாகின்றன.*

*சிறார்கள், நாட்டின் வருங்காலத் தூண்கள். அவர்களது உலகம் கற்பனை ஆற்றலும் படைப்பாளுமையும் மிக்கது. எதிர்க்க வலுவற்ற இந்தப் பிஞ்சுகள் பெரியோர்களால் பல்வேறு வதைகளுக்கு ஆளாக்கப்படுகின்றனர். இவற்றை முன்வைத்து நகர்கிறது ஒரு ஊர்ல…!?*

*சிறார்கள் ஆடிப்பாடி, ஓடி, மண்ணில் உருண்டு புரண்டு, கதை கேட்டு, கதை பேசி, சண்டையிட்டு, சுவற்றில் வரைந்து, பொம்மைகள் செய்து, விளையாடி, கூச்சலிட்டு கொண்டாட்டத்தோடும் குதூகலத்தோடும் நேரம் மறந்து, பெரிய புத்தி மனிதர் இல்லாத வனங்களில் பறவைகளோடு பறவைகளாய், மரங்களோடு மரங்களாய், செடிகளோடு செடிகளாய் வாழ ஆசை கொள்கின்றனர்.*

*ஆனால் ஒழுக்கம், நீதி, அறம், மரியாதை, சரி, தப்பு என்று எத்தனையோ நெறிகளை பெரியோர்கள் குழந்தைகளுக்காகவே உருவாக்கி வைத்திருப்பது போல் தோன்றுகிறது. வயதிற்கேற்ப சிறார்களை வாழ அனுமதியுங்கள். ஆண் – பெண் வேறுபாடுகள், சாதி மத பேதங்கள், ஏழை – பணக்காரன், வேலைச்சுமை, முதல் மதிப்பெண் என்று எந்த விஷ விதைகளையும் அவர்கள் நெஞ்சில் விதைக்காமல் குழந்தைகளாகவே கொஞ்ச காலமாவது, படைப்பு உலகத்தோடு வாழ வழிவிடுங்கள் பெரியோர்களே! என்பதை அழுத்தமாகச் சொல்கிறது இந்நாடகம்.*

*தமிழ் நாடக வெளிக்கு பல்வேறு நவீன நாடகப் பனுவல்களை வழங்கியவர்களுள் குறிப்பிடத்தக்கவர் ந. முத்துசாமி. இவரது பனுவல்கள் பலராலும் ஆற்றுகைக்கு உட்படுத்தப்பட்டிருக்கின்றன. இந்திரா பார்த்தசாரதி, பரிக்ஷா ஞாநி, கே. ஏ. குணசேகரன், பிரளயன், இரா. ராஜு, அ. மங்கை, அ. ராமசாமி, கருஞ்சுழி ஆறுமுகம், கே. எஸ். இராஜேந்திரன், ஆடுகளம் ராமாநுஜம், வெளி ரெங்கராஜன், கருணா பிரசாத், முருகபூபதி, வேலு சரவணன், பார்த்திபராஜா… எனப் பலரும் தமிழ் நாடக வெளியில் காத்திரமாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றனர். இக்கட்டுரையின் எல்லை கருதி முதலிலேயே குறிப்பிட்டது போல, என் அனுபவம் சார்ந்து சில நவீன நாடகக்காரர்கள், அவர்களின் நாடக உருவாக்கம், எனது நாடக உருவாக்கம், அவற்றின் உள்ளீடுகள் ஆகியன பற்றி இங்கு விவரித்துள்ளேன். விரிவாகப் பதிவாக்க வேறொரு களம் காத்திருக்கிறது. அதில் சந்திக்கலாம்.*

**துணை நின்ற நூல்கள்:**

*அண்ணாமலை சி., நாடகம் பதிவும் பார்வையும், காவ்யா, சென்னை, 2003.*
*இராமசுவாமி மு., தமிழ் நாடகம் நேற்று இன்று நாளை, ருத்ரா. தஞ்சாவூர், 1998.*
*———, 'சாபம், விமோசனம்?' ருத்ரா பதிப்பகம், தஞ்சாவூர். 2000.*
*——— (பதி)., இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, 1999.*
*இராமானுஜம் சே., 'மௌனக்குறம்' சவுத் ஏசியன் புக்ஸ், சென்னை, 1996.*
*குணசேகரன் கே. ஏ., இன்றைய தமிழ் நாடகச் சூழல், தன்னானே, பாண்டிச்சேரி, 1999.*
*————-., கே. ஏ. குணசேகரன் நாடகங்கள், என். சி. பி. எச்., சென்னை, 2004.*
*பகவதி கு., (பதி) தமிழ் நாடகம் – நேற்றும் இன்றும், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, 2000.*
*பழனி கோ., வியூகம், கனலி பதிப்பகம், சென்னை, 2015.*
*மங்கை அ., பெண்-அரங்கம்- தமிழ்ச்சூழல், ஸ்நேகா, சென்னை, 2001.*

# 23. தோல்பாவை கூத்து

— *முனைவர்.க.சுபாஷிணி*




*தோல்பாவை கூத்து தமிழகத்தின் பாரம்பரியக் கூத்துக் கலைகளில் ஒன்று. இந்தியாவின் பல இடங்களில் இக்கலை வழக்கில் இருக்கின்றது. இந்தியா தவிர்த்து கிழக்காசிய நாடுகளான மலேசியா, இந்தோனீசியா, தாய்லாந்து ஆகிய நாடுகளிலும் கூத்துக் கலை இன்றும் மக்களின் பண்பாட்டுக் கூறுகளில் கலந்து போன முக்கிய கலையாகவும் பெரும்பாலான பண்பாட்டு விழாக்களில் இடம்பெறுகின்ற நிகழ்வுகளையும் காண்கின்றோம். இப்படி ஆசிய நாடுகளில் பல இடங்களில் வழக்கில் இருக்கும் தோல்பாவை கூத்து எனும் இக்கலை எவ்வாறு தமிழகக் கலைகளில் ஒன்றாகத் திகழ்கின்றது என்பதை ஆராய வேண்டிய அவசியம் உள்ளது. இக்கலையைப் பற்றிய நீண்ட கால ஆய்வுகளைச் செய்தவரும், தமிழக நாட்டார் வழக்காற்றியல் துறை ஆய்வாளரும், அறிஞர் அண்ணா கல்லூரி தமிழ்த்துறையில் பேராசிரியராகப் பணியாற்றி ஓய்வுபெற்றவருமான முனைவர்.அ.கா.பெருமாள் அவர்களோடு உரையாடி தோல்பாவை தொடர்பான செய்திகளைத் தமிழ் மரபு அறக்கட்டளை பதிவிற்காக கடந்த 2017ம் ஆண்டு நவம்பர் மாத வாக்கில் சென்றிருந்தேன். அச்சந்திப்பில் செய்யப்பட்ட பதிவுகள் விழியப் பதிவுகளாக டிசம்பர் மாத மண்ணின் குரல் வெளியீடுகளாக இரண்டு பாகங்களாக வெளியிடப்பட்டன.*

*பகுதி 1- https://youtu.be/7RWy9M70B2g*
*முனைவர்.அ.கா.பெருமாள் அவர்களுடனான பேட்டி*

*பகுதி 2 - https://youtu.be/XmqcsZ9BiNo*
*ஒரு தோற்பாவைக்கூத்துக் கலைஞரின் வாழ்க்கை*

*தமிழக நாட்டார் வழக்காற்றியல் துறை ஆய்வுகளில் தவிர்க்க முடியாத பெயர் முனைவர் அ.க.பெருமாள். 75 நூல்கள், இருநூற்றுக்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகள், விரிவான நீண்ட கால கள ஆய்வுப் பணி அனுபவங்கள் எனத் தொடர்ச்சியாக நாட்டார் வழக்காற்றியல் துறையில் இவரது பங்களிப்பு அமைந்திருக்கின்றது. இவரது களப்பணிகளின் பயனாக இவரால் எழுதப்பட்டு வெளியிடப்பட்டுள்ள நூல்களும் கலைக்களஞ்சியங்களும் இத்துறையில் ஆய்வு செய்ய விரும்பும் ஒவ்வொரு ஆய்வு மாணவருக்கும் மிகப் பயனுள்ள ஆவணமாக அமைகின்றன. அத்தகை நூல்களில்*

*தோல்பாவை கூத்து தொடர்பான ஆய்வுகளை முன்னிறுத்தி தனது களப்பணி அனுபவங்களின் வழி திரட்டிய செய்திகளைத் தொகுத்து தென்னிந்தியாவில் தோல்பாவைக் கூத்து எனும் நூலினை இவர் எழுதியுள்ளார். காவ்யா பதிப்பகத்தின் வெளியீடாக இந்த நூல் வெளிவந்துள்ளது.*

*தென்னிந்தியாவைப் பொறுத்தவரை கர்நாடகா, ஆந்திரா, ஒடிசா, தமிழகம் ஆகிய பகுதிகளில் நீண்ட காலமாக இக்கலை இருந்துள்ளது என்பதை அறிகின்றோம். தமிழகத்தை எடுத்துக் கொண்டால் தோல்பாவை கூத்து தஞ்சாவூர், நாகர் கோயில் ஆகிய பகுதிகளில் பெருவாரியாக மக்கள் கலையாக இருந்தது என்பதை அறிய முடிகின்றது. ஆனால் இன்றோ தமிழகத்தில் மிக அருகிப்போய்க்கொண்டிருக்கும் கலைகளில் ஒன்றாக இக்கலை மாறி வருகின்றது.*

*தோல்பாவை கூத்தில் இடம்பெறும் உருவ பொம்மைகள் ஆட்டுத் தோலினால் உருவாக்கப்படுகின்றன. மாட்டுத்தோல் விளக்கின் ஒளி ஊடுருவிச் செல்ல உதவாது என்பதால் ஆட்டுத்தோல் பயன்பாடுதான் இவ்வுருவ பொம்மைகளைச் செய்ய ஏதுவானதாக அமைகின்றன. ஆரம்பக்காலத்தில் மான்தோலையும் இவ்வுருவ பொம்மைகளைத் தயாரிக்கப் பயன்படுத்தியிருக்கின்றார்கள். இன்று பதப்படுத்தப்பட்ட ஆட்டுத்தோல் கடைகளில் எளிதாகக் கிடைப்பதால் புதிய தோல்பாவை பொம்மைகளை உருவாக்குவது என்பது சற்று எளிமைப்படுத்தப்பட்டுள்ளது.*

*தோல்பாவைக்கூத்தில் முக்கிய கதைக்களமாக எடுத்தாளப்படும் கதைகள் இந்திய நாட்டில் பெருவாரியாக அறியப்பட்ட ராமாயண, மகாபாரதக் கதைகளே. இவற்றோடு இன்று சமூக சூழலை மையப்படுத்தி மக்களுக்குத் தேவையான கருத்துக்களை எடுத்துச் செல்லும் சாதனமாகவும் தோல்பாவைக் கூத்துக் கலையைக் காண்கின்றோம். இத்தகைய புதிய கருத்தாக்கங்களை வழங்கி நாகர்கோயில் பகுதியில் தோல்பாவைக் கூத்துக் கலைஞர்களை ஊக்குவித்து வரும் முனைவர் அ.க. பெருமாள் அவர்களின் பங்கு தமிழர் பண்பாட்டு ஆய்வுப் பாதையில் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.*

*தோல்பாவைக் கூத்துக் கலையைத் தமிழகத்தின் நாகர் கோயில் பகுதியில் தொழிலாகச் செய்து வரும் கலைஞர் ஒருவரையும் எனது அப்பயணத்தில் சந்தித்து உரையாடும் வாய்ப்பு கிட்டியது.*

*பரம்பரை பரம்பரையாக ஏழாவது தலைமுறையாக இந்தக் கலையைத் தொழிலாக மேற்கொண்டு வருகின்றார் இக்கலைஞர். மராட்டிய பின்புலத்தைக் கொண்ட இவர்களது குடும்பத்தார், சரபோஜி மன்னர் காலத்தில் தமிழக நிலப்பகுதிக்கு வந்து வாழ்ந்து வரும் கணிகர் சமூகத்தில் உள்ள 12 பிரிவுகளில் ஒரு பிரிவினைச் சார்ந்தவர்கள்.*

*இவரது தோல்பாவை கூத்து பாணியில் ராமாயண கதைகளே முக்கியக் கதைக்களமாக அமைகின்றன. ராமாயணத்தில் உள்ள நகைச்சுவை கதைகளை எளியச் சொற்களில் பாடல்களாக்கி தங்கள் கூத்து நிகழ்ச்சிகளில் பாடுகின்றனர். இன்றைய காலச் சூழலில் மக்களின் இரசனைப்போக்கிற்கு ஏற்றவகையில் திரைப்படத் துறைகளில் பிரபலமான சில பாடல்களையும் தமது பாடல்களில் இணைத்துக் கொள்கின்றனர்.*

*சமகால சமூக நலன் தொடர்பான கருத்தாக்கங்களை உட்புகுத்தி புதிய வடிவங்களில் தோல்பாவை கூத்து நடத்துவதும் இன்று வழக்கில் வந்துள்ளது.*
*''பா கூத்து'' என்று அடிப்படையில் வழக்கில் இருந்து பின்னர் தோல் பொம்மைகள் உட்புகுத்தப்பட்ட பின்னர் ''தோல்பாவை கூத்து'' எனப் பரிமாணம் பெறுகின்றது இக்கலை.*

*ஆய்வாளர் முனைவர்.அ.க.பெருமாள் அவர்களின் வழிகாட்டுதலில் புதுமையான முயற்சிகளையும் உட்புகுத்தி புதிய கதை வடிவங்களை தமது தோல்பாவைக்கூத்து நிகழ்ச்சிகளில் நடத்திக் கொண்டிருக்கின்றார்.*
*சமூக விழிப்புணர்வு சார்ந்த கருத்துக்களை மக்கள் மத்தியில் கொண்டு சேர்க்கும் வகையிலும் இன்று தோல்பாவை கூத்துக் கலை தொடர்கின்றது.*

*இக்கலைஞர்களில் பெரும்பாலோர் பொருளாதார ரீதியாக பெரும் சிரமத்திற்குள் வாழும் நிலையே தொடர்கின்றது. கால ஓட்டத்தில் தோல்பாவை கூத்துக் கலைஞர்களின் எண்ணிக்கை குறைந்து வருகின்றது. எட்டாவது தலைமுறையான இக்கலைஞரின் மகனது காலத்திலேயே இக்கலையைத் தொழிலாக ஏற்கும் வழக்கம் இல்லாது போய்விட்ட நிலை தான் கண்கூடு.*

*குடும்பக் கலையாக இத்தகைய கலைகள் தொடர்வது என்பது இக்காலச் சூழலில் பொருந்தாது. குலக்கல்வி என்பது ஒரு சாரரை தனித்து ஒதுக்கி சமூக ரீதியாகவும் பொருளாதார ரீதியாகவும் மக்களைப் பின்தங்கச்செய்யும் அபாயம் இருக்கின்றது என்பதை உணரவேண்டியதும் அவசியமாகின்றது. தோல்பாவை கூத்து போன்ற மக்கள் கலைகள் மீட்கப்பட வேண்டுமென்றால் அவற்றிற்குத் தகுந்த சமூக அங்கீகாரம் என்பது கிடைக்க வேண்டும். பள்ளிக்கூடங்களிலும், கலைக் கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் இக்கலை ஒரு பாடமாக அமைக்கப்பட வேண்டும். மக்கள் மனதிலிருந்து படிப்படியாக மறையும் இவ்வகைக் கலைகளை மீட்டெடுக்க இதுவே ஆக்கப்பூர்வமான ஒரு வழியாக அமையும்.*

*தொடர்பு: முனைவர் க.சுபாஷிணி (ksubashini@gmail.com)*

## 24. முகங்களின் ‘ஒரு ஊர்ல…!?’ நாடகப்பதிவு

— *கோ. பழனி*



*வண்ணங்கள் குழைத்து*
*வானில் ‘வில்’ தீட்ட எத்தனிக்கிறோம்*
*எங்கள் கைகள் முடக்கப்படுகின்றன.*

*குதித்து குதித்து குதித்து*
*எல்லைத் தாண்டி பறக்க*
*முயல்கிறோம் – எங்கள்*
*கால்கள் தறிக்கப்படுகின்றன.*

*‘ஓ’ வென்று ஓசையிட்டு வீதிதொரும்*
*ஓட்டமெடுக்கும் எங்களுக்கு*
*‘இந்த சனியனுங்க ஏன் இப்படிக் கத்துதுங்க…..!?’*
*என்கிற எதிர்க்குரல்கள்*
*கடிவாளங்கள் இடுகின்றன.*

*ஏன் இப்படி? ஆடிப்பாடி, ஓடி, மண்ணில் உருண்டு புரண்டு, கதை கேட்டு, கதை பேசி, சண்டையிட்டு, சுவற்றில் வரைந்து, பொம்மைகள் செய்து விளையாடி, கூச்சலிட்டு கொண்டாட்டத்தோடும் குதூகலத்தோடும் நேரம் மறந்து, பெரிய புத்தி மனிதர் இல்லாத*

*வனங்களில் பறவைகளோடு பறவைகளாய், மரங்களோடு மரங்களாய், செடிகளோடு செடிகளாய் எங்கள் உலகில் வாழ ஆசை.*

*“இந்தப் போட்டி உலகத்தில் நீ எப்படித்தான் பொழைக்கப் போறீயோ?”*

*என்று சொல்லும் பெரியவங்களுக்கு, ‘நீங்களும் எங்களைப்போல இருந்து, சில காலம் கழித்த பிறகு தானே, இந்தப் போட்டி உலகத்துல வாழுறீங்க? அந்த வயதில், இப்போது எங்களுக்கான ஏக்கங்களை நீங்களும் அடைந்திருப்பீர்கள் தானே!’ இப்படிப் பேசிவிட்டால், ‘என்ன அதிகப்பிரசங்கித்தனமா பேசுறே! வயசுக்கு ஏத்தமாதிரி பேசு’ என்கிற அதட்டல் குரலோ, குட்டலோ, அடியோ எங்களை அடக்குகிறது.*

*ஒழுக்கம், நீதி, அறம், மரியாதை, சரி, தப்பு என்று எத்தனையோ நெறிகளை நீங்கள் எங்களுக்காகவே உருவாக்கி வைத்திருப்பது போல் தோன்றுகிறது. ‘வளர்ந்துவிட்டால் எல்லோரும் இப்படி ஆகிப்போகிறார்களே…! நாங்களும் சில காலத்திற்குப் பிறகு உங்களைப் போலவே ஆகிப்போவோமோ!’ என்கிற அச்சம் எங்களுக்கு மேலெழுகிறது.*

*‘வேண்டவே வேண்டாம்… இப்படியே இருந்துவிடலாம்’*

*என்பது போன்ற எண்ணம் எங்களுக்கு எழுகிறது. அது சாத்தியமில்லை தான்.*

*எங்கள் வயதிற்கேற்ப எங்களை வாழ அனுமதியுங்கள். ஆண் – பெண் வேறுபாடுகள், சாதி – மத பேதங்கள், ஏழை – பணக்காரன், வேலைச்சுமை, முதல் மதிப்பெண் என்று எந்த விஷ விதைகளையும் எங்கள் நெஞ்சில் விதைக்காதீர்கள்.*

*‘எனக்குக் கிடைக்காத அனைத்தையும் என் பிள்ளைகளுக்குக் கிடைக்கச் செய்ய வேண்டும்’ என்கிற உங்களது உயரிய எண்ணத்தில் தயைகூர்ந்து எங்களது குதூகலமான, கொண்டாட்டமான, சுதந்திரமான உலகத்தையும் சேர்த்துக்கொள்ளுங்கள்… நாங்கள் நாங்களாகக் கொஞ்ச காலமாவது, எங்கள் உலகத்தோடு வாழ வழிவிடுங்கள்.*

*ஒரு ஊர்ல…!? சிறார்களின் மேற்கண்ட எண்ணங்களை, ஆதங்கங்களை, வேண்டுகோள்களை முன் வைத்து நகர்கின்றது. சிறார்களின் உள்வெளியில் பொதிந்து கிடக்கும் படைப்புலகம் பெரியோர்களால் (அறிந்தோ அறியாமலோ) நிராகரிக்கப்படுவதையும் அவர்களின் அத்துமீறிய செயல்களால் சிறார்கள் சிதைவுறுவதையும் சித்திரிக்கிறது ஒரு ஊர்ல…!?*

## 25. ஆணுக்குள் இருக்கும் பெண்!

— முனைவர் க. சுபாஷிணி

தமிழகத்தில் பல்வேறு வகையான நிகழ்த்துக் கலைகள் நிகழ்த்தப்படுகின்றன. அதில் தொண்டை மண்டலத்தில் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுபவை தெருக்கூத்து, நால்வகைக் கூத்துக்கள், மேடை நாடகங்கள் உள்ளிட்ட நிகழ்த்துக் கலைகளாகும். இந்தக் கலைகளில் தேர்ச்சி பெற்ற பாரம்பரியக் கலைஞர்கள் மற்றும் அதன் ஆசிரியர்கள் ஆயிரக்கணக்கில் தொண்டை மண்டல கிராமங்களில் இன்றும் வாழ்ந்து வருகின்றனர். வெகுஜன ஊடகங்களின் அங்கீகாரம் அவர்களுக்கு ஒருபோதும் கிடைப்பதில்லை. ஆனால், இந்த வெகுஜன ஊடகங்களின் அங்கீகாரத்தைப் பற்றியோ, புறக்கணிப்பு போன்ற கேடுகளைப் பற்றியோ இந்தக் கலைஞர்கள் கவலைப்படுவதில்லை; அவர்கள் அதைப் பொருட்படுத்துவதும் இல்லை.



ஒருநாள் தொடங்கி நாள் முடிகின்ற வரையில் ஒவ்வொரு நொடியும் அவர்கள் அசலான கலைஞர்களாக தமது வாழ்வை வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். எழுத்தாளர் டால்ஸ்டாய் சொல்வது போல, வாழ்க்கையின் ஒவ்வோர் அசைவிலும் கலை அம்சங்கள்

பொதிந்துள்ளன, வெளிப்படுகின்றன என்பதின் அசலான சான்றுகள் இந்தக் கலைஞர்கள். இவர்களது அன்றாட வாழ்க்கை பெரும் பொருளாதாரப் போராட்டத்துக்கு இடையிலேயும் உடல்நலக் கேடுகளுக்கு இடையிலேயும் சிக்கிக்கொண்டிருந்தாலும், இவர்கள் தமது கலை வாழ்க்கையை விடாப்பிடியாக பிடித்துப் பயணிக்கிறார்கள். கடினமான சூழ்நிலையில் அவர்கள் இருந்தாலும் அரிதாரத்தைப் பூசிக்கொண்ட அடுத்த நொடியில் தமது வாழ்வின் துன்பங்களை மறந்து கலைப் பணியில் தம்மை ஐக்கியப்படுத்திக் கொள்கிறார்கள்.

தமிழகத்தின் தொண்டை மண்டலத்தில் நிகழ்த்தப்படும் நாடகக் கலைகளின் கதைகளிலிருந்து நவீன நாடக உலகம் இன்றைக்கு உருவாகியிருக்கிறது. இந்த அடிப்படை அம்சத்தை வளர்த்தெடுக்கும் நோக்கில் உருவாக்கப்பட்ட அமைப்புதான் நாளந்தா கலை பண்பாட்டு இயக்கம். இதனைச் சில ஆண்டுகளுக்கு முன்னர் நிறுவியவர் டாக்டர் அமைதி அரசு. தமிழ் நவீன நாடக உலகில் மிக முன்னோடியான கலைஞராகவும் நாடக ஆசிரியராகவும் விளங்கிவருபவர். இவர் தற்போது கோவையில் கல்லூரி ஒன்றில் தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிகிறார். இவருடைய முன்முயற்சியில் நாளந்தா கலை பண்பாட்டு நிறுவனம் ஆய்வு மற்றும் நவீன நாடகக் கலையை வளர்த்தெடுக்கும் ஒரு நிறுவனமாக வளர்ச்சி கண்டுள்ளது.



இந்த அமைப்பின் தலைமையகம் திருவண்ணாமலை மாவட்டம் ஆரணி நகரில் அமைக்கப்பட்டுள்ளது. இந்த அமைப்பை டாக்டர் அமைதி அரசு, டாக்டர் பழனி கூத்தன், எழுத்தாளர் கௌதம சன்னா, ஆசிரியர் புருஷோத்தமன், செல்வம், திருப்பதி உள்ளிட்டோர் ஒருங்கிணைத்துத் தொடங்கியிருக்கின்றனர். கலைஞர்களைப் பற்றிய பேட்டிகள், நாடகப் பயிற்சிகள், ஆய்வுகள், பயிலரங்கங்கள் என ஏராளமான கலைச்சேவைகளை இக்குழு கடந்த சில ஆண்டுகளுக்கு முன்னர் மிகுந்த ஆர்வத்துடன் நிகழ்த்தியிருந்தாலும் இடையில் ஏற்பட்ட தொய்வுக்குப் பின்னர் மீண்டும் புத்துணர்ச்சியுடன் தமது கலை சார்ந்த நடவடிக்கைகளைத் தொடங்கியிருக்கிறது.

ஆரணியில் உள்ள நாளந்தா கலை பண்பாட்டு அமைப்பின் தலைமையகத்தை 10.11.2018 அன்று மாலை எழுத்தாளர் கௌதம சன்னா திறந்துவைத்தார். இத்திறப்பு விழாவுக்குப் பிறகு இந்த அமைப்பின் சார்பில் தெருக்கூத்துக் கலையில் பெண் பாத்திரம் குறித்த கருத்தரங்கம் மற்றும் கலந்துரையாடல் நடைபெற்றது. "தமிழ் நாடகத்தில் பெண் புனைவு - அழகியலும் உடல் அரசியலும்" என்ற பொருளில் அமைந்த இந்த நிகழ்ச்சிக்குத் தலைமை ஏற்றவர் டாக்டர் அமைதி அரசு. சிறப்பு வருகை புரிந்தவர் சர்வதேச தமிழ் மரபு அறக்கட்டளையின் தலைவர் டாக்டர்.க. சுபாஷிணி மற்றும் பேராசிரியர் பிரியதர்ஷினி ஆகியோர். சிறப்பு அழைப்பாளர்களாக எழுத்தாளர் கௌதம சன்னா, திரைப்பட இயக்குநர் கோபி நயினார், அலெக்ஸாண்டர் ஆகியோர் சிறப்புரையாற்றினர். பேராசிரியர்கள், ஆசிரியர்கள், நாடகக் கலைஞர்கள், ஆர்வலர்கள் ஆகியோர் இந்த நிகழ்ச்சியில் கலந்துகொண்டனர். நிகழ்ச்சியின் சிறப்பம்சமாகத் தேர்வு செய்யப்பட்ட ஐந்து தெருக்கூத்துக் கலைஞர்களுக்கு வாழ்நாள் சாதனையாளர் விருது வழங்கப்பட்டது. இந்த விருதுகளை சுபாஷிணி, கௌதம சன்னா, தமிழ்த்திரைப்பட இயக்குநர் கோபி நயினார் ஆகியோர் வழங்கினர்.



*நிகழ்ச்சியில் கலந்துரையாட வந்த தெருக்கூத்து பெண் பாத்திரம் ஏற்கும் கலைஞர்கள் மேடையில் அமர வைக்கப்பட்டு அவர்களிடம் கேள்விகள் தொடுக்கப்பட்டன. அக்கேள்விகள் அனைத்தும் அவர்கள் பின்பு பெண் பாத்திரத்தை ஏற்கும்போது உருவாகின்ற உளவியல் மாற்றங்களை மையப்படுத்தி இருந்தன. இந்தக் கேள்விகளுக்கு அவர்கள் ஒப்பனை இன்றி பதில் சொல்ல வேண்டும் என்பது முன் நிபந்தனை. இதற்குப் பதில் சொல்லும்போது அவர்கள் மிகுந்த தடுமாற்றத்திற்கு ஆளானார்கள். சில கலைஞர்கள் பேச முடியாமல் இறுக்கமாக இருந்தார்கள். பேசியவர்களும் ஒரு சில வார்த்தைகளோடு முடித்துக்கொண்டார்கள். அவர்களின் கருத்துக்களைத் தொகுத்தும் பெண் புனைவு பற்றிய தமது ஆய்வுகள் பற்றிய செய்திகளை வழங்கியும் டாக்டர் அமைதி அரசு சுருக்கமான உரை நிகழ்த்தி அந்த அமர்வை நிறைவு செய்தார்.*

*பிறகு அரை மணி நேரம் நாடக கலைஞர்களுக்கு அரிதாரம் அல்லது ஒப்பனை செய்துகொள்வதற்கான அவகாசம் கொடுக்கப்பட்டது. அவகாசம் முடிந்த பிறகு முழுமையான பெண் ஒப்பனையோடு கலைஞர்கள் மேடையேறி கருத்தரங்கை இன்ப அதிர்ச்சிக்கு ஆளாக்கினார்கள். சாதாரண ஆண்களாகத் தோற்றம் அளித்தவர்கள் அரை மணி நேரத்தில் முழு பெண்களாக தோற்றத்திலும் உடை அலங்காரத்திலும் மாறி மேடையில் வந்து அமர்ந்தார்கள். அப்போது அவர்களிடம் கேள்வி கேட்பதற்கான வாய்ப்பு பேராளர்களுக்கும் பார்வையாளர்களுக்கும் வழங்கப்பட்டது.*

*'ஒப்பனை செய்கின்றபொழுது எப்படி மனத்தைத் தயார் படுத்திக் கொள்கின்றீர்கள்? அதாவது ஆணாக இருந்து பெண்ணாக மாறுகின்ற அந்த இடைப்பட்ட நேரத்தை எப்படி உணர்கிறீர்கள்?' என்று டாக்டர் சுபாஷிணி கேட்டார்.*

*ஒப்பனைக்கு முன்பு அமைதியாக இருந்த கலைஞர்கள் இப்போது மிகுந்த மகிழ்ச்சியுடன் மடை திறந்த வெள்ளம் போல் சரளமாகப் பேசத் தொடங்கினர். ஒப்பனை செய்துகொண்டிருந்த அந்த நேரத்தை மிகுந்த மகிழ்ச்சியுடன் அனுபவித்ததாகக் குறிப்பிட்டார்கள். பெண் தோற்றத்தில் கூடுதல் தைரியம் ஏற்படுவதாகவும், தாங்கள் மிக இயல்பாக தங்களை மக்கள் முன் வெளிப்படுத்துவதில் மகிழ்வதாகவும் தெரிவித்தனர்.*

*அன்றைய நிகழ்வைத் தமது கலை வாழ்க்கைக்குக் கிடைத்த குறிப்பிடத்தக்க அங்கீகாரமாகக் கருதுவதாகவும் அவர்கள் கூறினார்கள். இதுகாறும் தம்மை யாரும் கவுரவிக்காத சூழலில் இந்த நிகழ்ச்சி தங்களுக்கு மன மகிழ்ச்சியையும் ஊக்கத்தையும் அளிப்பதாகவும் ஓரிருவர் தெரிவித்தனர். பொதுவாகவே ஒரு நாடக நிகழ்ச்சியின்போது பார்வையாளர்கள் தங்களைப் பெண்களாகவே நினைத்து பெண்களிடம் நடந்து கொள்வதை போலவே தங்களிடம் நடந்து கொள்வது போன்ற பிரச்சினைகளை அனுபவித்திருப்பதையும் பதிவுசெய்தனர்.*

*தொடர்ந்து பேராசிரியர் அமைதி அரசு பேசுகையில், பெண் கலைஞர்கள் தமது ஒப்பனையில் பெண்களை வெற்றிகொள்ளும் வகையில் தமது ஒப்பனையை மேற்கொள்ள விரும்புகிறார்கள். பெரும்பாலான நேரத்தில் அவர்கள் அதில் வெற்றியும் பெறுகிறார்கள் எனக் குறிப்பிட்டார். அந்தக் கருத்தை மேடையிலிருந்த கலைஞர்கள் அத்தனை பேரும் உறுதி செய்தார்கள்.*



ஒவ்வோர் ஆணுக்குள்ளும் பெண் உணர்வுகள் இருப்பதுபோல, ஒவ்வொரு பெண்ணுக்குள்ளும் ஆண் உணர்வுகள் இருப்பதைப் போல, இந்தப் பெண் கலைஞர்கள் தங்களுக்குள் இருக்கின்ற பெண் உணர்வுகளை உடல்மொழியாகவும் வெளிப்படுத்துவதன் வழி நாடகத்தில் பெண் கதாபாத்திரம் ஏற்று நாடகம் நிகழ்த்தப்படுகிறது. இத்தகைய அனுபவம் இக்கலைஞர்களுக்குத் தனக்குள் இருக்கும் பெண் உணர்வுகளோடு இணைவதற்கு இந்த நிகழ்த்துக் கலையும் வாய்ப்பளிக்கிறது என்கின்ற நிலையினால் இவர்கள் முழுமையாக இந்தப் பெண் பாத்திரங்களில் மனநிறைவையும் மகிழ்ச்சியையும் காண்கிறார்கள் என்றும் அமைதி அரசு விளக்கமளித்தார்.

நிகழ்ச்சியின் இறுதியில் கலைஞர்களுக்கு சான்றிதழ்களும் வாழ்நாள் சாதனையாளர் விருதும் வழங்கப்பட்டன. அனைத்துக் கலைஞர்களும் பார்வையாளர்களும் மகிழ்ச்சியுடன் கலைந்து சென்றனர். நாளந்தா கலை பண்பாட்டு நிறுவனம் மற்றும் சர்வதேச தமிழ் மரபு அறக்கட்டளை இணைந்து நடத்திய இந்த விழா தமிழகத்தில் புதுமையான ஒரு முயற்சி என்பதில் சந்தேகமில்லை. அரிதாரம் பூசுவதற்கு முன்பும் பின்பும், கலைஞர்களின் மனநிலையை அவர்களுடைய சொந்த சொற்களாலேயே மக்கள் அறிந்துகொள்ள இந்த நிகழ்ச்சி உதவியது. இது ஒரு தொடக்க நிகழ்ச்சிதான். இன்னும் விரிவாக இந்த அம்சத்தில் ஆய்வதற்கு இது ஒரு தொடக்கப்புள்ளி என்பதை ஒருங்கிணைப்பாளர்கள் அறிவித்தனர். இத்துறையிலான ஆய்வுகளும் தரவுகளும் விரிவடைய பல முயற்சிகள் மேற்கொள்ள வேண்டிய தேவை உள்ளது என்பதை இந்த நிகழ்ச்சி வெளிப்படுத்தியது.

நன்றி: மின்னம்பலம் இணைய இதழ்

தொடர்பு: முனைவர் க.சுபாஷிணி (ksubashini@gmail.com)

# 26. தொல்லியல் அறிஞர் ஐராவதம் மகாதேவன் நினைவேந்தல் உரை

***— துரை.சுந்தரம்***

***முன்னுரை:***




*அண்மையில் 16-12-2018 அன்று கோவையில் “களம்” அமைப்பினர் நடத்திய, தொல்லியல் அறிஞர் ஐராவதம் மகாதேவன் நினைவேந்தல் நிகழ்ச்சியில் தொல்லியல் அறிஞர் திரு. சுப்பராயலு அவர்கள் உரை நிகழ்த்தினார்கள். ஐராவதம் மகாதேவன் அவர்களை நினைவுகூரும் வகையிலும், தொல்லியலைப் பற்றிய வரலாற்றுப் புரிதலை உணர்த்தும் வகையிலும் அவர் ஆற்றிய உரை மிகச் சிறப்பானதொன்று. ஆங்கிலேயர் காலம் தொட்டுப் பல்லாண்டுகள் தொல்லியல் ஆய்வுகள் மேன்மையுடன் திகழ்ந்த நிலை மாறி அண்மைக்காலத்தில் ஒரு வெறுமையை எட்டியுள்ள சூழ்நிலையில், தற்கால இளைய சமுதாயம் அவற்றை மீட்டெடுத்துப் புத்தாக்கம் தரவேண்டிய கடமையை*

வலியுறுத்தும் வண்ணம் உரை அமைந்திருந்தது. தொல்லியல் துறையிலும், மூத்த அறிஞர்கள் இல்லாத நிலை. துறை வெறுமையாகக் காணப்படுகிறது. கல்வெட்டு, வரலாறு, மொழியியல், இலக்கியம் ஆகிய பன்முனைகளும் இணைந்து ஆழமான ஆய்வுகள் நடைபெற்றால்தான் தமிழ் மொழியின் பழமை, தமிழர் நாகரிகத்தின் பழமை ஆகியவை நிலை நிறுத்தப்பெறும் என்பதான ஒரு கருத்தை சுப்பராயலு அவர்களின் உரை நமக்குச் சுட்டிக்காட்டியது. அவர் உரையின் கருத்துகள் இங்கு பகிர்ந்துகொள்ளப்படுகின்றன.




சிறப்புரை ஆற்றிய திரு. சுப்பராயலு அவர்கள்

***தொல்லியல் அறிஞர் ஐராவதம் மகாதேவன்:***

ஐராவதம் மகாதேவன் அவர்கள் பிராமி எழுத்துகளின் ஆய்வுக்காகவே அறியப்படுகின்ற அறிஞர். பிராமிக் கல்வெட்டுகள் அமைந்திருந்த எல்லா இடங்களுக்கும் நேரில் சென்று, கல்வெட்டுகளைத் தொட்டுத் தடவிப் பார்த்துப் படித்தவர். திருவாதவூர் பிராமிக் கல்வெட்டைப் படிக்கையில், கட்டிடங்களுக்குச் சாரம் அமைப்பதுபோல் சாரம் அமைத்து அதன் மேலமர்ந்து எழுத்துகளைப் படித்தவர். அவரது மறைவை ஒட்டி வெளியான பல ஒளிப்படங்களில் இந்தக் காட்சியைக் காட்டும் ஒளிப்படமும் வெளியானதை நாம் அறிவோம். குளித்தலை அருகே ஐயர் மலை (ஐவர் மலை அல்ல) மீது ஏறுவது மிகக் கடினம். அக் கடினத்தையும் தாங்கிக்கொண்டு கல்வெட்டைப் படித்தவர்.



சாரத்தில் ஏறித் திருவாதவூர் பிராமிக்கல்வெட்டு படித்தல்

***சென்னையில் ஐராவதம் மகாதேவன்:***

*1964-ஆம் ஆண்டு. சுப்பராயலு அவர்கள் சென்னைப்பல்கலையில் ஆய்வு மாணவராய் இருந்த காலம். சென்னை அருங்காட்சியகத்தில் SOUTH INDIAN ARCHAELOGICAL SOCIETY என்னும் பெயரில் ஒரு கழகம் (ASSOCIATION) தோற்றுவிக்கப்பட்டு, மாதந்தோறும் கூட்டங்கள் நிகழ்த்தப்பெற்ற காலம். அக்கூட்டங்களுக்கு ஐராவதம் மகாதேவன் அவர்கள் வருகை தருவதுண்டு. அருங்காட்சியகத்தில் அப்போது தொல்லியல்-கல்வெட்டு அறிஞர் டி.வி. மகாலிங்கம் அவர்கள் பணியில் இருந்தார். (சுப்பராயலு அவர்களின் ஆசிரியர் இவர்). ஐராவதம் மகாதேவன் அவர்களுக்கு அப்போது கல்வெட்டுகளைப்பற்றித் தெரியாது. நாணயவியலில் (NUMISMATICS) ஆர்வம் கொண்டிருந்தார். 1965-ஆம் ஆண்டு புகளூர் பிராமிக்கல்வெட்டை நேரில் சென்று பார்த்துப் படித்து 'இந்து' நாளிதழில் கட்டுரை வெளியிட்டார். கல்வெட்டு ஆராய்ச்சியில் அது அவரது முதல் படி. புகளூர்க் கல்வெட்டு, தொல்லியல் துறையினரால் முதலிலேயே பார்க்கப்பட்டிருந்தது; ஆனால், படிக்கப்பட்டு அதன் பாடம் வெளியாகவில்லை. ஐராவதம் மகாதேவன் அவர்கள் கல்வெட்டுச் செய்தியை வெளியிட்டது அக்காலத்தே பெரிதும் பாராட்டப்பெற்ற நிகழ்வு. காரணம், புகளூர்க்கல்வெட்டில் சேர மன்னர்களின் வரிசை கூறப்படுகிறது.*

***தமிழ் நாடு தொல்லியல் துறை – நாகசாமி – ஐராவதம் மகாதேவன்:***

*1961-ஆம் ஆண்டில் தமிழ்நாடு தொல்லியல் துறை தொடங்கப்பட்டது, 1962-ஆம் ஆண்டு நாகசாமி அவர்கள் துறையின் தலைவரானார். தமிழ்க் கல்வெட்டியல் துறை நாகசாமி அவர்களால் பரவலாக்கப்பட்டது; "ஜனரஞ்சகம்" என்று அதைக் குறிப்பிடலாம். ஐராவதம் மகாதேவன் அவர்கள் நாகசாமி அவர்களுடன் இணைந்துகொண்டார். துறை வளரும்போது அவரும் வளர்ந்தார். அப்போது துறையில் இருந்தவர்களுக்குப் பிராமி எழுத்துப் படிக்கத்தெரியும்; ஆனால், கல்வெட்டுகளை நேரில் பார்க்கும் வாய்ப்புகள் இல்லை. இந்நிலையில், 1966-ஆம் ஆண்டில், ஐராவதம் மகாதேவன் அவர்கள் நாற்பது பிராமிக் கல்வெட்டுகளை நேரில் சென்று பார்த்து TRACING முறையில் படியெடுத்துக் கல்வெட்டுகளின் பாடங்களை CORPUS OF BRAMI INSCRIPTIONS என்னும் தலைப்பில் நூலாக வெளியிட்டார். பின்னர், 1968-ஆம் ஆண்டு அது SEMINAR ஒன்றில் வெளியாகியது. அண்மையில், பிராமிக் கல்வெட்டுகளைப் பற்றிய விரிவான நூலுக்காகத் தாம் பார்த்த இடங்களுக்கெல்லாம் மீண்டும் சென்று படித்தே எழுதினார். திருத்தமாக அமையவேண்டும் என்பதே நோக்கம்.*

***தொல்லியல் துறையும் கே.வி. சுப்பிரமணிய அய்யரும்:***

*இந்தியக் கல்வெட்டுத் துறை தொடங்கி (1890-இலிருந்து) நூற்று இருபது ஆண்டுகள் ஆயின. தென்னிந்தியா முழுமைக்குமான கல்வெட்டுத் துறை 1967 வரை ஊட்டியில் இயங்கிவந்தது. நாடு முழுமைக்குமான கல்வெட்டுகளின் எண்ணிக்கையில் மூன்றில் ஒரு பகுதிக்கும் மேற்பட்டவை தமிழ்க் கல்வெட்டுகள். தென்னிந்தியக் கல்வெட்டுகளின் எண்ணிக்கையில் பாதிக்கும் மேற்பட்டவை தமிழ்க்கல்வெட்டுகள். கல்வெட்டுகளின் எண்ணிக்கை மிகுதி. படிக்கும் பணியில் இருந்தவர் எண்ணிக்கை மிகக் குறைவு. எனவே, கல்வெட்டுகளைப் படித்தலிலும், பதிப்பித்தலிலும் தேக்க நிலை உருவானது. 1914-ஆம் ஆண்டில் படி எடுத்த கல்வெட்டுகள் பல 2014-ஆம் ஆண்டு சுப்பராயலு அவர்களால் பதிக்கப்பட்டன என்பதைக்கொண்டு இத்தேக்க நிலையைப் புரிந்து கொள்ளலாம். போக்குவரத்து எளிதாக இல்லாதிருந்த காலம் அது. மதுரையில், கே.வி. சுப்பிரமணிய அய்யர் மாட்டுவண்டியில் போய் கல்வெட்டுகளைப் படித்த வரலாறு உண்டு. பிராமிக்*

*கல்வெட்டுகளைப் படிக்க அடிப்படை வகுத்தவர் கே.வி. சுப்பிரமணிய அய்யரே ஆவார். ஐராவதம் மகாதேவன் அவர்கள் பொள்ளாச்சியில் (1990-96) பணியாற்றியபோது, கே.வி. சுப்பிரமணிய அய்யரின் மகனார் வைத்தியநாத அய்யர் கோவையில் இருந்தார். அவருடன் ஐராவதம் அவர்கள் தொடர்பு கொண்டிருந்தார். பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்களின் உதவியும் அவருக்குக் கிட்டியது. 2003-ஆம் ஆண்டு, பிராமிக் கல்வெட்டுகள் பற்றிய நூலைச் செம்மைப்படுத்தி மறு TRACING முறையில் படியெடுத்து முழு நூலைப் பதிப்பித்தார். பணியில் இவருக்கு உதவியவர்கள் தொல்லியல் துறையைச் சேர்ந்த சாந்தலிங்கம், வேதாசலம் ஆகியோர் ஆவர். TRACING முறை என்பது எழுத்துகளின் மேல் வெள்ளை மையால் எழுதுவது. அதாவது விளம்பல் படி. இந்த TRACING முறை சரியான முறையல்ல. எழுத்துகளோடு அவற்றின் அருகில் கல்லின் இயற்கைப் பொறிப்பும் இருக்கும். எனவே எழுத்துகளைப் படிப்பதில் தெளிவு கிட்டாது*

***பிராமி எழுத்து – வரலாற்றுப் பின்னணி:***
*வட இந்தியாவில் பிராமி எழுத்து எழுதப் பயன்பட்ட மொழி பிராகிருதம் ஆகும். பிராகிருதம் மக்கள் மொழி; அக்காலத்திய உலகியல் மொழி. சமற்கிருத மொழி, சமயச் சடங்குகளுக்காகப் பயன்பட்ட மொழியாக மட்டும் இருந்தது. கி.மு. நான்காம் நூற்றாண்டில் பாணினி, வட இந்திய மொழிகளை ஆய்ந்து "அஷ்டத்தியாயி" என்னும் இலக்கண நூலை எழுதி, வட இந்திய மொழிகளின் பயன்பாட்டை வரையறுத்துக் கொடுத்தார். அந்த இலக்கண மரபுக்குப் பின்னர் மேற்கொண்டு சமற்கிருதம் வளர்ச்சியுறவில்லை. பின்னர், சமற்கிருதம் செப்பனிடப்பட்டு, கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்து இலக்கியங்களில் பயிலத் தொடங்கியது.*

*மகத நாட்டில் வழங்கிய பிராகிருத மொழியை அசோகர் தம் ஆட்சியில் நிருவாக மொழியாக ஆக்கினார். அப்போது சமற்கிருதம் இருந்தது. ஆனால், அரசனின் சாசனங்கள் மக்களை எட்டுவதற்கு மக்களுக்குத் தெரிந்த மொழியே வேண்டியிருந்தது என்னும் காரணத்தால் பிராகிருதம் பயன்பட்டது. பின்னர் வந்த குப்தர்கள் காலத்தில் சமற்கிருதம் நிருவாக மொழியாக உருவெடுத்தது. அசோகர் பிராமிக் கல்வெட்டின் அடிப்படையில், கல்வெட்டியலாளர்களுக்குத் தெரிந்த மொழி பிராகிருதம். எனவே, தமிழ் நாட்டில் கிடைத்த பிராமி எழுத்துகள் கொண்ட கல்வெட்டுகளைப் படிப்பதில், பிராகிருத அணுகுமுறை பின்பற்றப்பட்டது. ஆனால், தமிழ் நாட்டுப் பிராமிக் கல்வெட்டுகள் பிராகிருத மொழியோடு பொருந்தாமையால் தெளிவற்ற நிலையே இருந்தது. கே.வி. சுப்பிரமணிய அய்யர்தாம் இக்கல்வெட்டுகளில் இருப்பது தமிழ் மொழியே என்று கண்டார். 1924-ஆம் ஆண்டில், கல்வெட்டுகளைப் படித்து வெளியிட்டார்.*

*அடுத்த கட்டமாக, 1935-ஆம் ஆண்டில், அறிஞர் தி.நா.சுப்பிரமணியம் அவர்கள் தமிழ்க்கல்வெட்டுகள் பற்றிய நூலை அவர் சார்ந்திருந்த சுதேசமித்திரன் அச்சகத்தில் வெளியிட்டார். அவரே அந்நூலைப் பின்னர் ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து வெளியிட்டார். அந்நூலில் அவர், எழுத்துகளின் வளர்ச்சி குறித்த பட்டியலைக் கொடுத்திருந்தார். தமிழகத்தின் தமிழ் பிராமி, ஆந்திரத்தில் பட்டிபுரோலு என்னுமிடத்தில் கிடைத்த பிராமி இரண்டையும் ஒப்புமைப் படுத்தி தி.நா.சு. அவர்கள் ஒரு கட்டமைப்பைக் குறித்திருந்தார். அசோகன் பிராமியில் கூட்டெழுத்து முறை இருந்தது. மெய்யெழுத்து இரட்டிக்கும்போதும், இரண்டு மெய்யெழுத்துகள் ஒன்றாக வரும்போதும் இக்கூட்டெழுத்து முறையைப் பயன்படுத்தினார்கள். (கட்டுரை ஆசிரியர் குறிப்பு :*

*எடுத்துக் காட்டாக, 'மக்கள்'' என எழுதுவதற்கு ''மகள்'' என்பதாக எழுதி, 'க' எழுத்தின் கீழ் 'க்' எழுத்தை எழுதுவார்கள். கல்வெட்டுகளில் நாம் காணும் ''ஸ்வஸ்திஶ்ரீ'' என்பதை எழுத, ''ஸஸிஶ்ரீ'' என்னும் மூன்றெழுத்துகளை மேல்பகுதியில் அமைத்து, முதல் 'ஸ' எழுத்தின் கீழ் 'வ' எழுத்தையும், இரண்டாவதாக உள்ள 'ஸி' என்னும் எழுத்தின் கீழ் 'த்' எழுத்தையும் எழுதுவார்கள்). இந்தக் கூட்டெழுத்து அமைப்பு தமிழ் பிராமியில் இல்லை. தமிழ் பிராமியில், மெய்யெழுத்தைக் குறிப்பதற்கே உயிர்மெய் எழுத்து எழுதப்பட்டது. உயிர்மெய் எழுத்தைக் குறிக்க, அவ்வெழுத்தின் மேல் ஒரு கோடு எழுதப்படும். (மெய்யெழுத்துகளுக்குப் புள்ளியிடும் முறை இல்லை). டி.வி. மகாலிங்கம் அவர்கள், தமிழ் பிராமிக் கல்வெட்டுகளைப் படிக்கத்தொடங்கி 1968-ஆம் ஆண்டில் நூல் வெளியிட்டார். ஐராவதம் அவர்களின் CORPUS OF BRAMI INSCRIPTIONS நூலுக்குப் பின்னரே டி.வி. மகாலிங்கம் அவர்களின் நூல் வெளியானது குறிப்பிடத்தக்கது.*

***சிந்துவெளி எழுத்துகள் – ஆராய்ச்சி:***

*1968-ஆம் ஆண்டுக்குப் பின்னர், ஐராவதம் மகாதேவன் அவர்கள் சிந்துவெளி எழுத்துகளைப் படிக்க முயற்சி செய்தார். முத்திரைப் பொறிப்புகளைத் தொகுத்து வரிசைப்படுத்தி அட்டவணைப் (CONCORDANCE) படுத்தினார். இது ஒரு முதன்மையான பங்களிப்பாகக் கருதப்படுகிறது. சர். ஜான் மார்ஷல் (SIR JOHN MARSHAL), ஃபாதர் ஹீராஸ் (FATHER HERAS), ஆஸ்கோ பர்ப்போலா (ASKO PARPOLA) போன்றவர்கள் சிந்து சமவெளி எழுத்துகளை ஆய்ந்துள்ளனர். ஃபாதர் ஹீராஸ் (FATHER HERAS) அவர்கள் சிந்து சமவெளி எழுத்துகள் தமிழ் எழுத்துகளாக இருக்கலாம் என்று கருதினார். சிந்து வெளியில் தமிழ் மொழி இருந்தது என்பதாக 1965-இல் ஆஸ்கோ பர்ப்போலா (ASKO PARPOLA) தம் ஆய்வுக்கட்டுரையில் குறித்துள்ளார். தமிழ் நாட்டில் ஐந்தாறு பேர் – மதிவாணன் போன்றோர் - சிந்து எழுத்துகளைப் படிக்கும் ஆய்வில் ஈடுபட்டனர். 1960-இல், சோவியத் ரஷ்யாவிலும் சிந்துவெளி எழுத்துகளை ஆய்ந்துள்ளனர். ஐராவதம் மகாதேவன் அவர்கள் முதலில் சிந்து எழுத்துகளைப் படிக்கவில்லை. CONCORDANCE என்னும் எழுத்துகளின் தொகுப்பை வெளியிட்டார். இது ஒரு நிகண்டு போன்ற தொகுப்பு எனலாம். வடமொழியில் ''கோசம்'' என்பார்கள்; அது போன்றது. சிந்து சமவெளி எழுத்துகளின் ஆய்வுத் தொடர்பாக இந்நூல் ஒரு கொடை என்பதில் ஐயமில்லை. அது போலவே, அண்மையில், பிராமி எழுத்துகளைப்பற்றி முன்னரே எழுதிய நூலை மேம்படுத்தி வெளியிட்டுள்ளார். இந்நூலும் அவர் வழங்கிய கொடையாகும். ஆஸ்கோ பர்ப்போலாவும் (ASKO PARPOLA) CONCORDANCE தொகுப்பை எழுதியுள்ளார். 1994-இல் ஒரு நூலும் எழுதியுள்ளார்.*

*CONCORDANCE நூலுக்குப் பிறகு, ஐராவதம் மகாதேவன் அவர்கள் சிந்து எழுத்துகள் சிலவற்றைப் படிக்கவும் தொடங்கினார். 2003-ஆம் ஆண்டுக்குப் பின்னர், உடல் நலக் குறைவு காரணமாக நூல் வெளியிடாது, நோட்டுப்புத்தகங்களில் எழுதி வைத்துள்ளார். தற்போது, அவரது எழுத்து நோட்டுகள் அனைத்தும் ரோஜா முத்தையா நூலகத்துக்குக் கொடையாக அளிக்கப்பட்டுள்ளன.*

*LOGO WRITING அல்லது LOGO GRAPH என்பதான ஒருவகைக் குறியீட்டெழுத்து முறையில் அமைந்துள்ளவை சிந்துவெளி எழுத்துகள். ஒரு பெயர்ச்சொல் போலவும், அதே சமயத்தில் சொல்லின் விகுதி போலவும் பொருள் கொள்ளுமாறு அமைந்துள்ளன எனலாம். எடுத்துக் காட்டாக, ''இல்'' என்னும் தமிழ்ச் சொல் 'வீடு' என்னும் பொருள்*

*தந்தாலும், ‘ஊரில்’, ‘தெருவில்’ ஆகிய சொற்களில் காணப்படுவது போல் ஒரு விகுதியாகப் படிக்குமாறும் அமைகிறது. சிந்து வெளி எழுத்துகள் இது போல் ஒரு சிக்கலைக் கொண்டுள்ளன.*

*LOGO GRAPH எழுத்துகளைச் சித்திர எழுத்துவகை எனலாம். இவ்வகை எழுத்துகளைக் கிரேக்கர்கள் ஃபினீசியரிடமிருந்து (PHOENICIANS) பெற்றார்கள். ஃபினீசியருக்கும் முன்பு இவ்வகை எழுத்துகளை சுமேரியர்கள் பயன்படுத்தினர். ஃபினீசியர்கள், கடல்சார் வணிகர்கள். அவர்கள், LOGO GRAPH சித்திர வடிவங்களை எழுத்தாக்கினார்கள். இவ்வகை எழுத்துகளில் உயிர் எழுத்துகள் இரா. மெய் எழுத்துகள் மட்டுமே உண்டு. வேறு வேறு வகையில் படிக்கும்படி அவை அமையும். எடுத்துக்காட்டாக, ஆங்கில எழுத்துகள் K T B ஆகிய மூன்றெழுத்துகள் கொண்ட ஒரு தொகுதியை, இந்தி மொழியில், ‘கிதாப்’, என்றோ ‘குதுப்’ என்றோ இரு வேறு முறையில் படிக்கலாம். ஆனால், இவ்வெழுத்துகளைப் படிக்க மொழி ஒன்றின் அடிப்படை மிகத் தேவை. மொழி இன்னதென்று தெரிந்தால் மட்டுமே மேலே குறித்தவாறு படிக்க இயலும். சிந்து வெளி எழுத்துகளின் மொழி இன்னதென்று தெரியாததாலேயே இன்னும் படிக்க இயலவில்லை. எடுத்துக்காட்டாக, ‘கெ ட ட து’ என்பதை மொழி அறிந்தவர் மட்டுமே ‘கெட்டது’ எனப்படித்தல் இயலும். சிந்து வெளி ஆய்வில் எழுத்துகளைப் படிக்க முயலும் பெரும்பாலோர் வெளிநாட்டினர் என்பது குறிப்பிடத்தக்கது.*

*மொழி இயல் அடிப்படை ஆய்வு இப்போது இல்லை என்பது குறையாக உள்ளது. மொழி ஆய்வுக்கு மொழி இயல் மிகத் தேவை. மூல மொழி பற்றிய ஆய்வு தற்காலம் தேவை. அடிப்படை மொழி ஆராய்ச்சிக்கு முதலில் இடமளிக்கவேண்டும். பல பல்கலைக்கழகங்களில் மொழி இயல் ஆய்வுகள் இல்லை. சிந்து வெளி எழுத்துகள் பற்றிய புதிரை விடுவிக்க நாம் சுமேரியாவுக்குச் செல்லவேண்டும். சுமேரிய மொழி அறிவு வேண்டும்.*

***ஐராவதம் மகாதேவன் ஆய்வு செய்த சில பிராமிக் கல்வெட்டுகள்:***
***அ) சித்தன்ன வாசல் கல்வெட்டு: –***
*தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை வெளியிட்ட “தமிழ் – பிராமி கல்வெட்டுகள்” நூலில் உள்ள கல்வெட்டுப் பாடமும் குறிப்பும் கீழே:*




***கல்வெட்டுப் பாடம்:***
எருமிநாடு குமுழ்ஊர் பிறந்த காவுடிஈ
தென்குசிறுபோசில் இளயர் செய்த அதிட்அனம்

*இக்கல்வெட்டில் கன்னட மொழித்தாக்கம் இருப்பதாகக் கருதப்படுகிறது. காரணம், எருமி நாடு என்பதை எருமை நாடு எனக் கொள்வதே. எருமை நாடு, மகிஷ மண்டலம் எனச் சமற்கிருதத்தில் குறிப்பிடப்பெறும் மைசூர் நாட்டைக் குறிக்கும். அப்பகுதியில் இருந்த ஊர் குமிழூர். இச்சொல், குமிழ் என்று தேக்கு மரவகையின் அடியாகப் பெயர் பெற்றிருக்கலாம். காவுடிஈ என்பது காவுண்டன் என்ற சொல்லின் பெண்பால் பெயர். 'கௌடி' என்ற கன்னடப் பெண் துறவியின் பெயர், தமிழில் 'காவுடி' என்று எழுதப்பட்டுள்ளது. இறுதியில் உள்ள 'இ' , பளிஇ, கணிஇ என்ற பிற தமிழ்-பிராமி கல்வெட்டுகளில் வரும் வகையில் இகர இறுதிச் சொல்லான காவுடி என்பதிலும் எழுதப்பெற்றுள்ளது. தென்கு சிறுபோசில் என்பது தெற்கு சிறுவாயில் என்று பிற்காலத்தில் வழக்கில் இருந்த நாட்டுப்பிரிவின் பண்டைய வடிவம். வாயில் என்ற தமிழ்ச்சொல் 'ஹொசிலு' என்று கன்னடப் படுத்தப்பட்டு, அதன் தமிழ் வடிவமான 'போசில்' என்று இடம் பெறுகிறது என்கிறார் ஐராவதம் மகாதேவன்.*

*இளயர் என்ற சொல் வீரர் பிரிவினரைக் குறிக்கும். இவர்களைத் துளு நாட்டிலிருந்து வந்தவர் என்று மகாதேவன் வழக்கினை ஆதாரமாக்கிக் கூறுகிறார். இளயர் என்போர் வீரர் குழுவினர் என்பதில் கருத்து வேற்றுமை இல்லை.*

*சித்தன்ன வாசல் கல்வெட்டு தனித்தன்மை வாய்ந்தது. இக்கல்வெட்டின் மூலமே, தமிழகத்திற்கும் கன்னட நாட்டிற்கும் இருந்த தொடர்பினை நேரடியாக அறிகிறோம். எருமைநாடு என்ற பெயர் சங்க இலக்கியங்களிலேயே இடம்பெறும் ஒன்றாகும். அடுத்த 'காவுடி' என்ற சொல் சமண மதத்தில் இருந்த பெண்பாற் துறவியைக் குறிக்கிறது. சமண மதத்தில் அவ்வளவு பண்டைக் காலத்திலேயே பெண்குரத்தியர் இருந்ததற்கான முதற்சான்றாக இது அமைகிறது. சிறுபோசில் என்ற சொல்லும் 'சிறுவாயில்' என்பதன் கன்னட வடிவம் என்றாகும் நிலையில், இக்கல்வெட்டில் இடம்பெறும் கன்னட மொழியின் தாக்கத்தினை முதன் முதலாகக் காட்டும் சான்றாக இது அமைகிறது.*

*கட்டுரை ஆசிரியர் குறிப்பு :*
*தமிழ் பிராமியில், மெய்யெழுத்தைக் குறிப்பதற்கே உயிர்மெய் எழுத்து எழுதப்பட்டது. மெய்யெழுத்துகளுக்குப் புள்ளியிடும் முறை இல்லை. உயிர்மெய் எழுத்தைக் குறிக்க, அவ்வெழுத்தின் மேல் ஒரு கோடு எழுதப்படும் என்பதாகப் பார்த்தோம். இந்த அமைப்புமுறை இக்கல்வெட்டில் இருக்கிறது. இக்கல்வெட்டில், ழ், ர், ந், ன், ல், ய், ட், ம் என்னும் மெய்யெழுத்துகள் புள்ளி பெறாமல் உயிர்மெய் எழுத்துகளாகவே எழுதப்பட்டுள்ளன. உயிர்மெய் எழுத்துகளான – அகர அல்லது ஆகார எழுத்துகள் – நா, ற, த, கா, ள, த, ன ஆகியவற்றின் மேற்புறம் ஒரு கோடு எழுதப்பட்டுள்ளது. அனைத்திலும் ஒன்றுபோல் கோடு இருப்பினும், நா, கா என்னும் இரு நெடில் எழுத்துகள் மட்டும் அவ்வெழுத்துகள் அமைந்த 'நாடு', 'காவுடி' என்னும் சொற்களின் பொருள் சுட்டு நோக்கி நெடிலாகப் படிக்கப்பட்டுள்ளன. ஆனால், மெய்யெழுத்துகளை உயிர்மெய் எழுத்துகளாக எழுதும் விதி முறை இக்கல்வெட்டில் ஓரிடத்தில் மட்டும் பின்பற்றப்படவில்லை. 'இளயர்', 'செய்த' ஆகிய இரு சொற்களில் வருகின்ற 'ய' உயிர்மெய், ஒன்றில் மெய்யாகவும், மற்றதில் உயிர்மெய்யாகவும் எழுதப்பட்டுள்ளன.*

*மற்றொன்று, பிராமியில் ‘இ’ எழுத்துக்கும், ‘ஈ’ எழுத்துக்கும் தனித்தனி எழுத்துகள் இருக்கும்போது, இக்கல்வெட்டில் ‘ஈ’ எழுத்தை ‘இ’கரமாகப் படித்திருக்கிறார். ’காவுடி’ என்னும் சொல்லை அடுத்து ‘ஈ’ எழுத்து உள்ளது; ஆனால் ‘இ’கரமாகப் படித்திருக்கிறார். அடுத்து, மேற்படி நூலின் குறிப்பில்,*

*காவுடிஈ என்பது காவுண்டன் என்ற சொல்லின் பெண்பால் பெயர். ‘கௌடி’ என்ற கன்னடப் பெண் துறவியின் பெயர், தமிழில் ‘காவுடி’ என்று எழுதப்பட்டுள்ளது.*

*என்று பதிப்பாசிரியர்கள் கூறியிருக்கின்றனர். காவுண்டன் என்பதன் பெண்பால் பெயரே காவுடி என்னும் கருத்தும், கௌடி என்பது பெண் துறவியின் (இயற்) பெயர் என்னும் கருத்தும் முரணாக உள்ளன.*

***ஆ) ஆனைமலைக் கல்வெட்டு: –***




***கல்வெட்டுப் பாடம் (மேற்படி நூலில் உள்ளவாறு)***

*இவகுன்றது உறையுள் பாதந்தான் ஏரி ஆரிதன்*
*அத்துவாயி அரட்ட காயிபன்*

*குறிப்பு : (மேற்படி நூலில் உள்ளவாறு)*

*இவகுன்றம் என்னும் இம்மலையில் ஏரிஆரிதன், அத்துவாயி அரட்ட காயிபன் என்னும் இரு துறவியர் தங்குவதற்கான கற்படுக்கை என்பது இதன் பொருள்.*

*இவம் என்னும் சொல் இபம் என்னும் சமஸ்கிருதச்சொல்லின் மறுவடிவமாகும். யானை என்பது இதன் பொருள். உறையுள் என்பது உறைவிடம் என்பதைக்குறிக்கும். பாதந்தான் என்பதைப் பாய் அல்லது படுக்கை தந்தான் எனக் கொள்ளலாம். ஆனால் இச்சொல்லைப் பதந்தன் எனக்கொண்டு மரியாதைச் சொல்லாகக் கருதுவர் ஐ.மகாதேவன். ஏரி என்னும் ஊரைச் சேர்ந்த ஆரிதன் என்பது ஒரு துறவியின் பெயர். அட்டவாயி என்பதன் தமிழ் வடிவமாக அத்துவாயி என்பதைக் கொள்ளலாம். அர்த்தம் உரைப்பவன், சமயச் சொற்பொழிவு நிகழ்த்துபவன் என்றும் இதற்குப் பொருள் கூறலாம். அரட்டன் என்பது அத்துறவியின் பெயராகவும் காசிபன் என்பது கோத்திரப் பெயராகவும் கொள்ளப்படும்.*

*ஆரிதன், அரட்ட காயிபன் என்னும் இரு துறவியருக்கான தங்குமிடமாக இக்குகைத் தளத்தைக் கொள்ளலாம்.*

***சுப்பராயலு அவர்களின் கருத்து:***
*ஐராவதம் மகாதேவன் ‘இவ’ எனப்படித்து யானை எனப் பொருள் கூறுகிறார். ஆனால், ‘இவ் குன்றம்’ என்றும் படிக்கலாம். ’இவ்’ என்பது வேறு பாடம்.*

*கட்டுரை ஆசிரியர் குறிப்பு :*
*இக்கல்வெட்டில், பா, தா, வா, கா ஆகிய உயிர்மெய் நெடில் எழுத்துகளுக்கு மட்டும் எழுத்துகளின் மேற்புறம் கோடு உள்ளது. இக்கல்வெட்டில் ‘இகர’ உயிர் எழுத்து எழுதப்பட்டு இகரமாகவே (குறிலாக) படிக்கப்படுகிறது. ’ட்’ என்னும் மெய்யெழுத்து மட்டும் புள்ளி பெற்று மற்ற மெய்யெழுத்துகள் புள்ளி பெறாமல் உயிர்மெய் எழுத்துகளாகவே எழுதப்பட்டுள்ளன என்பது சிந்தனைக்குரியது. ஏரிஆரிதன், அத்துவாயி அரட்ட காயிபன் என்னும் இரு துறவியர் தங்குவதற்கான கற்படுக்கை என்பதாக நூல் குறிப்பில் உள்ளது. கல்வெட்டில் உள்ள பெயர்கள் துறவியர் பெயர்களானால், படுக்கை அமைத்துக் கொடுத்தவர் பெயர் கல்வெட்டில் இல்லை என்பது தெளிவு. அவ்வாறெனில், பா(ய்) தந்தான் என்பது பொருந்தாது. தந்தவனின் பெயரில்லாமல், தந்தான் என்று எங்ஙனம் கூற இயலும்? அடுத்து, பாதந்தான் என்பதைப் பதந்தன் எனக்கொண்டு மரியாதைச் சொல்லாகக் கருதுவர் ஐ.மகாதேவன் என்று குறித்துள்ளனர். பதந்தன் என்பது எவ்வாறு மரியாதையைக் குறிக்கும்? இவ்விரண்டு ஐயங்களுக்குத் தெளிவை அறிய ஆவல்.*

***பிராகிருதம் பற்றி சுப்பராயலு அவர்களின் கருத்து:***
*தமிழர்களுக்கு முதலில் அறிமுகமானது பிராகிருதம். பின்னரே சமற்கிருதம் அறிமுகமாகிறது. எழுத்துகளைப் பரப்புபவர் வணிகர்கள்தாம். தமிழ் பிராமிக் கல்வெட்டுகளில் உள்ள ஆள் பெயர்கள் பிராகிருதம். பிராகிருதத்தில் மெய் இரட்டிக்காது.*

*குறிப்பு: ஐராவதம் மகாதேவன் குறித்து கட்டுரை ஆசிரியரின் ஓர் நினைவுகூரல்:*



*ஐ.மகாதேவன் அவர்கள் உடல் நலக் குறைவால் வீட்டில், ஓய்வாகப் படுத்திருந்த நிலையில், அறிமுகமே இல்லாத என்னைச் சந்திக்க - முன்னறிவிப்பு ஏதுமின்றிச் சென்றிருந்தேன் - அவர் அனுமதி*

*அளித்தமை நான் பிராமி எழுத்தில் எழுதிய கடித வேண்டுகோளைப் பார்த்துத்தான் என்பதில் நான் பெருமிதம் அடைகிறேன். கல்வெட்டியல் ஆர்வலராக இருந்தபோதே அவரைச் சந்தித்து அவருடன் ஒளிப்படமும்*

*எடுத்துக்கொண்ட மகிழ்ச்சி. அந்த ஒளிப்படம் எனக்கு ஓர் ஆவணம்.*

*தொடர்பு: துரை.சுந்தரம், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், கோவை.*
*doraisundaram18@gmail.com, அலைபேசி : 9444939156.*

## 27. சிந்துவெளிப் பண்பாட்டின் திராவிட அடித்தளம் - புத்தக விமர்சனம்

*— முனைவர் க. சுபாஷிணி*




*நூல் வாசிப்பு : சிந்துவெளிப் பண்பாட்டின் திராவிட அடித்தளம்*
*நூலாசிரியர்: ஆர் பாலகிருஷ்ணன் இஆப*

*தமிழின் தொன்மையை அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வமும் துடிப்பும் இன்று பரவலாகத் தமிழ் மக்கள் சூழலில் எழுந்துள்ளது. இந்த ஆர்வத்திற்குத் தீனி போடும் வகையில் குறிப்பிடத்தக்க ஆய்வு நூல்கள் தற்காலம் வரத்தொடங்கியுள்ளன. அத்தகைய முயற்சிகளில் சிந்துவெளி பண்பாடு, வரலாறுபற்றியன தொடர்பான ஆய்வுகளை முன்வைத்து வெளிவரும் நூல் முயற்சிகள் மிகக் குறைவாகவே உள்ளன. இதற்கு மிக முக்கியக் காரணம் சிந்துவெளி ஆய்வுத் தளம் என்பது எளிதான ஒன்றல்ல. இத்துறையில் ஆய்வு செய்வதற்கு மிக ஆழமான ஆய்வின் பின்னணியிலும், கடந்த நூற்றாண்டில் சிந்துவெளி அகழ்வாய்வு பற்றிய கண்டுபிடிப்புகள் நிகழ்ந்த காலம் தொட்டு வெளிவந்துள்ள அறிக்கைகள், ஆய்வுகள், ஆய்வேடுகளில் வெளியிடப்பட்டுள்ள கட்டுரைகள் ஆகியவற்றினை ஆழமாக ஆராய்ந்ததன் பின்னணியில் உருவாக்கப்பட வேண்டிய தேவை இருக்கின்றது. அது மட்டுமன்றி சிந்துவெளிப் பண்பாடு குறித்த அகழ்வாய்வுச் சான்றுகளும், சிந்துவெளி மக்கள் பேசிய மொழி பற்றிய விரிவான ஆய்வுத் தகவல்களும் அதிகமாக இல்லை என்பதும் ஒரு காரணமாகின்றது. எகிப்திய ஹீரோக்ளிப்ஸ் எழுத்துக்களைப் புரிந்து கொள்ள பண்டைய கிரேக்க எழுத்துக்கள் கொண்ட ரொசெட்டா கல் (Rosetta Stone) உதவியது போல சிந்து சமவெளி குறியீடுகளை*

*நேரடியாகப் புரிந்து கொள்ள ஒரு சான்று கிட்டவில்லை. இப்படிப் பல பிரச்சனைகள் சிந்து சமவெளி ஆய்வாளர்கள் எதிர் நோக்குகின்றனர் என்பதைக் கவனத்தில் கொள்ளவேண்டியுள்ளது.*

*இந்தச் சூழலில், சிந்துவெளி நாகரிகம், பண்பாடு என்பது திராவிட அடித்தளத்தின் அடிப்படையில் அமைந்தது என்ற கருத்தினை முன்வைத்து வெளிவந்திருக்கும் நூல்தான் சிந்துவெளிப் பண்பாட்டின் திராவிட அடித்தளம் எனும் இந்நூல். இந்த நூல் வெளிவந்த காலம் தொடங்கிச் சிறந்த வரவேற்பினை மக்கள் மத்தியில் பெற்றிருக்கின்றது. முதல் பதிப்பு முடிந்து இரண்டாம் பதிப்பும் வெளிவந்துவிட்டது. இந்த நூலில் நூலாசிரியர், முதற்பதிப்பின் முன்னுரையோடு இரண்டாம் பதிப்பிற்கான முன்னுரையையும் இணைத்திருக்கிறார். நூலுக்கு அணிந்துரை வழங்கியிருப்பவர் சிந்துவெளி ஆய்வில் மிக முக்கியமாகக் கருதப்படும் மறைந்த தொல்லியல் அறிஞர் ஐராவதம் மகாதேவன் அவர்கள்.*

*இந்த நூலின் அமைப்பைப் பற்றி முதலில் காண்போம். இரண்டு பெரும் பகுதியாக இந்த நூல் வகைப்படுத்தப்பட்டிருக்கிறது. முதல் பகுதியில் இடப்பெயர் ஆய்வு பற்றிய தகவல்கள் உள்ளடக்கிய கட்டுரைகள் உள்ளன. இரண்டாம் பகுதியில் சிந்துவெளி நகரங்களின் மேல்-மேற்கு, கீழ்- கிழக்கு வடிவமைப்பு பற்றிய விளக்கங்கள் இடம்பெறுகின்றன. இப்பகுதி, மேல்-மேற்கு, கீழ்- கிழக்கு எனும் அடிப்படை நகர அமைப்பு, திராவிட நகர அமைப்பின் அடித்தளத்தை வகுக்கும் தன்மை ஆகியன, விரிவாக அலசப்படுகின்றன. நூலின் இறுதியில் பின்னிணைப்பாக சான்றாதார பட்டியல்கள் இணைக்கப்பட்டுள்ளன. சிந்துவெளி நகரங்களான ஹரப்பா, மொகஞ்சதாரோ, காலிபங்கான், தோலாவிரா, லோத்தல் ஆகிய நகரங்களின் அமைப்பினை காட்டும் வரைபடங்கள் இணைக்கப்பட்டுள்ளன. இது ஒரு ஆய்வு நூல் என்பதற்கு அடிப்படை வகுக்கும் வகையில் நூலாசிரியர் தான் இந்த நூலை எழுத எடுத்துக்கொண்ட ஆய்வுக்கான உத்தி (methodology) பற்றி ஒரு விளக்கமும் இணைக்கப்பட்டுள்ளது.*

*நூலில் ஆசிரியர் வழங்கியிருக்கும் இரண்டாம் பதிப்புக்கான முன்னுரையானது நூலின் நோக்கத்திற்குச் சிறப்பு சேர்க்கின்றது." கிழக்கு வெளுக்கிறது கீழடியில்" என்ற தலைப்பில் இப்பகுதி அமைகின்றது. சிந்துவெளி நாகரிகம் பண்டைய நகர்ப்புற கட்டுமானத்தைச் சான்று பகரும் விதத்தில் அமைந்துள்ளது போல, இன்றைய தமிழகத்தின் மதுரை கீழடி அகழ்வாய்வு, தமிழ்நாட்டில் தொன்மையான நகரப் பண்பாடு இருந்தது என்பதற்கு தொல்லியல் சான்றாக அமைகின்றது. சிந்துவெளியின் நாகரீக தொடர்ச்சியை ஏறக்குறைய ஈராயிரம் கிலோமீட்டர் தூரத்தில் தெற்கே இருக்கும் மதுரையில் காணமுடிகின்றது. சங்க இலக்கியங்கள் புகழ்ந்து பாடிய நகரங்களைப் பற்றிய செய்திகள் வெறும்கற்பனைகள் அல்ல, அவை உண்மையே - என்பதைப் பறைசாற்றும் சான்றுகளாகக் கீழடி அகழ்வாய்வு தகவல்கள் நமக்கு இன்று கிடைக்கின்றன. வைகை கரையோரம் முழுதும் குழிகள் தோண்டி அகழ்வாய்வுகள் தொடர்ந்தால், மறைந்துபோன சிந்துவெளியின் தொடர்ச்சி இங்கு வைகைக்கரை நாகரிகத்தின் அடித்தளத்தை அமைத்தது என்பதற்கு மேலும் பல சான்றுகள் கிடைக்கும் என்பதை வலியுறுத்தும் வண்ணம் நூலாசிரியர் தனது கருத்துக்களை இந்தப் பகுதியில் வழங்குகின்றார்.*

இன்றைய பாகிஸ்தான் நிலப்பகுதியில் சிந்துவெளி நாகரிகம் என்ற தொல் நாகரிகம் கண்டறியப்பட்ட செய்தியை உலகிற்குத் தனது கட்டுரையின் வழி ஜோன் மார்ஷல் 1924ம் ஆண்டு அறிவித்தார். அதன் பின்னர், இந்தத் தொல் நாகரீக பண்பாட்டிற்கும் திராவிடப் பண்பாட்டிற்கும் உள்ள ஒற்றுமையை வலியுறுத்தும் வகையில் தொடர்ச்சியான ஆய்வுகள் நிகழ்ந்தாலும் இங்குப் பேசப்பட்ட மொழி எது, என்பது இன்றுவரை உறுதிசெய்யப்படாத சூழ்நிலையே நிலவுகிறது. ஆயினும் மிக உறுதியாகத் திராவிட பண்பாட்டுத் தொடர்ச்சியை சிந்து சமவெளி நாகரிகம் காட்டுவதையே பெரும்பாலான ஆய்வுகள் வெளிப்படுத்துகின்றன. சிந்துசமவெளி தொடர்பான ஆய்வுகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டவர்கள் பாதிரியார் ஹீராஸ், ஆய்வாளர் அஸ்கோ பர்போலா, ஆய்வாளர் ஐராவதம் மகாதேவன் இஆப ஆகியோர் வரிசையில் இன்று ஆர்.பாலகிருஷ்ணன் இஆப அவர்களும் இணைகின்றார். தொடர்ச்சியாக இவர் நிகழ்த்திய இடப்பெயர் ஆய்வுகள் சிந்து சமவெளி நாகரிகப் பண்பாட்டினைப் புரிந்துகொள்ள முக்கிய தரவுகளாக அமைகின்றன. இன்றைய இந்திய எல்லை என்பதை மட்டும் ஆய்வுக்களமாக இல்லாமல் இந்த எல்லைகளைக் கடந்து தனது இடப்பெயர் ஆய்வினை நிகழ்த்தி இவர் சேகரித்திருக்கும் தரவுகள் முக்கியத்துவம் பெறுகின்றன.

அதோடு தனது ஆய்விற்குத் துணை சான்றாக நூலாசிரியர் முன்வைக்கும் கோழிச்சண்டை தொடர்பான தரவுகளும் சான்றுகளும் மிக முக்கியமானவை என்றே கருதுகிறேன். ஒரு நீண்ட பாரம்பரியத்தின் தொடர்ச்சியின் எச்சங்களாக இன்றும் தமிழர் மரபில் இடம்பெறும் பண்பாட்டு விழுமியங்களுள் ஒன்றாக கோழிச்சண்டை மரபைக் காண்கின்றோம். இப்பகுதிக்குச் சான்றாக ஆசிரியர் வழங்கியிருக்கும் ஊர்ப்பெயர் உதாரணங்கள்,கி.மு 1ம் நூற்றாண்டு சோழர் கால நாணயம் காட்டும் கோழி நகரம் (உறையூர்), கோயில் சிற்பங்களில் யானையுடன் சண்டையிடும் சேவலின் சிற்பம், சண்டைக்கோழிக்காகத் தமிழ்மக்கள் எடுத்த கல்வெட்டுடன் கூடிய கீழ்ச்சேரி, மேல்ச்சேரி நடுகற்கள் போன்ற தகவல்கள் சிறப்பனவை. சண்டைக்கோழிகளுக்குச் செல்லப்பெயர் வைத்து அவை வீரமரணம் எய்திய போது சண்டைக்கோழிகளுக்காக நடுகல் எழுப்பிச் சிறப்பு செய்த தமிழ் மக்களின் பண்பாட்டுடன் சிந்து சமவெளி கோழிச்சின்னங்களை பொருத்திப் பார்க்க வேண்டியது அவசியமாகின்றது. சிந்து சமவெளி தொடங்கி, சங்க கால கோழிச்சண்டை சிறப்பின் வெளிப்பாடாக நாணயங்கள், சிற்பங்கள் பின் அதன் தொடர்ச்சியாக நடுகல் எனத் தொடரும் மரபு இன்று பொதுமக்கள் பண்பாட்டில் திரைப்பட வடிவில் "ஆடுகளம்" என்ற தமிழ்த்திரைப்படத்தின் மையக் கருவாக அமைந்திருப்பதை ஒதுக்கிச் செல்ல முடியாது என்பதை நூலாசிரியர் மிக அழகாக விவரிக்கின்றார்.

நூலின் முதல் கட்டுரையில் மிக விரிவாகவும், ஆழமாகவும் சிந்து சமவெளி நகரங்களின் அமைப்பினைப் பற்றி விவரிக்கும் நூலாசிரியர், மேற்கு கிழக்கு என்ற பகுப்பின் தொடர்பினை அதிக கவனத்துடன் கையாண்டிருக்கிறார். மிகத் தெளிவாக இப்பகுதியை விளக்கியிருப்பது வாசிப்போருக்குச் சிந்து சமவெளி நாகரிகத்தின் நகர அமைப்பின் கட்டுமான வரையறையின் இலக்கணத்தை அறிந்து கொள்ள உதவுகின்றது. சிந்துவெளியை ஒட்டிய இன்றைய பலுச்சிஸ்தானிலும், வடகிழக்கு ஈரானிலும் பேசப்படும் பிராகுயி என்ற திராவிட மொழி பற்றிய செய்தி வியப்பூட்டுகின்றது. இன்றைய இந்திய எல்லையை மட்டும் வைத்து திராவிடப்பண்பாட்டுத் தளத்தை ஆராய்வது உதவாது, திராவிடமொழிக்குடும்பத்தின் பரவலாக்கம் பற்றி அறிந்து

*கொள்வதற்கு இந்த எல்லையைக் கடந்த வகையிலான ஆய்வுகளும், திராவிடப் பண்பாட்டின் கருத்தாக்க வேர்களின் தொடர்ச்சி பற்றி ஆராய வேண்டியதும் அவசியம் என்பதையும் இந்த நூல் வலியுறுத்துகிறது.*

*மேல்-கீழ் என்ற கருதுகோள் எவ்வாறு திராவிட பாரம்பரியத்தில், அதிலும் குறிப்பாகத் தமிழ் நிலப்பரப்பில் தமிழ் மக்களிடையே பண்பாட்டு ஆய்வுகளில் முக்கியத்துவம் பெறுகின்றது என்பதை நூலில் ஆசிரியர் அளித்திருக்கும் பல உதாரணங்களைப் பார்க்கும்போது ஒப்பிட்டு அறிந்து கொள்ள முடிகின்றது. கொற்கை, வஞ்சி, தொண்டி ஆகிய சங்க கால நகர் பெயர்கள் சிந்துவெளி நாகரிகத்திலும் வழக்கில் இருந்தன என்பதை இடப்பெயர் ஆய்வின் வழி நிறுவுகின்றார். தமிழகத்தின் மதுரை, சிவகங்கை, இராமநாதபுரம், தேனி, திண்டுக்கல், விருதுநகர், திருநெல்வேலி, தூத்துக்குடி, கன்னியாகுமரி ஆகிய பகுதிகளில் வழக்கில் உள்ள 97 இடப்பெயர்கள் அப்படியே எந்த மாற்றமுமின்றி சிந்துவெளிப்பண்பாட்டுப் பகுதிகளில் பயன்படுத்தப்படுகின்றன என்ற தகவல் வியப்பூட்டுகின்றது. சிந்துவெளிப்பண்பாட்டில் மட்டுமன்றி பாகிஸ்தானில் 131 இடங்களிலும், ஆப்கானிஸ்தானில் 24 இடங்களிலும் அப்படியே வழக்கில் உள்ளன என்றும் குறிப்பிடுகின்றார். இன்றைய இந்தியாவின் குஜராத். மகாராஷ்டிரா போன்ற மாநிலங்களிலும் 133 இடங்களில் இந்தத் தமிழக இடப்பெயர்கள் பயன்படுத்தப்படுவதையும் சுட்டிக் காட்டுகின்றார். இதற்கு மேலும் வலு சேர்க்கும் வகையில் தமிழகத்தின் வைகை கரையோரம் அடையாளம் காணப்பட்ட 200 சொற்களில் 122 ஊர்ப் பெயர்கள் சிந்து சமவெளி பெயர்களோடு தொடர்புடையனவாக ஒத்துப் போவதையும் சுட்டிக் காட்டுகின்றார்.*

*இடப்பெயர், மேல்-மேற்கு கீழ்-கிழக்கு, கோழிச்சண்டை மரபு என பண்பாட்டுத் தொடர்ச்சிகளை மையப்படுத்தி சிந்துவெளிப் பண்பாட்டின் திராவிடப் பண்பாட்டைக் கட்டமைக்க இந்த நூல் மேற்கொண்டிருக்கும் முயற்சி ஆய்வுலகில் முக்கியத்துவம் பெறுகிறது. ஆயினும், தொடரும் கேள்விகளும் அவற்றிற்கு விடைகாணும் முயற்சிகளும் அவசியம் என்பதையும் நூல் சுட்டிக் காட்டுகின்றது. குறிப்பாகச் சிந்து வெளி மக்கள் என்ன மொழி பேசியிருப்பார்கள் என்ற கேள்வி, சிந்து வெளி பண்பாடு குறித்த ஆய்வில் சங்கத் தமிழ் இலக்கியம் காட்டும் தொடர்ச்சி, கீழடி போன்ற நகரநாகரிக அகழ்வாய்வுச் செய்திகள், தொடர வேண்டிய வைகைக்கரையோர அகழ்வாய்வுப் பணிகள், நீண்ட மரபின் தொடர்ச்சியாய் நாம் இன்றும் காணும் பண்பாட்டுக் கூறுகளை ஆய்வு செய்வது ஆகியன தொடர வேண்டும் என்பதை நூல் வலியுறுத்துகின்றது.*

*இந்த நூலில் ஆர்.பாலகிருஷ்ணன் இஆப அவர்கள் குறிப்பிட்டிருக்கும் இரண்டு கருத்துக்களை இன்றைய வரலாற்று ஆர்வலர்கள் கவனத்தில் கொள்ளவேண்டியது மிக அவசியம் என்பதால் நூலில் இப்பகுதியைக் கீழே வழங்குகின்றேன்.*

> *"...உணர்ச்சியால் உந்தப்பட்ட பேச்சுக்களும், அறிவியல் பூர்வமாக நிறுவ முடியாத கருத்துக்களை முன்வைத்து நம்பகத்தன்மையை இழப்பதும், நிகழ்கால துதிபாடல்களில் நேரத்தைச் செலவிட்டதும் தமிழ்ச்சமூகம் தனக்குத்தானே இழைத்துக் கொண்ட அநீதிகளும், அதன் விளைவாக நேர்ந்த கூட்டுக்காயங்களும் ஆகும்.....*

*மக்களை மையத்தில் வைக்காத வரலாறு  மன்னர்கள் பிறந்த கதை, வளர்ந்த கதை, இறந்த கதை பேசும்.  அரண்மனைகளையும் அந்தப்புறங்களையும் மட்டுமே துருவித் துருவி ஆராய்ந்து களிப்படையும் அல்லது களைப்படையும் நாம் மீட்டெடுக்க வேண்டியது மன்னர்களின் கதை அல்ல. இன்னும் சொல்லப்போனால் வெறும் மண்ணின் கதையைக் கூட அல்ல. அதைவிட முக்கியமாய், மொழியை மூச்சில் ஏந்தி முன் நடந்து, பண்பாட்டுத் தொடர்ச்சியைக் காலத்தை வென்று நிற்கும் நடைமுறையாக்கிய மனிதர்களின் கதையை..."*

*தொடர்பு: முனைவர் க.சுபாஷிணி (ksubashini@gmail.com)*

## 28. சிந்துவெளி கொற்றவை

**— *ஆர்.பாலகிருஷ்ணன், இஆப***



*படைப்பில் தன்னை*
*பார்வையாளனாக மட்டும்*
*ஆண் உணர்ந்து*
*பயந்திருந்த காலம்.*
*வேட்டையாடித்*
*திரிந்தவன்..*
*பிறப்பின் ரகசியம்*
*புரிந்தவன் அல்ல.*
*காட்டில் "இனிஷியல்"*
*வைத்துத் திரிந்தது*
*எந்தப் புலி...?*

*பெண்ணே*
*ஆணையும் பெற்றாள்*
*என்பதில்*
*ஆரம்பித்தது அவன் அச்சம்.*
*மாதக்குருதி*
*அவனை மட்டுமல்ல*
*அவளையும் கூட*
*பயமுறுத்தியது..*
*அது ஒரு மாயம் போல*
*வந்து மறைந்தது.*
*கர்ப்பிணிகளின்*
*பெருத்த வயிறு*
*படைப்பு நிகழ்த்தும்*
*பானையாய்..*
*பனிக்குடம் உடைத்து*
*ரத்தச் சகதியில்*
*விழித்து அழுதது*
*தொப்புள் கொடி தாங்கி*
*இன்னொரு தலை...*
*கொற்றவையாய்*
*கொல்லிப்பாவையாய்*
*அணங்காய் துணங்காய்*
*ஆடித்தீர்த்தாள் அன்னை.*
*சிந்துவெளியில்*
*அவள்*
*எதைத் தொலைத்தாள்*
*கீழடியில் எதை மீட்டாள்?*
*கண்ணகி முலை அறுத்தாள்*
*காரைக்கால்*
*முலை தொலைய*
*வரம் கேட்டாள்.*
*கேரளத்தில்*
*இன்னொருத்தி*
*முலையறுத்துக் கொடுத்தாள்*
*வரித்தொகையாய்.*

இவை.
ஆறும் சினம் அல்ல
என்று
அடிக்கோடிட்ட
ஆறாச் சினம்.
இதோ..
சேரர் பூமியில்
மகளிர் எழுப்பிய
மதிலில்
யுகங்களுக்கான
கேள்விகளும் பதில்களும்..
கொற்றவை சிரித்தாள்
கொல்லிமலையில்...
பால் கொடுத்த புலியின்
பக்கத்தில் நின்று...

## 29. இயற்கையின் இறைவழிபாடு

**— திருத்தம் பொன். சரவணன்**

*வெள்ளை வெண்முகிலே !*
*துள்ளும் மடமயிலே !!*
*கொள்ளை போனதுஎன்*
*உள்ளமுன் அழகினிலே !!!*

*வெண்ணெய் தின்றுவக்கும்*
*கண்ணன் துயிலிருக்கும்*
*பெண்மை தலைக்கொண்ட*
*மென்மை வெண்முகிலே !*

*கருமை நிறங்கொண்ட*
*திருமால் சேர்ந்தானோ?*
*வெண்மை நிறம்போய்நீ*
*கண்மை பூண்டதென்ன?*

*எறியும் மின்னொளியோ(டு)*
*அறையும் இடியெதற்காம்?*
*இறைவன் திருவடிக்கோர்*
*முறைசெய் வழிபாடோ?*

*கண்ணா போற்றியென*
*மண்ணோர் கைகூப்ப*
*அளிந்ததே அக்கார்மலை !!*
*பொழிந்ததே புதுப்பூமழை !!!*

*தொடர்பு: திருத்தம் பொன். சரவணன்*
*vaendhan@gmail.com*
*http://thiruththam.blogspot.com/*

## 30. நடுவுல கொஞ்சம் "கடவுளை"காணோம்

### — ருத்ரா இ.பரமசிவன்

*நீக்கமற நிறைந்திருக்கும்
கடவுள்
நடுவுல கொஞ்சம் காணவே இல்லையே!
எங்கே?
சபரிமலையில் தான்.*

*ஆண்பாதி பெண்பாதியாய்
அந்த அர்த்தநாரீஸ்வரன்
அங்கே அந்த படிகளில்
ஏறிக்கொண்டிருந்தான்.
அவன் போய்த் தான் அங்கே
தரிசனத்தைக் காட்ட வேண்டும்.*

*பக்தர்கள் அவனைத் தடுத்து
நிறுத்தினார்கள்.
"யாரடா நீ! நாடகக்காரனா?
அந்த பெண்வேடத்துக்கு வயது என்ன?
அம்பது வயது தாண்டினாத்தான்
இந்தப்படிகளைத் தாண்ட முடியும்.
பத்து வயதிலிருந்து அம்பது வயது வரை
உள்ள பெண்மைக்கு இங்கே
அனுமதியில்லை."*

*"ஏனுங்க?
அவன் அடக்கமாய்த்தான் கேட்டான்.*

*"இது ஐதிகமில்லையடா.
பிறவியை அறுக்கத்தடையாய்
இருப்பது இந்த பெண்மைத் தன்மையே.
அது மோட்சத்தைத் தடுக்கும்"
சமஸ்கிருத ஸ்லோகங்களைக்கொண்டு
அவன்
நீட்டி முழக்கிக்கொண்டிருந்தான்.
வந்தவனோ
அப்பாவித்தனமாய்க் கேட்டான்.
"அப்படின்னா
ஆண்கள் பிறப்பிக்கும் தன்மை
இற்று விட்டவர்களா?"*

*"என்ன கேள்வி கேட்டாய்?
மூல வித்துகளைப் பொழிபவன்
அல்லவா
ஆண்?"*

*"வித்துவைத்திருப்பவருக்கு அனுமதி
உண்டு.
விளைய வைப்பவருக்கு அனுமதி
இல்லையா?
மோட்சத்தைத் தடுப்பதற்கே காரணமான
விதைகளுக்கு இந்த விளைநிலத்தை
தடுக்கும் உரிமை
எங்கிருந்து வந்தது?"*

*அது கேள்வி அல்ல.
நெற்றிக்கண் திறந்த தீப்பொறிகளின்
பிரளயம்.
அப்புறம் அங்கே எல்லாம்
புகை அடர்ந்த சூனியம்.
பிறகு
எல்லாமே வெறிச்சோடிவிட்டது.*

*எங்கும் நிறைந்த இறைமைக்கு
இடையில் ஒரு
ஒரு சூனியவெளியை
உண்டாக்கிய அந்த
ஐதிகத்துள் இருந்த ஆதிக்கம்
அரக்கனாய் நின்று அங்கே
இடைமறித்தது.*

*அரக்கனை வதம் செய்ய
அவன் சூலாயுதத்தை தேடினான்.
எங்கே அது?*

அவனுக்கு இன்னும் அது கிடைக்கவே
இல்லை.
அவனைப்பற்றிய புராணத்துக்கு
நடுவுல
கொஞ்சம் பக்கத்தைக்காணோம்.

தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் *(ruthraasivan@gmail.com)*

## 31. கஜா, நாத்திகப் புயலா அல்லது ஆத்திகப் புயலா.....

***— சிங்கநெஞ்சம் சம்பந்தம்***




*இந்த கஜா, நாத்திகப் புயலா அல்லது ஆத்திகப் புயலா.....*
*அன்னை வேளாங்கண்ணி ஆலயத்தில் சிலுவைகள் சரிந்தன;*
*இயேசு கிறித்துவின் சிலை சிதிலமடைந்தது..*
*மசூதியின் மினார்கள் முறிந்து விழுந்தன;*
*அம்மன் ஆலயத்தில் ஆற்று வெள்ளம் புகுந்தது*
*இந்த கஜா புயல் ஒரு நாத்திகப் புயலோ.*

*இல்லை இல்லை, இருக்காது*
*இது ஆத்திகப் புயல்தான்.*
*அதனால்தான் இத்தனை அழிவுகள்*
*ஆர்ப்பாட்டங்கள்*
*ஆலயங்களை இடிப்பது*
*நாத்திகர்கள் அல்லவே.*

*தொடர்பு: திரு. சிங்கநெஞ்சம் சம்பந்தம் (singanenjam@gmail.com)*

## 32. அன்பான அய்யப்ப பக்தர்களே!

— ருத்ரா இ.பரமசிவன்

இப்போதெல்லாம்
அந்த பக்தர்களின் இருமுடியில்
இருப்பதெல்லாம்
அந்த நீதிமன்ற தீர்ப்பும்
அதை வைத்து
கேரள ஆட்சிக்கலைப்பும் தானோ
என்ற "ஐயங்கள்" தான்
ஐயன் ஐய்யப்பன் மலை மீது
தவழும் மேகங்களாய்
தோற்றம் தருகின்றன.
ஒரு ஆத்மீக பூமி
என்று மார்தட்டிக்கொள்ளும்
இந்த தேசத்தில்
இப்படியொரு தீர்ப்பு
வரவழைத்திருப்பதிலும்
ஒரு விஷமத்தனமான
சாணக்கியத்தனம் இருந்திருக்குமோ
என்று
அச்சமும் திகிலும்
கொள்ளவேண்டியிருக்கிறது.
தேவதுவேஷமும்
ராஜதுவேஷமும்
சிரச்சேதத்துக்குரிய செயல்கள்
என்ற
"பாசிச யாகம்" வளர்க்க
என்ன தந்திரம் வேண்டுமானாலும்
இங்கே செயல் படுத்தப்படலாம்.

சுதந்திர வேட்கைக்குக் கூட
கபாலமாலை போட்டுக்கொண்டு
கோரப்பல் காட்டும்
காளியை முன் நிறுத்தி
பலி கேட்ட கட்சியினரின்
ஆட்சி அல்லவா இது!
அன்பான அய்யப்ப பக்தர்களே
ஐயப்பன் என்பது
புராணக்கதைகளின்
வெறும் உருவம் அல்ல.
அந்த மகர ஜோதி
தூய நெருப்பு.
ஏதோ ஒரு ரிஷியை
ஏதோ ஒரு நடனக்காரி
ரிக்கார்ட் டான்ஸ் ஆடி
மயக்கிவிட்டாள்
என்ற கட்டுக்கதை

அய்யப்பன் என்ற
பிரபஞ்சப் பிழம்பிடம் பலிக்குமா?
நாம் நம்பும் இறைவனையே
இப்படியா
கொச்சைப்படுத்துவது?
பக்தர்கள் சஞ்சலப்படுவார்கள்
என்ற வாதம் இன்னும் அசிங்கமானது.
லட்சக்கணக்கான பக்தர்களின்
உருண்டு திரண்ட
அந்த "விரதத்தின்"கனபரிமாணம்
வெறும் பஞ்சுமிட்டாயா?
சிந்திப்பீர்.
வசதி வாய்ப்புகள்
மலையேறும் ஆபத்துகள்
என்பதெல்லாம் கூட
வெறும் கதை.

பெண் சக்தி அவதாரம் எடுத்து
இப்போது தான்
அந்த அசுரர் கூட்டங்களை
வதம் செய்த நவராத்திரியை
பத்து நாளாய் கொண்டாடி விட்டு
வந்திருக்கிறீர்கள்.
நினைத்தால் நம்
"சக்தி பாரதத்துக்கு"
மோடி அவர்கள்

*ஒரு மூவாயிரம் நாலாயிரம் கோடிகள்*
*ஒதுக்கலாமே*
*கங்கையை தூய்மைப்படுத்த*
*அத்தனை கோடிகளை*
*அள்ளிக்கொடுத்தது போல.*
*அன்பான அய்யப்ப பக்தர்களே !*
*அந்த இருமுடிகள்*
*வெறி கிளப்பும் காழ்ப்புணர்ச்சிகளின்*
*மூட்டை இல்லை என்று*
*நீங்கள் நிறுவ எண்ணினால்*
*உங்களுடன்*
*இந்த தாய்க்குலங்களையும்*
*அழைத்துச்செல்வதே*
*உங்கள்*
*கடமை கண்ணியம் கட்டுப்பாடு.*

*தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் (ruthraasivan@gmail.com)*

## 33. குருச்சேத்திரப் போரில் !

**— சி. ஜெயபாரதன்**



செக்கு மாடுகளை வாங்கித்
தேரில் மாட்டினேன் !
திக்குத் தெரியாமல்
வட்ட மிட்டுச் சுற்றிச் சுற்றி
வந்தது என் தேர்
கொடை ராட்டினம் போல் !
தலை சுற்றி வீழ்ந்தேன் !

கீதையை உபதேசிக்க
தேரோட்டி கிடைக்க வில்லை !
திணறித் தேடினேன்
மனமுடைந்து !
சினமுற்று விரட்டிய எனது

செக்கு மாடுகளை
எண்ணிக்
கண்ணீர் விடுகிறேன் !

இப்போது செக்கு மாடுகளைப்
பயிற்றுவிக்க
குப்பை வண்டிக் காரனை
நியமித்தேன் !
போருக்குப் போகையில்
துடித்தேன் !
நேராகப் போனது
தேரானது,
நின்று நின்று !

தொடர்பு: சி. ஜெயபாரதன் *(jayabarathans@gmail.com)*

## 34. கைப்பேசியும் களவுபோன நாட்களும்..

— *வித்யாசாகர்*



*நாட்களைக் கைப்பேசிக்குள் தொலைக்குமொரு*
*ஆபத்தான கணப்பொழுது,*
*எழுதாத கடிதங்களைப்போல சிந்தாதக் கண்ணீரும்*
*இரத்தநெடியோடு நிரம்பிக்கிடக்கும்*
*வலிநிறைந்த மனசெனக்கு,*

*மருத்துவர்கள் கொலஸ்ட்ரால் சுகர்*
*பிரஷர் விட்டமின்-டி ஆயா தாத்தா பாட்டி என்றெல்லாம்*
*மலிவு சொற்களோடும் மயக்க ஊசியினோடும்*
*திரிந்து கொண்டிருக்க, நான் அங்கிருந்து நகர்ந்து*
*பின்னறையை நோக்கி நடக்கிறேன்,*

*இரத்த சகதியில்*
*கசங்கிய மலர்போன்றோரு மகனை*
*ஊர் பேர் தெரியாத சிலர் தூக்கிவந்து*
*மருத்துவமனையில் சேர்க்கிறார்கள்,*

*ஒரு வரலாறு எழுதுமளவு கேள்விகள் பல*
*கேட்டுமுடிய*

பெரிய மருத்துவர் ஒருவர் ஓடிவந்து
இன்சூரன்ஸ் பற்றியும்,
அவன் வேலைப்பார்க்கும் நிறுவனம், சம்பளம்
பற்றியெல்லாமும் கேட்டுக்கொண்டு
அவசர சிகிச்சை அறைக்குள் அவனைக்
கொண்டுசெல்ல ஆணையிடுகிறார்.,

திடுமென அவருடைய கைப்பேசி கத்த
அதை எடுத்துக்கொண்டு
செவிலிப்பெண்ணொருத்தி ஓடிவருகிறாள்..

கைப்பேசியில் அலறிக்கொண்டிருந்த மனைவி
மருத்துவரிடம் என்னங்க நம்ம பையன்
போன்பேசிட்டேப் போய் லாரியில் மோதிட்டானாம்
என்கிறாள்,

மருத்துவருக்கு ஏதோ சட்டையின்
நிறம் பார்த்த நினைவு சடாரென வந்து
கவனத்தில் அறைய
பதறியடித்துக் கொண்டு
அவசரசிகிச்சை அறைக்குள் ஓடுகிறார்..

அவருக்கு
மூடியிருந்த வெள்ளைத்துணியை யகற்றி
யாரென்று முகம் திருப்பிப் பார்ப்பதற்குள்
கை காலெல்லாம் படபடவென நடுங்கிற்று
தடதடவென உடம்பு ஆடியது
மூச்சு முட்டி மயக்கம் வருவது போலிருந்தது

கைப்பேசிக்குள் மனைவி கதறும்
சப்தம் கேட்டுக்கொண்டேயிருந்தது..

தொடர்பு: வித்யாசாகர் (vidhyasagar1976@gmail.com)

## 35. ஓட்டு

**— ருத்ரா இ.பரமசிவன்**

*உன் நிறம் என்ன?*
*உன் திறம் என்ன?*
*அதர்மத்தை வெட்டும்போது*
*நீ*
*கூர்மழுங்கிப் போகிறாய்.*
*தர்மத்தை நிலை நாட்ட*
*வந்தேன் என்கிறாய்.*
*நிலை தடுமாறி நிற்கிறாய்.*
*நீதியை நிறுவ*
*வந்தேன் என்கிறாய்.*
*பார்.*
*இங்கே தராசு தட்டுகளே*
*களவு போய்விட்டனவே.*
*யானையை*
*தடவிப்பார்த்தவர்களைப் போலவே*
*நாங்களும் உன்னைத்*
*தடவிப்பார்த்துக்கொண்டிருக்கிறோம்.*

*உன் முகம் எங்கே?*
*உன் கண்கள் எங்கே?*
*எங்கள் விழியின்றி*
*உந்தன் விழி தேடுகிறோம்.*
*நீ தட்டுப்படுவாய் என்று*
*கைகளை*
*காற்றில் அளைகின்றோம்.*
*நீ கனவா? இல்லை நனவா?*
*தெரியவில்லை.*
*இருந்தாலும்*
*போடுகிறோம்.போடுகிறோம்.*
*உன்னைப் போட்டுக்கொண்டே இருக்கிறோம்.*
*போட்டுப் போட்டுக்*
*குவித்துக்கொண்டேயிருக்கிறோம்.*
*ஏன்? எதற்கு? எங்கே? எனும்*
*கேள்விகளே இங்கு மிச்சம்.*

*தொடர்பு: ருத்ரா இ.பரமசிவன் (ruthraasivan@gmail.com)*

# தமிழ் மரபு அறக்கட்டளை நிகழ்வுகள் மற்றும் வெளியீடுகள்

***தமிழ் மரபு அறக்கட்டளையின் செய்திகள்***
***http://thf-news.tamilheritage.org/***

---

***மண்ணின் குரல் - மரபுக் காணொளிகள் வெளியீடு:***
*https://www.youtube.com/channel/UCbPUhkB63Rooe7RQ94kGWag/playlists*

***அக்டோபர் 2018:***
*தமிழர் மரபு விளையாட்டுக்கள் மீள் அறிமுகம்-10/21/18*
*@YouTube: THF- Channel: https://youtu.be/F12F6LyL9HE*

*மண்ணின் குரல்: மாரியம்மன் பாடல்கள்-10/23/18*
*@YouTube: THF- Channel: https://youtu.be/CbE9XSa68EE*

*மண்ணின் குரல்: தாலாட்டுப் பாடல்-10/24/18*
*@YouTube: THF- Channel: https://youtu.be/dJnqBUbjyXs*

***நவம்பர் 2018:***
*கந்தரோடை, ஸ்ரீலங்கா - புராதன பௌத்த சின்னங்கள்-11/1/18*
*@YouTube: THF- Channel: https://youtu.be/HLtyM2p6G_Q*

*யாழ்ப்பாணம் திருமறை கலாமன்றம்-11/2/18*
*@YouTube: THF- Channel: https://youtu.be/gVJKWY9Qh0o*

***டிசம்பர் 2018:***
*மெட்ராஸ் நம்ம மெட்ராஸ் - புனித ஜார்ஜ் கோட்டையின் கதை-12/1/18*
*@YouTube: THF- Channel: https://youtu.be/iBFgE-CPrgw*

*மறைந்து வரும் தமிழர் கலை - தோல்பாவை கூத்து-12/16/18*
*@YouTube: THF- Channel: https://youtu.be/7RWy9M70B2g*

*தமிழக தொல்லியல் துறை அகழ்வாய்வுப் பணிகள் குறித்து கி. ஸ்ரீதரன்-12/18/18*
*@YouTube: THF- Channel: https://youtu.be/-vJf1-kv-mE*

*ஒரு தோல்பாவை கூத்துக் கலைஞரின் வாழ்க்கை-12/22/18*
*@YouTube: THF- Channel: https://youtu.be/XmqcsZ9BiNo*

*ஜெர்மானிய தமிழியலின் தொடக்கம் - ஓலைச்சுவடிகள்-12/25/18*
*@YouTube: THF- Channel: https://youtu.be/OJ5P04UmiSE*

*நடமாடும் கண்காட்சிக் கூடம் -திரு.வீரராகவன் சேகரிப்புக்கள்-12/29/18*
*@YouTube: THF- Channel: https://youtu.be/4KpEI-iPxAM*

*தமிழக தொல்லியல் ஆய்வாளர் முனைவர்.நடன காசிநாதன்-12/30/18*
*@YouTube: THF- Channel: https://youtu.be/FPzNopns0Y8*

***ஜனவரி 2019:***
*திருவள்ளுவர் மற்றும் வீரராகுல பௌத்த விகார்-01/12/2019*
*@YouTube: THF- Channel: https://youtu.be/OvMov4BqPYk*

## ***தமிழ் மரபு அறக்கட்டளை மின்னூல் வெளியீடு:***
*இலங்கையிலிருந்து தாயகம் திரும்புகின்றவர்களுக்கு ஒரு வழிகாட்டி-14/1/2019*
*http://www.tamilheritage.org/old/text/ebook/THF_Lankatravelguide.pdf*

## ***தமிழ் மரபு அறக்கட்டளை செயலி வெளியீடு:***
*ஆண்ட்ரோய்ட் கைப்பேசிக்கான "தமிழ் மரபு அறக்கட்டளை" செயலி-1/1/-2019*
*https://play.google.com/store/apps/details?id=com.thf.thfbase*

## ***தமிழ் மரபு அறக்கட்டளை புதிய வலைப்பக்கங்கள் வெளியீடு:***
*தமிழர் பாரம்பரிய விளையாட்டுக்கள் -*
*http://thfcms.tamilheritage.org/category/games/*

*இலங்கை தமிழ் மரபுகள் -*
*http://www.srilanka.tamilheritage.org/*

தமிழ் மரபு அறக்கட்டளை
Tamil Heritage Foundation
THF
தமிழர் வரலாற்றுக்கு ஓர் அரண்




Electronic Preservation of Tamil Heritage Materials
e-BOOK Series

an international NGO initiative to digitize
old Tamil Books and Palm Leaf Manuscripts
visit: http://www.tamilheritage.org/

தமிழ் ஓலைச்சுவடிகள், நூல் பாதுகாப்பு

பாதுகாப்பற்ற நிலையில், மறுபதிப்பு காணாத பழைய நூல்கள், ஓலைச்சுவடிகள் போன்ற தமிழ் முதுசொம்களை மின்பதிப்பாக்கி தமிழ் வளத்தை நிரந்தரமாக்கும் ஒரு சர்வதேச தன்னார்வ முயற்சி
மேலும் அறிய: http://www.tamilheritage.org/




முதுசொம் முத்திரை
தமிழ்ப்பாதுகாப்பின் அக்கறை

# மின்தமிழ் மேடை




## "இலங்கையில் தமிழ் மரபு அறக்கட்டளை"

தமிழ் மரபு அறக்கட்டளை (www.tamilheritage.org)
வெளியிடும் காலாண்டு மின்னிதழ்
மின்தமிழ்மேடை - காட்சி: 16
ஜனவரி — 2019




16